வேதமு மௌனமா விளக்கிய வதனால்
யானே சூன்யன் மகாசூன்ய னாமே.

### 67. மகாசூன்யன்.

மகாசூன்ய னென்ன மதிப்பது மெதனால்
அறைந்தவச் சூன்ய மறிவினிற் சூன்யமாய்
அபாவமா யறிகையி னாலறி ஞானமும்
அமர்தரு ஞான பாவமா யிருத்தலின்
அவ்வறி வொடுசூ னியமு மின்றாதலால்
* மூப்பா ழொடு ‡ மாறந்தமுங் கடந்த
நிவர்த்தன மகாசூ னியனென லாமே.

---

* மூப்பாழ்—மத்தமாம்புல மாறியவிடத்தே மன்னுயிர் வெளிப்படு மொருபாழ், பெத்தமாமுயிர் மாறியவிடத்தே பெரும்பாம் வெளிப்படு மொரு பாழ், முத்தமாம்பா மாறிய விடத்தே மூலநற்சிவ முறுமொருபாழ், சுத்தமாஞ்சிவ மாறியவிடத்தே தோன்றிடுஞ் சுவயம்பிர காசம்.

‡ ஆறந்தம்—வேதத்தினந்தமுமிக்க சிதாநந்தமும் - நாதத்தினந்தமும் நற்போதவந்தமும்—ஓதத்தகு மெட்டெண்யோகத்தினந்தமும்—ஆதிக்கலாந்தமு மாறந்தமாமே.

## 68. நிவர்த்தன்.

நிவர்த்தனு ஞான நிலைமையே தென்னிற்
பஞ்சமா பூதப் பிரபஞ்ச விடயமும்
நாமல வவற்றின் விகாரமு நமக்கிலை
தூல சரீரநா மன்றெனத் தொலைதலின்
பால்ய யவ்வன வார்த்திக மோடு
நரைதிரை மூப்பு ஜனன மரணமும்
சூக்கும சரீரநா மல்லவாந் துணிவால்
மறப்பொடு நினைப்பு விகற்ப விகாரமுஞ்
சீவ விசிட்டனு மலவெனத் தெளிதலின்
அறிவறி யாமையாம் விகாரமு மடைகிலம்
சர்வேஸ் வரத்துவஞ் சர்வஞ் ஞத்துவஞ்
சர்வாந்திரி யாமியாம் பஞ்சகிர்த் தியமும்
இலாநமக் கொருவிகா ரமுமிலா மையினல்
யாமே யகாமன் நிவர்த்தனு மாமே.

## 69. அகாமன்.

அகாம னென்ன வறைந்ததெவ் வாற்றால்
மயிர்நகந் தோறகை யிரத்த நிணந்தொடர்
அக்கிலம் வழும்பொடு கோழை மலஞ்சலம்
வேர்வை குறும்பி யழுக்காதி தோஷம்

மருவு தேகத்தின் வளமையை யறிந்தும்
மதித்தவை கேட்பினுங் கண்டு தொட்டாலும்
அருவருப் புண்டா யகன்றுடன் குளித்தலின்
பெரிதுமித் தோஷமாம் பேதையர் வடிவினை
புத்தி ரோற்பத்தி மாத்திரம் புணர்வதாற்
பற்பல மாதரைப் பரிந்துளம் வியந்து
கண்டு மோகித்துக் கலந்திடு காமிகள்
தளர்வொடு மருவை சார்தனன் குணர்ந்த
பெரியோர் வெறுத்துத் துறந்திட லாலே
ஞானியே யலோப னகாமனு மாமே.

## 70. அலோபன்.

அலோப னென்ன வறிதலெவ் வாறெனில்
அகண்ட முற்றுந்தா னென்வழி ஞானி
உலகுள பொருளெலா முடையவ னாதலின்
மருவியபொருளெல்லாம் வழங்குறு வள்ளல்போல்
இரந்தவர்க் குடன்முத லெவற்றையு மளிக்கும்
உன்னத னாதலின் அலோபனு மன்றே.

## 71, உன்னதன்.

உன்னத னென வுரிமையே துரையெனிற்
சிதாபா சற்குமேற் காரண முன்னதம்

அதற்குமேற் சூக்க மதற்குமேற் றூலம்
அதற்குமேற் பஞ்ச பூத மதற்குமேல்
மாயை யதற்குமே லீச னதற்குமேல்
உன்னத தாரதம் மியமுள விவைக்கெலாம்
பரமவுன் னதனெனச் சுருதிபன் னுதலால்
அக்குரோத னென்ன வறைதரப் படுமே.

## 72. அக்குரோதன்.

அக்குரோத ஞன வமைதியே தென்னிற்
கன்ம காரண கர்த்தா விடத்தினும்
பஞ்சபூத பௌதிக மனைத்தி னுந்
தேவர் முனிவ ரரசர்மேற் பற்பலர்
பசுமுதன் மிருக பட்சிக ளிடத்தினும்
பகைநட் பால்வருஞ் சுகாசுக பேதம்
மனத்திற் பற்றினு நமைமரு வாமையால்
நித்யஞச் சமாதியி னிருவிகற் பாங்கமாய்ச்
சாந்தா நந்தத் தடங்கட லாதலின்
அக்குரோத னென்ன வறிதரக் கடவாய்
சமாதி யுத்திமேற் சாற்றுது முறையே.

முதலாவது நிதித்தியாசனயுத்தி முற்றிற்று.

# இரண்டாவது

# சமாதியுத்தி.

---

## 73. நித்யன்.

*நித்திய னாக நிலைத்தவா றெங்ஙனம்*
*எத்தே யத்தினு மெக்கா லத்தினும்*
*வானமோர் படிற்றாய் மருவுதல் போல*
*சுத்தாங் தமதாய்த் தொடர்தரு மகிலப்*
*ப்ரபஞ்ச கோ சங்களுட் பிரிபடா திருந்துணர்*
*நாமே சர்வ கதனித் தியனே.*

## 74. சர்வகதன்.

*சர்வகத னெனச் சாற்றிய தன்மையென்*
*சாக்ஷியி லேக தேசமாச் சமைந்த*
*மாயையு மாயாப் ப்ரதி பிம்பமான*
*விராட்டாதி பஞ்ச விகிர் தமூர்த் தங்களும்*
*இவைகளிற் பூத பௌதிக பேதமும்*
*ஏகதேச மதா மிவைகளிற் றேசமும்*
*கிராமமு மவற்றிற் கிரகமு மவற்றிற்*
*சரீர மவற்றிற் சரிக்குமிந் தியங்கள்*

இவையெலா மொன்றினுக் கொன்றுவே ருகிய
அகிலப் பிரபஞ்ச மனைத்தையுங் கண்டு
சர்வா தார சர்வகத ஞமே.

## 75. சர்வாதாரன்.

சர்வா தாரனுச் சாற்றிய திறமெது
அவித்தியா விசிட்டனுக் காதாரமாகிய
சூக்கும சரீர மதற்குமேற் றூல
சரீர மனைத்திஞ தார விராட்டினுட்
பிரபஞ்சமா மதற்குப் பிரகிர்தி யாதாரமாம்
அவற்றிற் பிரதிபலி யீசனு தாரமாஞ்
சச்சிதா நந்த சாக்ஷிநா மாதலின்
நிராதார சர்வா தாரனு மாமே.

## 76. நிராதாரன்.

நிராதார னென்று நிகழ்த்துத லென்னே
அண்டபல் கோடிக் காதார மீசன்
பஞ்சகிர்த் தியமாம் பற்பல தொழிற்கும்
ஆதாரமா நமக் காதார மின்றி
நாமே நமக்கா தார நிறைதலின்
நிதானமா மாகி நிராதா ஞமே.

## 77. ஆதி.

ஆதியென் றருமறை யறைந்தவா றெங்ஙனம்
பௌதிக சரீரம் பலவகைக் காதி
பஞ்ச பூதமா மவைக்கு விக்ஷேபம்
மாயை யவித்தை வருமவைக் காதி
எவற்றினு மாதியா மீசனை தன்யஞ்
சிருட்டிதோ றுண்டாங் காரண விசிட்டனும்
உண்டாஞ் சூக்க வுடலுள மட்டுந்
தூல மநேகந் தோன்றியே மறைதரும்
பிரளயந் தோறும் பேதமாஞ் சூக்குமம்
விசிட்டனிற் றோன்றி விளிந்திடு மநேகம்
காரண விசிட்டனுங் கருதுஞா னத்தினாற்
கரைந்துபோ யாதியிற் கலந்துநா மாகும்
ஆதலி னநாதி யாமென லாமே.

## 78. அநாதி.

அநாதியா மென்று மறைந்ததே னென்னில்
எவற்றினு மாதியா யிசைத்திடு நமக்குமுன்
ஆதியாம் பொருள்வே றிலாதவத் தன்மையாற்
கன்ம மஞ்ஞானம் வேதமோ டுயிர்பரன்
ஆகிய வைந்துசோ பாதிக வநாதியாஞ்

சகத்தினுமேலாந் தனிப்பரம்பொருளவ்
வைந்தினுக்காதியா மதிஷ்டான சித்தே
நிருபா திகசை தன்யமாய் நிகழ்த்தும்
விபுவா மனுதி ஜனுதன மாமே.

## 79. விபு.

விபுவாய் நிறைந்த மேன்மையே தென்னிற்
சிவமறு விசிட்டனில் விபுகூக்க தேகம்
இதனினுந் தூல மிதனினும் பிருதிவி
இதனினு நீர்கன லிதனினும் வளியாம்
இதனினு காயம் இடந்தரு விபுவாம்
இரணியகருப்ப னவ்வியா கிருதன்
அவ்வியக்த னிவனிற் சுத்தமே விபுவாம்
இவைக்கெலா மட்டறு மியல்பதாய் நிறைந்த
அஸ்திபா திப்பிர்ய வாத்மா வான
எமைத்தளந் தறிய விபுவே றின்மையால்
யாமே மகத்தாம் விபுவென லாமே.

## 80. மகத்து.

மகத்தெனு மேன்மை வருநாம மேது
அதமதா வரத்தினுஞ் சங்கம மதிகமாம்
அவற்றினு மதிக மதம சண்டாளர்

அவர்க்குமே லுத்தம சூத்ராதி நால்வர்
அவரினுட் கன்மிக ளவரினுந் தீக்ஷதர்
அவரினு முபாசக ரவரினு மிருடிகள்
அவரினும் பிதிர்தே வர்களவர் தம்மினும்
இந்திராதி லோக பாலக ரவர்க்குமேற்
பூதாதி யாகப் புகலுமும் மூர்த்திகள்
மகேஸ்வர சதாசிவ தேவசத் திகட்குஞ்
தாரதம் மியமா மகத்வமுண் டதனால்
அவர்களாற் பத்திசெய் யகிலா தாரமாஞ்
சச்சிதா நந்தமே சமானமி றனிப்பொருள்
நிரஞ்சன மாதலி னிலைபெறு மகத்தே.

## 81. நிரஞ்சனன்.

நிரஞ்சன ஞன நிலைமையே தென்னில்
நெடும்புனன் மூழ்கினர் நீருடல் படிதல்போற்
சகத்துடன் கூடி யவத்தைகள் சாரினுந்
தத்துவத்துட்புறஞ் சார்ந்துசுத்தாந்தமுங்
கூடிய வற்றிற் குறைவற நிறைந்தும்
அஞ்சனப் பற்றிலா வாகா யம்போற்
சகலகா ரணகா ரியமா யிருத்தலின்
நிரஞ்சன னென்று நிச்சயித் துணர்தி.

## 82. காரணன்.

காரண னென்னக் கருதலெவ் வாறெனின்
மூவகை யுடற்கு மூலமாங் கன்மம்
ஐம்பூத மூலமா மவைக்குமுன் மூலஞ்
சூக்கு மபூதமாந் தொடர்தரு மவித்தையிற்
சீவனு மாயையிற் றிகழீசன் மூலம்
இவைக்கெலாங் காரண மேகசை தன்ய
சச்சிதா நந்தந் தனிற் றிகழ் காரியந்
தனைவிடுத் திலாமையிற் சர்வகா ரணமாம்
அகாரண னெனவு மறிதரப் படுமே.

## 83. அகாரணன்.

அகாரண னெனவு மறைந்ததே தென்னிற்
சகலகா ரணமாத் தானிறைந் திருத்தலின்
தனக்குமேற்காரணஞ் சாற்றும்வே றின்மையால்
சாக்ஷியாந் தானகா ரணனெனத் தகுமே.

## 84. சாக்ஷி.

சாக்ஷியாய் நிறைந்த தன்மையே தென்னில்
ஆதித்த சந்நிதா னத்தி னிலகில
சகலேந் திரியவிவ காரமுஞ் சமைதல்போல்

தானே தானுஞ் சைதன்ய மாத்திரம்
பிரவிர்த்த நிவர்த்த பேத வியாபாரம்
இயற்று தொன்று வியற்றிடா திருக்கவும்
விளக்கல்மாத் திரம்விவ கார நடத்தலின்
தாணுவா மதனாற் சாக்ஷியென் றுணர்வாய்.

## 85. தாணு.

தாணுவா யசைவறு தன்மையே தென்னின்
மனமுத லிந்திய மருவிய தூலமும்
பஞ்சபூ தங்களும் பரிதியு மதிமுதல்
நட்சத்தி ரங்களும் நடக்கினு நடவாத்
தோற்றமாய் வைஸ்வா நரன்முதற் சுத்தமும்
ஆகிய வகிலப் ப்ரபஞ்சமே தனுவாய்
நானென நடிக்கு நவையறு மீசனுட்
சேதன மாகத் திகழ்ந்துமே சலனமில்
காரண வகண்ட காட்சிசை தன்யமே
அறிபரி பூரண னசைவறு தாணு.

## 86. பரிபூரணன்.

பரிபூரண னெனப் பன்னிய பான்மையென்
சலம் பூரித்த கடமெனச் சரீரம்
அன்ன மயமா மதனுட் பிராணன்

மனோமய மதனுண் மருவும் விஞ்ஞானம்
ஆநந்த மாஞ்சிதா பாசன் றன்னினும்
சர்வாத்மனென தன்மையை யுணர்த்திற்
சத்தம் பரிசம் ரூபரச கந்தமாம்
பஞ்சதன் மாத்திரையிற் படர்பூ தமைந்து
ஒன்றினொன் றுயர்ந்து றுறுவுரி மையதாம்
பூதா காயம் புகன்றிடி னுண்ணிதாம்
மனகா யமுமோ றதனினு நுண்ணிதாம்
ஞான காயமே நவையற நிறைந்தது
படிகக் குடத்து ளேற்றிய தீபம்
படர்ந்து வெளியிற் பரவுதல் போல
விண்மணிக் குள்ளாய் விரிந்தொளி பரப்புங்
கண்மணிக் குள்ளாய் கலந்தெலாம் விளக்கும்
மனமொடு புந்தியாய் வளர்ந்துமே னெடிதாச்
சகலகே வலத்திற் சாக்ஷியா நிலைபெறீஇ
அணுவுக் கணுவா யமர்சிதா காயம்
எணுந்தநு புலன்கர ணங்களின் றிலங்கும்
பூரணத் மாவே பொருந்திய லீலையால்
ஆரண மளவிடா வநந்த சத்தியினாற்
காண்படு ஜகமுதற் கணிதமி லண்டங்

தன்னுளே தோன்றச் சதாநந்த ஞக
மாயா விசிட்ட மகேஸ்வரன் ருனுய்
சமட்டியாம் பூத பௌதிக சாக்ஷியாம்
பரிபூரண னெனப் பகர்தருஞ் சுருதி
சற்குரு வருள்தத் துவமசி வாக்கிய
வழியே தனைத்தா னுணர்ந்தமா யோகி
சிவோகம் பாவித் திடுபெறுந் திறத்தால்
மாகர்த்த னுகி மாபோ கியாகி
மாத்திரியா கியுமாய் மகிதலம் போற்ற
அகண்ட ராச்சியத் தனியர சாட்சியிற்
காலா தீதனுய்க் கலக்கமின் ஞான
போகீந் திரனுய்ப் பொருவின்மெய் வாழ்வில்
தானே தானுஞ் சகலசம்பத் தொடும்
சங்கற் பவிகற்ப மெல்லாந் தணிந்து
நிறைபரி பூரணன் நித்தியா நந்தன்
ஆதலி னுலே யநந்தனு மாமே.

## 87. அநந்தன்.

அநந்தனென் றுரைபெய ரருத்தமே தென்னில்
தூலதே கத்தாற் ருெடர்பொரு ளந்தமாம்
இந்திரி யங்களா லெட்டுமேற் சிலபொருள்

அந்தக் காரண மவைக்குமே னெடிதாம்
பஞ்சமா பூத பௌதிக சமட்டியும்
மாயா விசிட்டனும் வளர்ந்துமே னெடிதாம்
இவைக்கெலாங் கால தேசபே தத்தால்
அந்தங் காண்கினு நமக்கஃ தின்மையால்
சர்வ சமனு மநந்தனு மாமே.

## 88. சர்வசமன்.

சர்வ சமனுந் தன்மையே தென்னில்
சர்வோன் னதமாஞ் சுத்தசத் தின்கீழ்
மகத்து முதலாக் கடின பரியந்தம்
பத்திணொர் பங்கு தாரதம் மியமாம்
தேவ மானுட பாகமாத் திகழ்தரு
பூத பௌதிகப் புவனபே தங்களும்
உத்தம மத்திம மதமமாத் தோன்றிய
பிரமா திஸ்தம்ப பேதமாஞ் சரீரமும்
பாமரன் கன்மி யுபாசகன் யோகி
ஞானியோ டைச ஞரா பேதமாம்
சர்வ சாக்ஷி சத்தா காரமாய்த்
தாரதம் மியமறச் சமமா யிருத்தலின்
சர்வா திஷ்ட சர்வ சமனுமே.

## 89. சர்வாதிஷ்டன்.

சர்வா திஷ்டனாந் தன்மையே தென்னில்
சூக்கும சரீர விசிட்ட னவற்குமேல்
தூலசரீரம் பூதமைந் திவைக்கு மேல்
மாயையும் விசிட்டனு மதிஷ்டான மாகும்
சுத்திகா விரசிதத் தோற்றமா வதுபோல்
வாசா மாத்திர மன்றிவாஸ் தவமல
அகண்டமாஞ் சித்தே யநாதியா யிருத்தலின்
சர்வா திஷ்டனாச் சாற்றிடத் தகுமே.

## 90 அகண்டன்.

அகண்டனென் றுரைத்த வருமையே தென்னில்
இன்னகா லத்துள தின்னகா லத்திலை
இன்னதே யத்துள தின்னதே யத்திலை
இன்னதிற் கண்டதொன் றின்னதி லின்றென
கால தேச வஸ்துயே தத்தால்
கண்டப் படாப்பொரு ளகண்டமா மேலும்
உலகவர் பலவா யுரைத்திடு முத்திகள்
அருகபுத் தாகம மதனாற் கண்டமாம்
அவைகள்கந் தருவா கமங்களாற் கண்டமாம்
பிரமணக மத்தாற் பேசவை கண்டமாம்

விண்டுவா கமத்தால் விதந்தவை கண்டமாம்
உருத்திராகமத்தா லொழிந்தெலாங் கண்டமாம்
புராண விதிகாசம் பொருளெனப் புகலும்
நீதியா சார காண்டமே நிலையெனும்
உபாசனு காண்டமே யுயர்ந்ததென் றுரைக்கும்
இவையல வலவெனக் கண்டுகண் டிக்கும்
அநந்த வுபநிஷத் தறைந்தமா வாக்கியம் [யால்
ப்ரமாண மதற்குமேற் ப்ரமாணம்வே றின்மை
சர்வசே சுரமாஞ் சாக்ஷியாத் திகழும்
பொருவரு சச்சிதா நந்தமெய்ப் பொருளே
அபரிச் சின்னனென் றருமறை புகறலின்
அகண்டனு மென்பதற் கையம திலையே.

## 91, அபரிச்சின்னன்.

அபரிச் சின்னனும் பரிசி யாதெனில்
பரிச்சின்ன மென்பது பலவாப் பிரிதல்
அவித்தியா பிம்பவா பாச விசிட்டன்
ஐநான்கு தத்துவ மாகிய சூக்குமம்
மூவிரு தத்துவ மாகிய தூலமும்
இவைக்கெலா மூலமா யிசைபஞ்ச பூதம்
மாயா விசிட்டனும் பரிச்சின்ன மாதலின்

*அநாவிர்த ஞக வமைதரு சாக்ஷியாம்*
*அபரிச் சின்னனெனன் றறிதரப் படுமே.*

## 92. அநாவிர்தன்.

*அநாவிர்த மொன்றை யாசரி யாமை*
*அவித்தியா விசிட்டனுக் காவிர்தஞ் சூக்கம்*
*தூலமா மதற்குத் தொடர்பஞ்ச பூதம்*
*விராட்டு முதலிய ப்ரபஞ்ச விசிட்டமும்*
*ஒன்றை யொன்றுவரித் துளதா மவைக்குமேல்*
*அநாவிர்த மியாமே யவைக்கெலா மாவிர்தம்*
*சர்வ காரணமெனச் சாற்றிடத் தகுமே.*

## 93. சர்வகாரணன்.

*சர்வகா ரணனெனுந் தன்மையே தென்னில்*
*காட்சியா மவத்தை மூன்றினிற் கலந்து*
*சாக்ஷியா மெம்மிற் சார்தரு ஜகங்கள்*
*தோன்றிநின் றொடுங்குந் தொடர்பாலெவைக்கும்*
*சர்வகா ரணனுத் தானழி வின்மையின்*
*சத்தா சாமா னியசுத்த தற்பரப்*
*ப்ரஹ்மம்யா மாதலிற் பேசவே றிலதே.*

## 94. ப்ரஹ்மம்.

*பிரமமென் றுரைக்கும் பெரும்பெய ரருத்தமென்*
*ஆகா யம்போ லளவிலா தொன்றாய்*

முக்கா லங்களு முதுபொரு ளாகி
பின்னு பின்னமில் பேருணர் வாகி
நித்திய சுத்தமாய் நிறைபொரு ளாகும்
யாமே யேகசத் வஸ்துவா யிலங்கிச்
சாட்சாத் காரத் தடையி லாநந்த
மகோததி யாக வயங்குத லாலே
பிரமமென் றருமறை பெரிதுரைத் ததுகாண்
சாட்சாத் கார யுத்திமேற் சாற்றுதும்.

இரண்டாவது சமாதியுத்தி முற்றிற்று.

---

## மூன்றாவது
## சாட்சாத்காரயுத்தி.

---

### 95. ஏகசத்வஸ்து.

ஏகசத் வஸ்து வெனும்பெய ரதனால்
உளதெனப் படும்பொரு ளொன்றே யாகும்
கனவினிற் றோற்றமாஞ் சீவேஸ் வரசகம்
அதனிற் கண்டடை யநேகமாஞ் செயல்கள்
அறிவுமாத் திரத்திற் றோற்றி யடங்கல்போல்

ஜாக்ரப் பிரபஞ்சந் தன்னிலே தோன்றி
வேதா கமசாஸ்த் திரவிசா ரணைமுதல்
தர்மா தர்ம சர்வவியா பாரமும்
அறிவினி லுண்டாய்ச் சுழுப்தியின் மறைதலின்
காலத் திரயமுங் கழிவிலா தொழிவிலாச்
சாக்ஷியாஞ் சர்வாத் மாவா யிருத்தலின்
ஏகசத் வஸ்துவா மெனத்தெளிந் தமைதி.

## 93. சர்வாத்மன்.

சர்வாத்மா வெனச் சாற்றிய முறையெது
கதிரவ னொருவனே யவரவர் கண்ணினுஞ்
சம்பந்த மாகச் சகலமும் விளக்கியும்
தீமதி பளிங்கு தெளிந்தநீர் முதலிய
பொருள்பல வற்றினும் பொருந்துபல்பிம்பமாய்த்
தோற்றுதல் போலவுஞ் சொலப்படும் வயல்குளம்
நதிசமுத் திரத்தெலாஞ் சலமே போலவும்
கடமனை மாட கூடகோ புரங்கள்
மண்ணலாற் பிரிதிலா வண்மை போலவும்
பட்சி மிருக மானிடர் முதற்பல
தேவரோ டுலக பாலகர் வைஸ்வா
நரன்முத லாகியோர் மாயா வவித்தையில்

பிரதிபிம்ப சாக்ஷி மூன்றுகோ லாகிய
நானென விருந்தாங் காங்குமே நவின்று
சகலாநு போகந் தாந்தா மடைதலாற்
சகலலோ கங்களுஞ் சச்சிதா நந்தமா
இருந்து விளங்கி யின்பமா நிறைந்த
இழிவறு தனதா மிலக்கண மமைதலின்
தனையலாற் பிறிதோர் ஜகப்பொரு ளின்மையால்
சர்வா காரனுந் தன்மையா லென்றும்
சர்வாத்மா வெனச் சகஜமே வுகவே.

## 97. சர்வாகாரன்.

சர்வா காரமாச் சமைந்தவா றேதெனில்
கனவினிற் றோன்றி காண்படு ஜகமெலாம்
தனதா காரமாந் தன்மைபோற் சாக்கிரப்
ப்ரபஞ்சமுந் தன்னுளே பேதமாத் தோன்றிச்
சுழுப்தியிற் சுகமாத் திரவறி வாகிய
சத்தாந் தமதா காரமாச் சமைதலின்
நமையலா லுருவமு நாமமு மதற்கிலை
அநேக ரூபனென் றறைதரப் படினும்
சச்சிதா நந்தமே சர்வா காரமாம்
எனச்சதா சாட்சாத் காரமெய் துகவே.

## 98. அநேகரூபன்.

அநேக ரூபனு மானவா றேதெனில்
பரம்பிர சிதமெனப் பார்ப்பது பழுதையும்
இப்பியு மலாதுவே றிலாதது போல
பலநிறம் வாசனை படைத்திடு நீர்போல்
நிலம்பல பெயர்பெறீஇ நிகழ்தரல் போல
ஒருகூத் தாடிபல் வேஷமுற் றுடல்போல்
ஜீவேஸ் வரஜகந் திகழ்வேத சாத்திரங்
கால தேசமொடு கருதுபற் பலவாம்
வருணாச் சிரம வழியொழு கறங்கள்
அவைதரு சொர்க்க நரக பேதங்கள்
ஐயெழு தத்துவ மாகிமே னிறைந்த
சச்சிதா நந்தத் தனிப்பரம் பொருளே
நாநா ரூப நாம பேதங்கொடு
நடித்தலி னேக னநேகரூ பனுமாந்
தோற்றமாத் திரமெனத் துணிந்தொளிர் தரவே.

## 99. ஏகரூபன்.

ஏக ரூபனென் றிசைக்கவு மானதென்
பலகட சலத்திற் பிரதிபிம் பசந்திரன்
ஏக னநேகனு யிலங்கிடப் படினும்

பற்பலர் கண்களிற் பரிதிவே ருகினும்
படிகமண் டபத்திற் பத்தியாந் தூணில்
ப்ரதிபிம்ப ஞாளி பேதமாத் தோற்றினும்
ஒன்றே யல்லா லுண்மைவே றின்மைபோல்
கனவுபோ னனவிற் சங்கற்ப காட்சியாம்
ப்ரபஞ்ச நாநா பேதமாத் தோற்றினும்
ஏகமாஞ் சச்சிதா நந்தமே யியல்பாம்
பரமார்த்த னென்னப் பார்த்துநன் கமைதி.

## 100 பரமார்த்தன்.

பரமார்த்த னென்னப் பகர்மான்மிய மேது
ஆதித்த சந்நிதா னத்தினி லநந்த
சகவிவ காரஞ் சார்ந்திடல் போல
தோற்றமாஞ் சர்ப்ப மிரசிதஞ்சலம் நிறம்
தேற்றமா நிரூபித் திடப்படு காலை
பழுதை கிளிஞ்சில் பரிதிவா னம்போல்
அபர மார்த்தஞ் சொப்பனப் ப்ரபஞ்சம்
சாக்கிரப் பிரபஞ்சமோ சத்திய மென்பதும்
மினல்மே கம்போல் விரைவினின் மறைதரும்
மனைநிலந் தனமொடு மனைவியு மக்களும்
நிலையல வெனப்பர மார்த்தமா நினைதரும்

சொர்க்காதி போகஞ் சுகமதாத் தோற்றினும்
சூரபத்மா முதற் சொலப்படு மவுணரால்
அழிபடு மிராவணு தியருமே யழிவார்
விராட்டாதி பஞ்ச விவகார பேதமும்
விசாரித் திடிலநித் தியவாச் சியமாம்
சுகமலால் நிலையிலாத் தோற்றமா மறைதலின்
இவற்றொடுங் கூடித் தோற்றமற் றிறப்பிலாச்
சச்சிதா நந்த சாக்ஷிமுக் காலமும்
பரமார்த்த வஸ்து வாதலும் பண்பே.

## 101. வஸ்து.

வஸ்துவென் றுரைத்த மர்மமே தென்னில்
உள்ளதே வஸ்து மற்றவை தோற்றமாம்
ப்ரபஞ்சமே சர்ப்பப் பிராந்தியாந் தோற்றம்
பாம்புபோற் றோற்றிய பழுதைபாம் பெனலாம்
நிரவயப் பிரமமெவ் வாறுநீள் ப்ரபஞ்சமாம்
பன்னிறம் பளிங்கு படைத்தது போலவும்
வெள்ளிய சங்கம் விரவு செந்நிறம்போல்
இன்னிய குளங்கசப் பேறுதல் போலவும்
நிஷ்குணப் ப்ரஹ்மமே சகுணப் பிரபஞ்சமாம்
தோற்றமாத் திரமெனச் சொல்லுவ தெங்ஙனம்

விளங்குறத் தெளிவாய் விரித்துநன் கருளெனில்
ஒளியிரு ளிரண்டும்வே றுளதெனப் புகல்வார்
ஒன்றுறு போதி லொன்றிலா ததுபோல்
எங்கே யிருந்தவை யெங்கே மறைந்தது
கண்ணினுட் கதிரினுட் கலந்துறை சித்தே
யன்றிவே றடைந்தது மகன்றது முளதோ
ஆதலி னன்ம வகண்டசத் தியினல்
சிதாகாய மொன்றே ஜெகமாய் விரிந்தது
சித்தின தசைவே சித்தமா கியது
மஹாகா யத்தினல் வளர்பூ தமைந்து
ஒவ்வொரு மாத்திரை யுயர்ந்தவை விரியும்
வானின் றசைதலின் மாருத மாயது
மாருதம் விளங்கலின் வருமன லாயது
அனலின் றடிப்பே வப்புவா கியது
நீரின் றடிப்பே நிலமா கியது
சூக்கவைம் பூத பஞ்சீ காணமே
தூலவைம் பூத பௌதிக மாயது
தூலமாத் தோற்றினுஞ் சொன்மாத் திரமே
தத்துவம் பயின்ற சுத்தவா சனையொடு
ஜகமெலாந் தன்வய மாகச் சமைந்த

ஞானசை யோக நயந்தமா யோகியர்
சத்யசங் கற்பமே சரீரமாச் சரித்தல்
வாசிட்ட மாதி வகுத்தபல் சாத்திரம்
பிரமாணமாங் காட்சிப் பிரமாணமே லுரைக்கின்
அசைகட லலைநுரை திவலையா குதல்போல்
நிசகன கமதே நிகழ்பல பணிபோல்
இந்திர சாலத் திலங்குறு நகர்போல்
மாயா வித்தையால் வளர்படை யீசல்போல்
சச்சிதா நந்தத் தனிப்பொரு ளொன்றே
தன்னுளாம் லீலா சங்கற்ப மாத்திரம்
நாம ரூபப் பிரபஞ்சமாய் நண்ணுதல்
தோற்றமாத் திரமெனச் சூழ்ந்தநன் குணர்வாய்
இங்ஙனு ரோபமா மிவைக் கதிஷ்டான
நிஷ்ப்பிர பஞ்சமா நிலைபெறு வஸ்து
எமையலாலெதார்த்தமா யில்லையென் றுணர்மோ.

## 102. நிஷ்ப்பிரபஞ்சன்.

நிஷ்ப் பிரபஞ்ச னென்னவு நிகழ்த்தலென்
சொர்க்காதி போகந் தோய்தரத் தியாகம்
விதித்தல்போல் வேதம் மேன்முத்தி சேர
துவைதப் பிரபஞ்ச தோற்றமாற் றச்சொலும்

இருட்டினி லுளபொரு ளெடுக்க வவ்விருளை
ஒளிகொடு விளக்கி யுணர்ந்திடல் போல
மாயா வரண மறைப்பற நெகிழ்த்துத்
தானெனத் தோன்றுதே காதிய தத்துவம்
அன்யமாம் பிருதிவி யாதிய ப்ரபஞ்சம்
இருக்கவு மில்லா தொழிதர வியற்றிய
வசிட்டர் யாக்ஞ வல்கர் சுகரொடு
வாமதே வன்முதற் தக்ஷிண மூர்த்தி
ஆதி முத்தா லபாவமா யிற்றெனில்
இன்னமுந் தோற்றற் கேதுவே தென்றால்
பித்தகா சத்தினற் பேதமாஞ் சந்திரன்
கதிரவன் பலவாக் கண்களிற் றோன்றினும்
ஒவ்வொன் றேயலா லுண்மைவே றின்மைபோல்
சின்மாத் திரமாத் திகழ்தரு நம்மில்
அஞ்ஞான கற்பனை யானும ரூபப்
ப்ரபஞ்ச தோற்றம் பேதமா யிருந்தொழி
அவத்தையைக் காணு மறிவாத் மாவென
எதார்த்தமா மறையுப தேசிக்கு மேலுஞ்
சொப்பனம் போற்சகந் தோற்றமாத் திரமாம்
நாநாரூபஞ நவின்றிடப் படினும்

முக்கா லத்து முண்மையா யின்றென
திடப்பிரஞ்ஞை யாகச் சின்மாத் திரமாம்
நிஷ்ப் பிரபஞ்சனு நிலைநிலை பெறவே.

## 103. நாநாரூபன்.

நாநா ரூப னாகிய பான்மையென்
நாநா ரூபமா நவின்றிடு ஜகத்தை
ஈதல வலவெனு நேதிவாக் கியத்தால்
நீக்கிய த்வைத சின்மாத் திரமே
நிலையென நாட்டிய நெடியநீள் சுருதி
நாநா ரூபனு நவின்றது மேதெனில்
கதிரவ னொருவனே கடங்குள முதற்பல
சலத்தினு நாவுரு சார்ந்துதோற் றுதல்போல்
அவித்தியா வுபாதியா லாத்ம சைதன்யமும்
நாநா ரூபனு நவின்றுப சரித்ததும்
அபேதனு தவினு லமையுமென் றுணர்மோ.

## 104. அபேதன்.

அபேத னென்ன வறைந்தவா றுரைக்கில்
காட்சியாந் தோற்றப் பூதபௌ தேந்தியம்
ஜீவேஸ் வரஜக பேதமா யைக்கும்

அதிஷ்டான சேதன மாகிய நாமே
எவைக்கு மாதாரமா யெங்குமா யிருத்தலின்
அபேதனிர் விசேஷ னமென லாமே.

## 105. நிர்விசேஷன்.

நிர்விசே ஷத்துவம் நேர்ந்தவா றேது
நிற்பன விருப்பன படுப்பன நடப்பன
சதுரமா வட்டமாச் சாய்ந்ததாய்ச் செவ்வையாய்
நெடியதாக் குறியதா நிகழ்த்துபல் விசேஷம்
தாவர சங்கம ஜகபதார்த் தத்தில்
கூடிய வெயில்பல கூறதாய் விசேஷத்
தொழில்பலவடைதலாத் தோற்றினுமொன்றாய்ச்
சலனமற் றிடல்போற் சச்சிதா நந்தம்
சர்வா காரமாச் சார்ந்திருந் தாலும்
அசங்கசித் ரூப னருமெய்ஞ் ஞானி
அத்வைத னதலி னசைவினிர் விசேஷன்
ஆமெனப் பாவித் தமைதா வமைதி.

## 106, அத்வைதன்.

அத்வைத னென்ன வறைதலெவ் வாறால்
தாவர சங்கம முதற்பல பதார்த்தம்
நிலத்திற் றோன்றி நிலத்தின் மடிதல்போல்

அயத்தையாற் றேன்றி யகல்பிர பஞ்சம்
சாக்ஷியா நம்மிற் சார்ந்தொடுங் குதலால்
ஏகா த்வைத னெமையலாற் பிறிதிலே
சர்வா பாவனும் யாமெனத் தகுமே.

## 107. சர்வாபாவன்.

சர்வா பாவனுந் தன்மையே தென்னில்
சச்சிதா நந்தத் தனிப்பொரு ளொன்றன்
சங்கற்ப மாத்திரஞ் சார்தரு மையேழ்
தத்துவ தோற்றஞ் சாற்றுமுத் தியதாம்
பிராக பாவம் பிரத்துவம்சா பாவம்
அன்னியோன்ய மொடு மத்தியந்தா பாவம்
ஆகிய பிரபஞ்ச மபாவ மாதலினுற்
சுசாதி விசாதி சுவகதபே தமதாம்
இரண்டாம் வஸ்துவே றின்மையி னுலே
சர்வதோ முகமாஞ் சர்வா பாவனே.

## 108. சர்வதோமுகன்.

சர்வதோ முகனெனச் சாற்றிய நிலையெது
ஞான காயமே நவையற நிறைந்தது
ஒருகா லத்துள தொருகா லத்திலே
ஒருதே சத்துள தொருதே சத்திலே

ஒருவஸ் துவிலுள தொருவஸ் துவிலில
ஒருதிக் கினிலுள தொருதிக் கினிலில
ஒருவா னத்துள தொருவா னத்தில
ஓராசிர மத்துள தோராசிர மத்தில
எனும் பரிச்சேத மிலாதெண் டிசையினும்
மேல்கீ ழிடையெனும் வேற்றுமை யின்றி
சர்வ சாக்ஷியாத் தான்கூடி யிருந்து
அகண்டசங் கற்ப மநாகா யமதாய்
சூக்கவைம் பூதத் தொடர்பாய் விரிந்து
பஞ்சீ காணத் தாற்பரம் பரையாய்
பூதா காயம் புணர்வளி யனல்புனல்
பாதல மந்தமாய்ப் பரந்து விரிந்த
சர்வார்த் தங்களுஞ் சந்நிதா னத்தில்
சர்வ வியாபாரந் தன்னிலே சமைதர
அகம்புற மெங்கு மாநந்த மயமாய்
நிறைபரி பூரண நிலையதோ முகமே.

மூன்றாவது சாட்சாத்காரயுத்தி முற்றிற்று.

---

ஓம் பரப்ரஹ்மணே நமஃ

ஞான

# ஸாதகஸஹாயம்.

காப்பு.

குறள் வெண்பா.

சிதம்பர மன்றியே சோதித்துங் காணேன்
சிதம்பரந் தானே துணை. (1)

கட்டளைக்கலித்துறை.

ஆகந் தனையா னெனுஞ்சோக மற்றறி
வானந்தமாய்ச்
சோகம் புரியுயர் பாவனை சாதித்துச்
சோர்வறவே
தேகம் புறமக மாயொளிர் சோதி
சிதம்பரத்தை
யூகந் தரவமர்ந் தெஞ்ஞான் றுமேத் திரின்
றய்குவமே. (2)

[அதிதீவிர பக்குவன் அடைய வேண்டிய
ஆசிரியரது இயல்பும் பெருமையு
முணர்த்துகின்றது.]

## பிரமகீதை.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உண்டுபோற்றோன்று முலகெலா முண்மை
யன்றெனவுணர்த்தியெப்பொருளுங்
கண்டசான்றதனைக் காட்சியதறவே
கண்டிடக்கரியெனக் காட்டும்
பண்டைவேதாந்தவாக்கியஞ்சொன்ன
படியிலே பரமனே டொன்றாய்
விண்டிடாவண்ணமுணர்த்துவான்றன்னை
வியன்குருவென்றிடும்வேதம். (1)

காட்சியையெல்லாங் கண்ணதாய்க்கரைத்துக்
கண்ணொழித்தொருபொருளில்லா
மாட்சியையளிக்கவல்லவன்குருவா
மாரிபோன்மாறுவேண்டாதே
மீட்சியில்பதத்தைக் கருணையாலளிக்கும்
வித்தகக்குரவனேயெவரும்

தாட்சிசெய்தேத்தற்குரியதத்துவமாஞ்
சங்கரனென்றிடத்தருவான். (உ)

## மெய்ம்மொழி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பிறிந்திடக் கடைந்த வெண்ணெய்
பின்புமோர தனிற் கூடிச்
செறிந்திடா வாறு போலத்
தேகமுந் தேகி தானும்
பிறிந்திடப் பார்த்த பின்பு
பெயர்த்ததி னிற்பி னுங்கேள்
செறிந்திடா வாறு செய்யுந்
தேசிகன் றேசி கன்றான். (௩)

விடத்தினன் மூர்ச்சித் தானை
விடம்வல்லான் பார்த்த போதே
யடர்த்திடும் விடத்தை நீக்கி
யாங்கவ னெழும்பி னற்போற்
சடத்துவ வுடம்பு தானென்
சழக்கறப் பார்த்த போதே

திடத்துணர் வாகச் செய்யுந்
தேசிகன் றேசி கன்றான்.

பொருவிலா வுலகை மூடிப்
பொலிந்துள விருளை யெல்லா
மிரவிதா னீக்கி யெங்கும் விளங்கிய
வியல்பே யென்ன
வுருவிலா மாயை யென்று
மோங்கிருள் கழித்தப் போதே
திரமதா மறிவைக் காட்டுந்
தேசிகன் றேசி கன்றான். (௬)

[இத்தகைய ஆசிரியரை யடைந்த
அதிதீவிரபக்குவனது இயல்புணர்த்துகின்றது.]

போதாமிர்தம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

துரிசினற் பாரம் பரியமா முறையிற்
றுகளற வழுவிலாத் துணிவும்
பரிவுறக் குரவன் பாதமே நோக்கிப்
பழுதறப் புகழுபண் பதுவு

*மரியநற் குரவ னருளறம் பொருளோ*
*டின்பம் வீடென்னுமாண் மையதுந்*
*தெரிவுறத் திகழு முத்திசா தனமாச்*
*செப்புவர் தெய்வஞா னிகளே. (௬)*

*திகழுநற் குரவன் திருவுளம் பார்த்துச்*
*செய்யுமே வற்சிறப் பதுவு*
*மகிழுநற் குரவன் மருவுநற் பதியே*
*மன்னிநீங் காதவா தனையும்*
*புகழுடைத்தமரும் பொன்முதற்பொருளும்*
*பொருந்துநோ யெனமதித் திடலும்*
*தகவுடைச் சமைவுஞ் சாந்தியு மிவைநற்*
*சாதன மென்பர்தக் கோரே. (எ)*

## போதரத்நாகரம்.

*தேசிகன் பதநற் சேவையின் வலியுந்*
*திகழ்பதத் தளவிலா வன்பு*
*மாகினன் முத்தி யதின்விருப் பதுவு*
*மமலவா ரணத்தினின் விருப்பு*

நேசுறற் குரிய வுடலினி லுவர்ப்பு
நிகழ்விட யங்களின் வெறுப்பு
மீசனெப் பொருளு மென்னுநற் றுணிவு
மிவையெழின் முத்திசா தனமே. (அ)

தேசி கன்றிரு வுளக்கருத் தறிந்துநற்
றிருவுள மகிழ்செய்யப்
பேசு வாசகம் பேசிடா மையதெனப்
பேசிய பெரியோன்ற
ஞூசி லாதபொற் கழல்களி னறையுமை
யைந்தையு மொருக்கிப்பின்
னேச மேயவை யவமதாய் நெக்குநெக்
குருகியே பணிசெய்வான். (க)

இத்தகைய அதிகாரி மேற்கூறிய பரமாசாரியர் சந்நிதானத்தில் கண்ணிமைபோலும் ஊசி நூல் போலும் பிரிதலின்றி, அவரது வுள்ளக்குறிப்பிற்கு மாறுதலிலாது அநந்தகாலம் சிஷ்ருஷை செய்து வருங்கால், ஆசிரியர் முகவிலாசம் பொருந்தி

யிருக்கின்ற தருணமறிந்து, சீடன், அவரது திரு முகநோக்கி யடிபணிந்து, "சுவாமி! அடியேன் ஜனன மரணப் பிரவாகத்துன்பத்தாக்குதலுக்குச் சகிக்க ஆற்றலற்றவனா யிருக்கின்றேன்; இத்துன் பத்தினின்றும் எவ்வாறுநீங்கிப் பரமாநந்த சாம் ராஜ்யத்தைப்பெற்றுக் கிருத கிருத்தியனாவேன்? இவ்வடைவுக்கேற்ற வுபதேசவுவவினை னன்குணர் த்தவேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்ய, அத ற்கு ஆசிரியர் சீடனது பரிபாகக் குறிப்பை யுணர் ந்து, அகமகிழ்ச்சி யுடையவராய் அநுக்கிரகஞ் செய்யத்தொடங்கி, அன்னோனோக்கி, "ஓ ஞான புத்திரா! நீ வினவியதை நினைத்து ஆநந்தமுற் றோம்; மானுடயாக்கையைப்பெற்றவொவ்வொரு வரும் தெளிய வேண்டியதற் கின்றியமையாத விசார மிஃதேயாம்."

## பிரமகீதை.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உண்ணாடியாகத்தினுணராதவன்று
ஹுடம்பாருடம்புக்குளேகாணலாகும்.

கண்ணாடிபோலப்பிராணாதிகத்தைக்
கடம்போற்கழித்துக்கழித்தற்றபின்னைக்
கண்ணனபானன்றிவேறின்மையாலக்
கண்ணனவநுபூதியாகின்றகண்ணா
லெண்ணாரும்வேறின்மைகண்டார்களேயோ
யிறவாது பிறவாதெலாமாயிருப்பார்.

ஆகலின், "நீயடையக்கோரிய, ஆநந்தாநுபவத்தைப் பெறவேண்டி பின்வரும் பாடலினை ஹேதுவாகக்கொண்டு அப்பாடலின்கணுள்ள அந்தரங்க அபிப்பிராயங்களை நன்றாகயூகித்து, உன்னுடைய சந்தேக விபரீதங்களை யகற்றி, அவ்வநுசந்தான வளவில் நிரந்தரஞ்சித்தவிர்த்தியைத் தைலதாரைபோல் நிறுத்திப் பழகும் அப்பியாச மேலீட்டாலுண்டாகும் அகண்டாகாரவிர்த்தி யநுபவத்தால் சங்கற்ப வாஸநாக்ஷயத்தை யடையப்பெற்று நிரங்குச திருப்தனா யிருக்கக்கடவாய்" என்பதாகிய ஆசீர்வாத மங்களத்துடன் சொல்லத்தொடங்கினார்.

உ

ஸ்ரீசற்குரவேநமஃ.

# ஞான ஸாதக ஸஹாயம்.

## ஸ்ரீ தாயுமானசுவாமிகள் பாடல்.

### ஆநந்தமானபரம், ௯-வது பாட்டு.



பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காராரு மாணவக் காட்டைக் களைந்தறக்
கண்டகங் காரமென்னுங்
கல்லைப் பிளந்துநெஞ் சகமான பூமிவெளி
காணத் திருத்திமேன்மேற்
பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
பதித்தன்பு நீராகவே
பாய்ச்சியது பயிராகு மட்டுமோ மாயைவன்
பறவையணு காதவண்ண

நேராக நின்றுவினை போகம் புசித்துய்ந்த
நின்னன்பர் கூட்டமெய்த
நினைவின் படிக்குநீ முன்னின்று காப்பதே
நின்னருட் பாரமென்று
மாராரு மறியாத சூதான வெளியில்வெளி
யாகின்ற துரியமயமே
யண்டபகிரண்டமுமடங்கவொருநிறைவாகி
யாநந்த மானபரமே.

*அந்தரார்த்தம்.*

கார் ஆரும் ஆணவக் காட்டை களைந்து — *அவித்தை நிறைந்த (தனது எதார்த்த சொரூபத்தை அறியவொட்டாது) பாஞ்சபூத பௌதிகமாகிய சரீரக் குழாங் களோடு கலந்து, இந்திரியவழிசென்று, தேஹோஹமென்றிருக்கின்ற மனதை* (சத்தியம் ஞானம் அநந்தம் ப்ரஹ்மம் என் *றற் றெருடக்கத்தனவாய ஆன்மாவினிருப் பைக் கூறும் வாக்கியங்களின் விசாரத்தை*

*சற்குருவின்பால் சம்சயமற விசாரிக்கும் விசாரத்தின்மேலீட்டி லுளவாகும் உபரதி வைராக்கிய விவேகத்துவாரா) அவ்வழி செல்லவொட்டாது தடுத்து,*

அறக்கண்டு — *தேகத்திற் குள்ளிருக்கும் ஆகாசத்தைப் பாவித்து அதன்கண்ணே மனதை நிறுத்தி,*

அகங்காரம் என்னும் கல்லைப் பிளந்து — *தேஹோஹ மென்கின்றபுத்தி இறையளவேனும் உண்டாகாது முற்றும் நசிக்கும் வண்ணஞ் சற்குருவினாற் பெற்ற வருட் பிரசாதமாகிய மஹாவாக்கியத்தை யிடையறாது அம்மனதினால் ஜபிக்காமல் ஜபிக்கச்செய்து,*

நெஞ்சகமான பூமி வெளிகாணத் திருத்தி— *அங்ஙனம் ஜபிக்கின்ற மஹாவாக்கியத்தில் மனதை நிறுத்தாமல் அச் சப்தம் உதிக்கின்ற இடத்தையே நாடி,*

மேல் மேல் — *அந்நாட்டம் மீண்டு மீண்டும் அதிகரிக்க,*

பாராதி அறியாத மோனமாம் வித்தை பதித்து — *அம்மனதிற்கு பாஞ்சபூத பௌதிகத் தோற்றமாகிய சரீரக்குழாங்களும் சப்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களு மிறையள வேனுந் தோன்றாது சொரூபத்தில் ஏகாக்கிரதையைப்பொருந்தி,*

அன்பு நீராகவே பாய்ச்சி — *ஆண்டு நிகழும் சூன்யப்பிரதீதியி லுளதாகும் விஶ்ராந்தியாகிய சீதளத்தன்மையில் ஊக்கத்தைத் தைலதாரைபோல் நிறுத்தி,*

அதுபயிராகுமட்டும் — *ப்ரஹ்மாகாரவிர்த்தியுதயமாகி நனவிற்சுழுப்தியா நந்தமுண்டாகிற வரையில்,*

மாமாயை வன்பறவை அணுகாதவண்ணம் — *அவித்தை வசப்படுதலாகிய சுழுப்தி*

யும், நாமரூபத் தடிப்பாகிய மனோநாச்சி யமு முண்டாகா வண்ணம்,

நேராகநின்று — சொரூபத்தி லேகாக்ரதை யடைந்த மனம் அவ்வுள்ளக் குளிர்ச்சியி லேயே பிரிதலின்றியிருந்து,

விளைபோகம் புசித்து — ஆண்டுதயமாகும் ப்ரஹ்மாகார விர்த்தியாகிய நனவிற் சுழு ப்தி ஆநந்தத்திலேயே பரவசப்பட்டு,

உய்ந்த— (அப்பியாசமுதிர்ச்சியால் திரிபுடி ரகிதமாகிய அகம் புறமற்று இருக்கும் ஆநந்தாதீத ஸ்திதியை யடைந்து) உஜ் ஜீவித்த,

நின்னன்பர்கூட்டமெய்த— அத்தகைய ஞா னவான்கள் நிலையை யடைய,

நினைவின்படிக்கு — சங்கற்ப வசமாகாது உதித்த விடத்திலேயே மனதை யொடுக்கி நிற்கும் பரிபாக ஸ்திதியில்,

நீ முன் நின்று காப்பது — *அகண்டாகார விர்த்தியே முதன்மையாக (துரியசிவமாய்) விளங்குவது,*

நின்னருட்பாரம்— *அவ்வகண்டாகார விர்த்தியிலுண்டாகாநின்றஆநந்தத்தின்கடமை,*

என்றும் — *எக்காலங்களிலும்,*

ஆராரும் அறியாத — *(தத்துவக் குழாங்கள் சகிதமாகிய) எத்தகைய பதவிப்பேற்றின் கண் நின்றுளோராலு மறியப்படாத,*

சூதான வெளியில் — *சங்கற்ப வாகாரந் தவிர்ந்து மறுசங்கற்ப முதிப்பதற்கு முன்னின்றுள்ள விடமாகிய சொரூபப் பிரகாசத்தில்,*

வெளியாகின்ற துரியமயமே—*நிதரிசனமாய் விளங்குகின்ற ஆநந்தக்கடலே,*

அண்டபகிரண்டமும் — *அகம் புறமும்,*

ஆநந்தமான பரமே — *ஆநந்தாதீத சொரூபமே,*

அடங்கலொரு நிறைவு ஆகி — நிறைந்து ஒப்பற்ற பரிபூரணமாகியது. (க)

———(*)———

☞ மனதையிந்திரியவழிசெல்லவொட்டாது தடுத்தல் என்பதற்குப் பிரமாணம்.

—(*)—

திருக்கடைக்காப்பு.

கள்ள நெஞ்ச வஞ்சகக்
கருத்தை விட் டருத்தியோ
டுள்ள மொன்றி யுள்குவா
ருளத் துளா னுகந்தவூர்
துள்ளி வாளை பாய்வயற்
சுரும் புலாவு நெய்தல்வா
யள்ள லுரை யாரலாரு
மந்த ணாரு ரென்பதே.

அந்தரார்த்தம்.

கள்ளவஞ்சகக்கருத்தை-(இந்திரியவழிசென்று) பொருளல்லவற்றைப் பொருளென்றுணர மயக்கஞ்செய்யு மெண்ணத்தை, விட்டு-(உபாதி வை

ராக்கிய விவேகத்துவாரா இந்திரியவழி செல்லா
து) தடுத்து, நெஞ்சம்-மனதை, அருத்தியோடு-
(சற்குருவாற்பெறப்பட்ட வருட்பார்வையில் வை
ராக்கிய) அன்புடன், உள்ளம் ஒன்றி - அவ்வாகா
சத்திலேயே (தைலதாரைபோல்) நிறுத்தி, உன்
குவார் - நினைப்பவராகிய, உளத்துளான் - (அத்
தகையோர்கள்) மனதில் (நிலைபெற்று) விளங்கு
பவனுக்கு, உகந்த - பிரியமான, ஊர்-இடமாவது,
வாளை துள்ளிபாய்-சங்கற்பமுதித்தொடுங்கும், வய
ல்-மத்தியகத ஸ்தானமாகியும், சுரும்பு உலாவும்
நெய்தல்வாய்-சர்வபரிணாமங்களுக்காதாரமாகியும்,
அன்னல் நாரை ஆரல் ஆரும் - ஆநந்தபரவசமடை
ந்து ஸகஜநிலை யநுபவம் வாய்ப்பதாயுமுள்ள துரிய
நிலையாகிய, அம் தண் ஆரூர் என்பது - பரிபூரண
சிதாகாச மென்பதேயாம். (உ)

தேவாரம்.

வெள்ளத்தார்விஞ்சையார்கள்விரும்பவே
வெள்ளத்தைச்சடைவைத்தவிகிர்தனார்
கள்ளத்தைக்கழியம்மனமொன்றிநின்
றுள்ளத்தில்லொளியைக்கண்டதுள்ளமே.

(அ - ம்.) வெள்ளத்தார் - கடல்போல்நிறைந்த, விஞ்சையார்கள்-புலவர்கள் (அதாவது தேவர்களுந் தேவஸ்திரீகளும்), விரும்ப - தோத்திரஞ்செய்து போற்ற, வெள்ளத்தை-கங்கையை, சடைவைத்த ஜடாமகுடத்திற்றாங்கிய, விகிர்தனார்-பரசிவமாகிய சிதாகாச வெளியை (அறியவேண்டின்), கள்ளத்தை - இந்திரியக் கள்வர் வழிசெல்லும் மனதை, கழி - (சற்குரு அருட்பார்வையில் தைலதாரை போல் நிறுத்தி சப்த ஸ்பரிசாதிகள்) அற்ற, அம்மனம்-அந்தமனமானது, ஒன்றி-(சொரூபத்திலே காக்கிரதையை) பொருந்தி, நின்று-(பிரிதலின்றி) இருக்க, உள்ளத்தில் ஒளியை- (அவ்விடத்துண்டாகா நின்ற) அகண்டாகார விருத்தியாகிய சிதாகாச வெளியை, கண்டது-அறிந்தது, (எதுவோ அதுவே சொரூபத்தோடு ஏகாக்கிரதையடைந்த) உள்ளம்-சுத்தமனமாம். (உ)

சிவாநந்தமாலை.

வெண்பா.

ஓயாமலைம்புலன்சேர்வாயிலொடியெறிந்தங்
காயாமனத்தையலைவறுத்து—மாயாதே

பண்டையறிவொழிந்துபண்டையறிவாய்ப்பாரத்
தொண்டமூந்திப்போவதுமுத்தி. [தை

(அ-ம்.) ஆயாமனத்தை - அசுத்தமனதை, ஐம் புலன்சேர் வாயில் - ஐம் புலன்களும் பொருந்திய வழியில், * ஒடி யெறிந்து - செல்லவொட்டாமல் (உபாதி வைராக்கிய விவேகத்துவாரா) தடுத்து, அலைவு அறுத்து - (நிவாததீபம்போல் நிலைபெறு மாறு) நிறுத்தி, ஓயாமல் - (ஹிர்தயாம்பரத்தில்) இடைவிடாமல், மாயாது - (பழகும் பெற்றியா னும்) நீங்காது, பண்டையறிவொழிந்து - (தைல தாரைபோல் நிறுத்தி அப்பியாசஞ் செய்யும் பரி பாகஸ்திதியி லுளதாகும் ப்ரஹ்மாகாரவிர்த்தி ஞா நத்தால் அந்தக்காண விசிட்டசேதனமாகிய) அநா திஜீவபோதநீங்கி, பண்டையறிவா-அநாதிக்கெல் லாம் அநாதியாயுள்ள (கூடஸ்த) போறிவாய், பா த்தை-(ஆண்டு நிகழும் நிர்விகற்ப சமாதியின்மே லீட்டில் சித்திப்பதாகிய ஸகஜசமாதியினல் விளங் கும் மாயாவிசிட்ட சேதனனுகும் ஈஸ்வர சாக்ஷி

* ஒடியெறிதல - காடுகளை வெட்டிச்சரித்தல். ஈண்டு மனதை புலன்வழி செல்லாது தடுத்தல்.

யாகிய) ப்ரஹ்மத்தில், மொண்டமூர்ந்தி — ஐக்யத் தன்மையைப் பொருந்தி, போவது—துவைதப்பிர தீதி தோன்றாதிருப்பது, முத்தி-மோக்ஷமாம். (ந)

## பட்டினத்துப்பிள்ளையார் பாடல்.

### கட்டளைக்கலித்துறை.

இருக்குமருதினுக்குள்ளிமையோர்களு நான்மறையு
நெருக்குநெருக்கத்துநீளகத்துச்சென்று மீளவொட்டாத்
திருக்குமறுத்தைவர்தீமையுந்தீர்த்துச் செவ்வேமனத்தை
யொருக்குமொருக்கத்தினுள்ளேமுளைக் கின்ற வொண்சுடரே.

(அ-ம்.) இருக்கும் — (எக்காலங்களிலும் சதோ தயமாய் யாவர்பாலும் பிரகாசித்துக்கொண்டு பிரிதலின்றி) இருக்கும், மருதினுக்குள்—மருதமா ணிக்கமாகிய சொரூபத்தினிடத்து, இமையோர்

களும்-இமையாநாட்டமுடையதேவர்களும், நான்மறையும்-நான்குவேதங்களும், நெருக்கும் நெருக்கத்து-சொரூபத்தி னிலக்ஷணங்களை ஆராய்ச்சி செய்யுங்கால், நீள் அகத்து-நுட்பமாகிய மனதின் நீர்ப்பில், சென்று-செல்ல, மீளவொட்டா-அம்மயமேயாகி மீண்டுந் திரும்புதலின்றி மௌனநிலையாயிருக்கும் ஸ்திதியை ஜிஞ்ஞாசகள் அபரோக்ஷ வடிவாயடையவேண்டின், திருக்கும்-ஜீவஅறிவாய் விளங்கும் தேஹோஹ பாவத்தை, அறுத்து-(சற்குருவாற்பெற்ற ஆகாசபாவத்தால்) நீக்கி, ஐவர் நீமையும்-(தேஹபாவமற்று ஆகாசபாவமாய் விளங்குவது தைலதாரைபோல் நிலக்கில்) சப்த ஸ்பரிச ரூப ரச கந்த மாகிய ஐந்துவிஷயங்களையும், தீர்த்து-போக்கி, (போகும் என்பதே திண்ணம்) செவ்வேமனத்தை - (போகவே) ஆண்டுநிகழுமுள்ளக்குளிர்ச்சி சகிதமாகிய மனதை, ஒருக்கும் ஒருக்கத்தின் உள்ளே-எதார்த்தம் விளங்குகிற பரியந்தம் அவ்விடத்தில் (பிரிதலின்றி திடவைராக்கியத்துடன்) காத்தவிடத்திலே, முளைக்கின்ற ஒண்சுடர் - உதயமாகின்ற ப்ரஹ்மாகாரவிருத்தியநுபவத்தா லடையப்படு மென்பதாம். (௪)

## கந்தரலங்காரம்.

### கட்டளைக்கலித்துறை.

அராப்புனைவேணியன்சேயருள்
வேண்டுமவிழ்ந்தவன்பாற்
குராப்புனைதண்டையந்தாடொழல்
வேண்டுங்கொடியவைவர்
பராக்கறல்வேண்டுமனமும்
பதைப்பறல்வேண்டுமென்று
விராப்பகலற்றவிடத்தே
யிருக்கையெளிதல்லவே.

(அ-ம்.) அராப்புனை-சர்ப்பத்தையாபரணமாகத் தரித்த, வேணியன் - ஜடாபாரத்தையுடைய பரமசிவனது, சேய்-புத்திரனாகிய சுப்பிரமணியனுடைய, அருள்வேண்டும்-கிருபையைப்பெறல் வேண்டும், அவிழ்ந்த அன்பால்-(பாலிக்கப்பெற்ற கிருபையினால் சங்கற்ப க்ஷயத்தை யடைந்து அவ்விடத்திலுண்டாகாநின்ற) ஆநந்தபரவசத்தால், குரா - குரா மாலையையும், தண்டை-பாதச்சிலம்பையும், புனை-தரித்திராநின்ற, அம்தாள் - (ஆன்றோன்) அழகிய திருவடியை, தொழல் வேண்டும்-(சகல

கேவலத்தாக்கற்று) வணங்கல்வேண்டும், என்றால் -என்று சொன்னால், கொடிய ஐவர் பராக்கறல் வேண்டும்-பந்தத்துக் கேதுவாகிய பஞ்சவிஷயங்களை (விசார பூர்வகமாய் தோஷ திருஷ்டிகண்டு சற்குருவினாற்பெற்ற அருட்பார்வையில் மனதைத் தைலதாரைபோல் நிறுத்திப் புலன்வழி செல்லாது) அடக்கல் வேண்டும், மனமும் பதைப்பறல் வேண்டும் - (அவ்வா றடக்கிய) மனம் சொரூபத்தில் ஏகாக்கிரதையைப் பொருந்தவேண்டும், இராப்பகலற்ற இடத்தே-(இப்பெற்றியான்) சங்கற்ப வாஸனாக்ஷயத்தை அடையப்பெற்று சகல கேவலமற்ற துரிய நிலையில், இருக்கை-இருத்தல், எளிது-எளியது, அல்லவே - (அப்படி யேகாக்கிரதை பொருந்தாவிடின் துரியநிலையை யடைதல்) அரிதென்றபடி.

இஃதன்றியும்;

கொடியஐவர் பராக்கறல் வேண்டும்-பந்தத்துக் கேதுவாகிய பஞ்ச விஷயங்களை (விசார பூர்வகமாய் தோஷதிருஷ்டிகண்டு சற்குருவினாற்பெற்ற அருட்பார்வையில் மனதைத் தைல தாரைபோல்

நிறுத்திப் புலன்வழிசெல்லாது) அடக்கல் வேண்டும், மனமும் பதைப்பறல் வேண்டும் - உள்ளது விளங்குகிற பரியந்தம் ஆண்டு நிகழும் சூன்யவியாபக விளக்கத்தில் நிரந்தரம் பிரிதல் இன்மையையடைதல் வேண்டும், அராப்புனை வேணியன் சேயருள் வேண்டும் - இப்பெற்றியால் புத்தி தத்துவங்களை இயல்பானே சன்பால்ஐக்கியம் செய்துகொள்ளும் சகஜாநந்த அடைவில் விளங்கும் துரிய சிவம் யாதோ அத்தகைய சத்தா சாமான்னிய ஸ்திதியினின்றும் உற்பன்னமாகும் அகண்டாகார விருத்தி ஞானத்தை யடைதல்வேண்டும், அவிழ்ந்த அன்பால் - அத்தகைய அகண்டாகார விருத்தி ஞானத்தில் இடையறுப் பரிசயஞ்செய்யும் பரிபாகஸ்திதியில் சகல அனர்த்தத்திற்கும் ஹேதுவாகிய அஞ்ஞானம்நீங்கி ஈண்டு நிகழும் நனவிற் சுழுப்தி ஆநந்த அநுபவத்தினுல், குராப்புனை தண்டையந்தாள் தொழல்வேண்டும் - சச்சிதாநந்த விளக்கத்தினை இயல்பானே யுடைத்தாகிய அகண்டாகார விருத்தியில் துவைதப் பிரதீதியின்றிய சமாதி ஸ்திதியை அடைதல் வேண்டும், என்றுல் - அடைவாயேயானுல், இராப்பகலற்ற

விடத்தே இருக்கை எளிது - சகலகேவலத்தின் அத்தியந்த நிவர்த்தியைப் பெற்றுத் துரியப்பேற்றினை அடைதல் எளிது, அல்லவே-மேற்கூறிய வாறு பழகாவிடின் அரிதென்றபடி. (இவ்வாறு பொருள் கொள்ளினு மமையும்.) (ரு)

தத்துவராயர்.

கட்டளைக்கலித்துறை.

இசையானலனெனையாளுடையானிந்
    தியங்களுட
னசையாதநெஞ்சங்கொண்டன்பானினைந்
    யும்முடம்பின் [ழி
நசையானதின்றிநலஞ்செய்வாரயினற்
    றுடலையின்
மிசையாரவைத்தென்றுமெய்யானதன்னை
    வெளிப்படவே.

(அ-ம்.) இந்தியங்களுடன்—இந்திரியவழிகளில், அசையாத-(இறையளவேனும்) செல்லாத, நெஞ்சம் கொண்டும்-(தைலதாரைபோல்) மனதைநிறுத்தி, அன்பால் நினைந்து அழியும்-சங்கற்பஎழுச்சி

யும் நாசமும், (இடையறாது உண்டாவதற்குக் காரணமாகிய) உடம்பின் நசை ஆனது.—தேகாபிமான மானது, இன்றி—நீங்கி, நலம்—(உள்ளதுவிளங்கும் பரியந்தம் பகிர்முகப் படாமையும் சுழுப்திக்குப் போகாமையுமாகிய) வைராக்கியத்தினை, செய்வாராயின்—உடையவரா யிருப்பாராயின், எனை ஆளுடையான்—எனது ஜீவபோதத்தை நீக்கி தனது சிவபோதமாய் விளங்கச்செய்யும் அகண்டாகாரவிருத்திஞானமானது, நல்தாள்தலையின் மிசை ஆரவைத்து — (உதயமாகி ஜீவபோதம் முற்றும் நசித்து) ஆண்டு நிகழும் ஆநந்தப்பெருக்கில் பொருந்தச்செய்து, என்றும் — எக்காலங்களிலும், மெய்யான — எதார்த்தமான, தன்னை வெளிப்படவே—கூடஸ்த ப்ரஹ்மைக்யாநுபவமாகிய தனதுசொரூபத்தை நிதர்சனமாக, இசையானலன் — அமையுமாறு செய்யும்.

(௯)

## தேவிகாலோத்தரம்,

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மருவிய பொருண்மே லன்பாய்
வானரம் போற்ச ரித்துத்

திரியுமச் சித்தந் தன்னைத்
திருத்திச்சூ னியத்தே நின்றால்
மருவினோர் பிரித லின்றி
வானவ ரறிவுக் கெட்டாப்
பொருவிலா நித்த சுத்தப்
பொருளினை யடைவ ரன்றே.

(அ-ம்.) மருவிய பொருள்மேலன்பாய்-இந்திரியங்களுக்குத் திவ்வியமாயிருக்கிற சுத்தாசுத்தபோகங்களில்பற்றுதலாய், வானரம் போல்-குரங்கைப் போல, சரித்துதிரியும் - நிமிடமேனும் நிலைபெறாது ஒன்றைவிட்டொன்றைப்பற்றி விஷயங்களிலே பரபரப்பாய்ச் செல்லுகின்ற, அச்சித்தந்தன்னை-அம்மனதை, திருத்தி - (உபரதி வைராக்கிய விவேகத்தினு லவ்வழி செல்லாது மகாவாக்கிய அநுசந்தானத்துவாரா அவ்வநுசந்தான முண்டாகுமிடத்தின் கண் ணே யே) தை ல தா ரை போனிறுத்தி, சூனியத்தே - (அவ்வாறு நிறுத்திப் பழகும் பரிபாகஸ்திதியி லுளவாகும்) அகண்ட சூனியமாகிய வுள்ளக்குளிர்ச்சியிலே, மருவினோர் - பொருந்தினவர்கள், (உள்ளது விளங்கு

கின்ற பரியந்தம்) பிரிதலின்றி-பிரிவற, நின்றால்-நிலைபெற்றால், வானவர் அறிவுக்கு எட்டா-தேவர்கள் அறிவுக்கு எட்டாத, பொரு இலா-உவமனில்லாத, நித்தசுத்த பொருளினை – நித்திய சுத்தமாயிருக்கிற துரியநிலையை, அன்றே – அக்கணமே, அடைவர்-அடைவர்கள். (எ)

## பிரமகீதை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பரப்பினுனிந்தியங்களைப்பராக்குறப்
பரம்பரனுள்ளாகி
யிருத்தலாலறிவொண்கிலன்புறம்புள
விதாமே:காண்கின்றான்
றிருப்பிஞானநாட்டத்தினலப்பொரு
டெரியவேபெறுந்தீர
னொருத்தனேயவிநாசியாம்பரவொளி
யாயவனொளிர்கின்றான்.

(அ-ம்.) பராக்குற-ஜகத்தைக் காணும்பொருட்டு, இந்தியங்களை – ஐம்பொறிகளையும், பரப்பி

ஞன் - விரிவாக சிருஷ்டித்தவனாகிய, பரம்பரன் - பரசிவன், உள்ளாகி இருத்தலால், - ஆந்தரப்பொருளாகி யிருத்தலால், அறிவொண்கிலன் - அறிதற்கரியவனாகலின், புறம்புள (ஜீவன்) - பாஹ்யத்துள்ள, இதரமே காண்கின்றான் - பின்னங்களையே பார்க்கின்றான், திருப்பி - அந்தரவழியே திருப்பி, ஞான நாட்டத்தினால் - ஞானக்கண்ணால், அப்பொருள் - அப்பரசிவனை, தெரியவேபெறும் - காணப்பெற்ற, தீரன் ஒருத்தனே - தீரனாகிய ஒருவனே, அவிநாசியாம் - நாசமில்லாதவனாவான், பரஒளியாய் - ப்ரஹ்மசொரூபமாயும், அவன் ஒளிர்கின்றான் - அவனே பிரகாசிக்கின்றான். (அ)

## வைராக்கியதீபம்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பகர்தருதொழில்களனைத்துமோர்சிறிது
பண்ணவேண்டுவபணிவிடுத்துப்
புகலுரையடக்கித்தனியிடத்திருந்து
போற்றிசெய்தருட்குருபதம்பின்

மிகமுயன்றிதயவருத்தமெய்தாமன்
மெலிந்துகைவிடுதல்செய்யாம
லகமுகமாக்கிமனத்தைநாடொறுமோ
ரைம்புலனொழித்தசைவறுப்பான்.

(அ-ம்.) பகர்தரு - சொல்லாநின்ற, தொழில்கள்-நித்தியகருமங்கள், அனைத்தும்-எல்லாவற்றினுள்ளும் இன்றியமையாது செய்யவேண்டுங் கருமங்களில், ஓர்சிறிது - ஒரோர்சிறிது, பண்ணவேண்டுவ * பணி-சீக்கிரத்தில் செய்வன செய்து, விடுத்து-விட்டுநீங்கி, புகல்உரை-புகல்கின்றவாக்கினை, அடக்கி-மௌனமாக்கி, தனி இடத்து இருந்து-ஏகாந்த ஸ்தானத்திலிருந்துகொண்டு, அருட்குரு-கிருபாசாரியரது, பதம் - திருவடிகளை, போற்றிசெய்து-தோத்திரம்பண்ணி, பின்-பின்னர் (அவர்கூறிய உபாயத்தின்படியே மனோலயம் பண்ணத்தொடங்கும்போது அந்த வுபாய நெறிக்கண்,) மிகமுயன்று-மிகவும் முயற்சிப்பட்டு, இதயவருத்தம் எய்தாமல்-மனவருத்தம் அடையாமல் மெலி

* பண்ணி-பணியென்றாயது இடைக்குறை.

ந்து-(எவ்விதத்தால் அடக்கினும் இது அடங்குவதில்லையென்று) உள்ளம் வருந்தி, கைவிடுதல் செய்யாமல் - (அவ்வுபாயநெறியை) விட்டு நீங்குதல் செய்யாமல், மனத்தை-(பையப்பைய) அம்மனத்தினை, அகமுகமாக்கி-(ஜகமுகமாய்ச் செல்லவொட்டாமல்) உண்முகமாக்கி, நாள் தொறும்-எக்காலமும், ஓர்-ஒப்பற்ற, ஐம்புலன் - பஞ்சேந்திரியங்களையும், ஒழித்து - நிக்ரஹம்பண்ணி, அசைவு - (மனத்தினது) சங்கற்பத்தை, அறுப்பான்-நாசம்பண்ணுவான். (௯)

---

☞ ஆகாசத்தில் மனதை நிறுத்தல் என்பதற்குப் பிரமாணம்.

——(*)——

ஒழிவிலொடுக்கம்,

வெண்பா.

நீர்க்குப்பதமுநெருப்புச்சுடுங்கொழிலும்
காற்றைச்சலிக்கவுமாச்கற்பித்தார்-ஆர்க்குமிது
போகாமனுஞ்கிபுதைக்குநிழல்போலாநீ
ஆகாயம் போற்பா ரதும்.

(அ-ம்.) நீர்க்குப்பதமும்-ஜலத்திற்குக் குளிர்ந்து பதஞ்செய்யுங் குணமும், நெருப்பு-அக்கினிக்கு, சுடும் தொழிலும்-சுட்டு ஒன்றுவிக்குங் குணமும், காற்றை-காற்றிற்கு, சலிக்கவும்-சலித்துத் திரட்டுங் குணமும், ஆர் கற்பித்தார்-பிரேரிக்கச் செய்தவர் யாவர்?

(அவற்றிற்கு இக்குணங்கள் இயல்பானவாறு போல மனத்திற்கு ஒரு பொருளைப்பற்றுங் குணமும், புத்திக்கு அது பற்றியதை நிச்சயிக்குங் குணமும், அகங்காரத்திற்கு அது நிச்சயித்ததை யபிமானிக்குங்குணமும், சித்தத்திற்கு அஃது அபிமானித்ததைச் சிந்திக்குங் குணமுமியல்பாம் ஆகலின்),

இது மனமாதி-இம்மனம் புத்தி அகங்காரம் சித்தம் ஆகிய அந்தக்கரணங்கள், ஆர்க்கும்-எத்தகைய புருடருக்கும், போகா-நீங்கா (எங்ஙனமெனில்), புதைக்கும் நிழல்போல் ஆம்-தன்னிழலைப் புதைக்க மண்போடுந்தோறும் அம்மண்மீது மேன்மேலெழப்பட்ட நிழல்போலும் அக்கரணங்களை உன் போதத்தால் அடக்குந்தோறும் சங்கற்பசக்திகள்

இப்போதத்தின் மேன்மேலெழுவதாக மூடியும் (அத்தகைய நினைவை யொழித்து), நீ ஆகாயம் போல் பார் அறும்—சற்குருவாற் பெறப்பட்ட நெறிப்பிரகாரம் ஒன்றோடுந் தாக்கற்றிருந்து தகராகாயத்தில் மனதை நிறுத்தினால் மேற்கூறிய அந்தக்கரணம் நாசமடையும். (க)

## பிரபுலிங்கலீலை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நினைவினாலொருவன்செய்த
நெஞ்சுளாலயமேயன்றி
வினையினாலுலகர்செய்து
விளங்கியபணிகடம்மு
ளினையதோடுவமையாத
வில்லையென்றும்பரெல்லாந்
தனையலானிகரிலாத
தவிசினைவியந்துநின்றார்.

(அ—ம்.) ஒருவன் – ஒரு புருடன், நினைவினால் செய்த – (உபாதி வைராக்கிய விவேகத்துவாரா

மனதை யிந்திரியவழி செல்லாது தடுத்து தேகத் துக்குள்ளிருக்கும் ஆகாசத்தில் நிறுத்தி அவ்வாகா சம் தைல தாரைபோல் நிலைபெற்ற) சங்கற்பத்தி ஞல் செய்த, நெஞ்சுள் ஆலயமே அன்றி – மனு லயத்திலெழுந்தருளுவ ரல்லாமல், வினையினுல்– கருவிகளைக் கொண்டியற்றும் தொழிலினுல், உல கர் செய்து–தேஹோஹ புத்தியை மேற்கொண்ட அஞ்ஞர்களால் செய்யப்பட்டு, விளங்கிய பணிகள் தம்முள் – விளங்காநின்ற இரத்தினகசித சிங்கா சன முதலிய கட்டடங்களுள், இணையதோடு உவ மை ஆதல்–மனுலயத்தோடு உவமை கூறப்படுதல், இல்லை என்று–எங்கணுமில்லையென்று, உம்பரெல் லாம் (மனுலயத்திலன்றி மற்றவிடங்களி லெழு ந்தருளப்படாரென்பதாக)சிவகணங்களனைவரும், தனையலால்-எங்கும் தனக்குத் தானே சமானமா யிருப்பதே யல்லாமல், நிகரிலாத–தனக்கொப்பிடு தற்கு வேறென்றில்லாத, தவிசினை வியந்து நின் ருர்–தைலதாரைபோனிலைத்த சூனியசிம்மாதனத் தில் உதயமாகு மகண்டாகாரவிருத்தியைக் கண்டு அதிசயித்திருந்தனர்கள்.

(உ)

## பிரத்தியக்ஷாநுபூதி விளக்கம்.

*கட்டளைக்கலித்துறை.*

உள்ளும்புறம்புமொழியா
வெளியன்றியொன்றுமிலை
உள்ளும்புறம்பெனச்சொல்லாத
தெப்பொருளொன்றுமிலை
உள்ளும்புறம்பெனச்சொல்லல்
வெளிபற்றியோர்ந்திலமோ
உள்ளும்புறம்பும்வெளிநாட்டங்
கொண்டுய்ம்மினுத்தமரே.

(அ-ம்.) உத்தமரே-நிஷ்காமிய புண்ணியபரிபாகமுடைய அதிகாரிகளே, உள்ளும் புறம்பும்-அகமும் புறமும், ஒழியா-நிறைந்து பரிபூரணமாகிய, வெளி அன்றி - ஆகாசமல்லாமல், ஒன்றும் இலை-அன்னியமென்பது இலவே இல்லை, உள்ளும் புறம்பு எனச்சொல்லாதது-அகம் புறமென வேறுபடுத்திச் சொல்லப்படாதது, எப்பொருள் - எவ்வகைப்பட்ட பதார்த்தங்களினும், ஒன்றுமிலை-ஒன்றுயினுமில்லை, உள்ளும் புறம்பு எனச்சொல்லல்-

அகம்புறமென வழங்கல், வெளிபற்றி ஓர்ந்தில மோ - ஆகாசத்திறைலென்று அறிந்திலீரோ, உள்ளும் புறம்பும் வெளி நாட்டம் கொண்டு - அகம் புறமென்கிற பேதப்பகுதி நீங்க ஆகாச நாட்டத்தில் மனதை தைலதாரைபோல் நிறுத்தி, உய்ம்மின்-அகண்டாகார விருத்தி யுதயத்தால் சங்கற்ப வாசனைக்ஷய மடையப்பெற்று பரமாநந்தப் பிராப்தியை யடைவீராக.

(3)

திருக்குறள் வெண்பா.

வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று.

(பரி-உரை.) மழை யிடையறாது நிற்ப உலகம் நிலைபெற்று வருதலான், அம்மழைதான் உலகத்திற் கமிழ்தமென் றுணரும் பான்மை யுடைத்து.

(அ-ம்) வான்-ஆகாசபாவனையானது, நின்று-(இடையறாது தைலதாரைபோல்) நிற்க, உலகம்-(உயிர்களிடத்தில்) ப்ரஹ்மாகாரவிருத்தி, வழங்கி வருதலான் - நிலைபெற்று வருகையினால், தான்-(அவ்வாகாசபாவனை தைலதாரைபோல் நிலைப்பதால் உண்டாகும் அப் ப்ரஹ்மாகாரவிருத்தி)

தானே, அமிழ்தம் என்று – (உயிர்களுக்கு) ப்ரஹ்மாநந்தமென்று, உணரல் பாற்று – அறியப்படுந் தன்மை யுடையது. (4)

வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்.

(பரி–உரை.) அவர் நம்மைப் பிரிந்துபோய நாள்கள் சுவரின்கணிழைத்தவற்றைத் தொட்டு எண்ணுதலான் என் விரல்கடேய்ந்தன; அதுவேயன்றி அவர் வரும் வழிபார்த்து என் கண்களும் ஒளியிழந்து புல்லியவாயின; இவ்வாறும் அவர் வரவுண்டாயிற்றில்லை.

(அ–ம்.) அவர்சென்றநாள் ஒற்றி – சற்குருநாதன் (உபதேசமொழிகளை அறிவித்த பின்னர் இதயாம் பரத்திலே லக்ஷியமாக நிறுத்தி) இடையறாது பழகுதலால், விரல்–(என்)மனோவிருத்திகள், தேய்ந்த – விருத்திகள் தேய்ந்து சூனியபாவமே தைலதாரைபோல் நிலைபெற்ற தன்றி வேறொன்றுங் காண்கிலன், கண்ணும்–(என்)மனமும், (அந்நிலையினின்றதால்)வாள்அற்று–(பாகியவொளியாகிய) அஞ்ஞானவிருள் நீங்கி, புற்கென்ற – (நீங்கவே)

அகண்டாகாரவிருத்தியாகிய சுத்தமனமாயின இவ்வாறுகியும் துரியநிலேஅடைவு உண்டாயிற்றில்லே.

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்ற
சார்தரா சார்தரு நோய். [றிந்துச்

(பரி-உரை.) ஒருவன் எல்லாப்பொருட்குஞ் சார்பாய அச்செம்பொருளேயுணர்ந்து இருவகைப் பற்றும் அற ஒழுகவல்லனுயின் அவனே முன் சாரக்கடவனவாய் நின்ற துன்பங்கள் அவ்வுணர்வொழுக்கங்களே அழித்துப் பின்சாரமாட்ட॥.

(அ-ம்.) சார்பு-(ஒருவன் எல்லாச்சங்கற்ப வுற்பத்திகளுக்கும்) சார்பாகிய அச்செம்பொருளே, உணர்ந்து-(சற்குரு கிருபாவீக்ஷண்ணியத்தால்) அறிந்து, சார்பு-மனோராச்சியம் இந்திரியவழி செல்லுதலாகிய சகலாவஸ்தையும், சுழுப்தியாகிய கேவலாவஸ்தையுமாகிய இருவகைப்பற்றுக்களும், கெட-நீங்கும்படி, ஒழுகின் - (அவ்விடத்தில் மனநிறுத்தி தைலதாரைபோல்) இடைவிடாப் பழக்கம் செய்யவல்லனுயின், சார்தரும் - (முன் அவனேச்) சேர்தற்குரியனவாய் நின்ற, நோய்-(ஜனனமரணப் பிரவாகத்) துன்பங்களே, அழித்

து - (அகண்டாகாரவிருத்தி யுதயமாகி ஜீவபோதத்தையும் அஞ்ஞானத்தையும்) நாசஞ்செய்து, மற்று சார்தரா - பின்சேரமாட்டா. (6)

## ஞானவாசிட்டம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அகமகமென்றனைத்துயிரினிடத்துமிருந்
தனவரதமுரைப்பதாகி
நிகழொளியாயான்மதத்துவமான
சொரூபத்தைநினைத்தல்செய்வார்
திகழிதயகுகையுறையுந்தேவதையை
விட்டயலே தெய்வந்தேடன்
மிகவரியகவுத்துவத்தையெறிந்துசிறு
மணிதேடும்வேட்கைபோலாம்.

(அ-ம்.) அனைத்து உயிரின் இடத்துமிருந்து - சுராசுரதிரியக்காதி சரீரங்களனைத்திலும் அந்தரியாமியாகவிருந்து, அகம் அகம்என்று-சப்தாந்தமான அகாராதியாகிய அம்ச மந்திரத்தை, அநவாதம் உரைப்பதாகி-சதாகாலமும் சப்திப்பதாய், நிகழ் ஒளியாய்-விளங்காநின்ற ஜோதிஸ் ஸொரூபமாகிய, ஆன்மதத்துவமான சொரூபத்தை-பூமாநந்த செம்பொருளை, நினைத்தல்செய்வார்-சிந்தனைசெய்

வாம் (இவ்வாறாக) திகழ் - பிரகாசிக்கின்ற, இதய குகை-ஹிதயாம்பரத்தில், உறையும்-வசிக்கும், தேவதையைவிட்டு - துரியசொரூபத்தைச் சிந்திப்பதைவிட்டு, அயலே தெய்வந்தேடல்-(சற்குருநாதனால் ஆன்மாவின் அடையும் அத்தியந்த துக்க நிவிர்த்திக்கு உபாயமாகிய சொரூபலக்ஷயார்த்தத்தை யுபதேசவாயிலா யுணர்ந்தபின்னரும்) அன்னியங்களில் தெய்வம் உளதாகக்கருதி யாத்திரை முதலிய க்ஷேத்திரங்களிலேயே சத்தியபுத்தியோடு தெய்வத்தைத் தேடிச்செல்லுதல் எத்தன்மைத்தெனில், மிகஅரிய-மிகவும் (பெறுதற்கு) அருமையான, கவுத்துவத்தை-(காத்திலிடம் கிடைத்திரா நின்ற மேலான) பதுமராகத்தை, எறிந்து - (கல்லெனநினைந்து) வீசி, சிறுமணிதேடும்-அறபலகறையைத் தேடுகின்ற, வேட்கைபோலாம் - ஆசைக்கு நிகராகும். (7)

## தேவிகாலோத்தரம்.

*கலிவிருத்தம்.*

வானம்போலவடிவிலதாயெங்கும்
ஆனதாகத்தியானம்பண்ணுதவன்
கானந்தன்னிலுலண்டெனக்கட்டுப்பட்
டீனமானபிறப்பிறப்பெய்துமே.

(அ-ம்.) வானம்போல-ஆகாசம்போல, வடிவிலதாய் - (தேகபாவம் தோன்றாது) மகா சூனியமாய், எங்கும் ஆனதாக-எவ்விடத்தும் வியாபித்துளதாக, தியானம்பண்ணாதவன் (தேகாலயத்துற்றசிதாகாசத்தை) ப்ரஹ்மாநந்தியசாக்ஷாத்காரபாவனை செய்யாதவன், கானந்தன்னில் - கானகத்தில், * உலண்டு என-உலண்டென்னும் புழுவானது தன்னுவினு லுண்டாக்கும் நூலிழையால் கூண்டை புதுப்பித்துக்கொண்டே அக்கூண்டினுள் தான் அகப்பட்டுக்கொண்டு மீண்டும் வெளிவர வழிகாணாமல் இறக்குந் தன்மை போல; கட்டுப்பட்டு (காமப்பிரவிருத்தியில்) பந்தப்பட்டு, ஈனமான-துன்பமான, பிறப்பிறப்பு - ஜனனமரணப்பிரவாகத்தை, எய்தும்-அடைவன். (8)

## சொரூபசாரம்

### வெண்பா.

தேகாலயத்திற்சிதாகாசதேவதையை
ஆகாசசாந்திமலராலே—யேகாந்த

* உலண்டு—கோற்புழு. வீசகோசக் கிருமிக்கும் ஆம்.

மந்திரத்தால்பூசைசெய்துமாதவரையாதரித்
சந்ததம்வாழ்வார்க்கார்சரி. [து

(அ-ம்.) தேகாலயத்தில்-தேகமாகிய கோயிலி ன்கண், சிதாகாசதேவதையை-(இருக்கும்) துரிய சிவத்தை,ஏகாந்தமந்திரத்தால்-சற்குருவால்பெற் றமகாவாக்கிய சிந்தனைத்துவாரா,ஆகாசசாந்திமல ரால்-(சிந்தனையுதிக்குமிடத்தையே நாடி நிற்றலி னுலுண்டாகிய)அகண்டாகாரவிருத்தியால்,பூசை செய்து - (அவ்விருத்தியை) இடையறாது பழகி, மாதவரை ஆதரித்து - துரியசொரூபத்தையடை ந்து, சந்ததம்வாழ்வார்க்கு-சதா சகச நிலையைப் பொருந்தியிருப்பவர்களுக்கு, ஆர்சரி(எவ்வகைப்ப தவிப் பேற்றின்க ணின்றுள்ளோரும்) ஒப்பாவர் களோ (ஒப்பாரும்மிக்காரும் இலர் எனறபடி.)(9)

## தே வா ர ம்.

உடம்பெனு மனையகத்து வுள்ளமே
தகழியாக
மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந்
திரிமயக்கி

இடம்படு ஞானத்தியா லெரிகொள
விருந்துநோக்கிற்
கடம்பமர் காளைதாதை கழலடி
காணலாமே

(அ-ம்.) உடம்பெனு மனையகத்து-பாஞ்சபூதத் தால் ஸ்தூலீகரித்த சரீரமென்னும் வீட்டினுள், உள்ளமேதகழியாக – உறையும் மனோகாசத்தையே (ஞானதீபம்விளங்குதற்பொருட்டு) அகலாகப்பா வித்து, மடம்படும்உணர்நெய்யட்டி-அஞ்ஞானசகி தமாய ஜீவபோதத்தை தைலதாரைபோல் அங் னே நிலைபெறுமாறு நிறுத்தி, உயிரெனும் திரிமய க்கி-(இடைவெளியின்றிப் பழகும் பெற்றியாலுள வாகும் சூன்னியப் பிரதீதியை) உணர்கின்றதெப் போதமோ அப்போதமயமாய் மனதைப்பரிணமிக் கச்செய்து, இடம்படு ஞானத்தீயால் (நிற்கும்பரி பாகஸ்திதியில்) பரிபூரணத்தன்மையாய் விளங்கும் ப்ரஹ்மாகாரவிருத்தியுதயமாகு மவ்விளக்கத்தால், எரிகொள இருந்து நோக்கில் – ஆணவமலப்பகுதி நிவர்த்தியை யடைகிற பரியந்தம் பகிர்முகப் பிர விருத்திக்கு இறையளவேனும் இடந்தராது நிரந் தர சமாதியில் பிரிதலின்றியிருக்கில், கடம்பமர்

காளை தாதை கழலடிகாணலாம்-நனவிற் சுழுப்தி யாநந்தமே தலைப்பட்டு ஜீவதுரியமாகிய கூடஸ்த போறிவாய்நிர்விகற்ப சமாதியையடைந்துபிராப்த வேறுபாட்டால் வெளிமுகப்படுங்காலத்து சர்வப தார்த்தங்களையும் தனதான்மவிளக்கமாய்ப் பார்த் துப்பழகும்பெற்றியாலுளவாகும்சகஜாநந்தவலை வால் மாயாமலம் துரிசறநீங்கி ஆங்குவிளங்கும் ப்ரஹ்மப்பிரகாச அகண்டவறிவாய்த் தலைப்பட்டு அசிபதாநுபவமாய் அமரலா மென்பது. (10)

திருமந்திரம்.

சாத்திர மோதுஞ் சதிர்களை விட்டுநீர் [ன்
மாத்திரைப் போதுமறித்துள்ளே நோக்குமி
பார்த்தவிப் பார்வை பசுமரத் தாணிபோல்
ஆர்த்த பிறவி யகலவிட் டோடுமே.

(அ-ம்.) சாத்திரம் ஓதும் சதிர்களை—கலைஞான ங்களை நன்குணர்ந்து அந்நெறியினொழுகாது பிறர் க்குதிருஷ்டாந்த தாஷ்டாந்தங்களை அரியபெரிய சுருதிகளினின்றுந்திரட்டி சமயோசிதமாக மேற் கோளுதகரித்துப் பெருமை பாராட்டிக் கொண்டு காலம்போக்கும் நாடகத்தொழிலை, விட்டு—நீக்கி,

நீர்-நீங்கள், மாத்திரைப்போது - நொடி நேரமாயினும், மறித்து - (மனதை யிந்திரியவழி செல்லவிடாது உபாதி வைராக்கிய விவேகத்தால்) தடுத்து, உள்ளே - இதயாம்பரத்தில், நோக்குமின் - (மனதை) நிறுத்துங்கள், பார்த்த இப்பார்வை-நிறுத்தின இம்மனம், பசுமரத்து ஆணிபோல்-பசுமையான மரத்திற்றைத்த ஆணியைப்போல், ஆர்த்த பிறவி-(நிறுத்திநிற்கும் அதீத பரிணாமத்தி லுண்டாகு மகண்டாகாரவிருத்திஞானத்தால் தொன்றுதொட்டு பிரவாகரூபமாய் வாராநின்ற)ஜனனமரணக்கட்டாகிய அவித்தை, அகலவிட்டு ஓடும்-உங்களைவிட்டு அறவே நீங்கும். (11)

உடலாங்குகையிலுணர்வாகும்பீடத்
தடலார்சமாதியிதயத்ததாக
நடமாடியகுகைநாடியயோகி
மிடையாகாவண்ணமேசாதிக்குமெல்லவே.

(அ-ம்.) உடல் ஆம் குகையில் - தேகமாகிய குகையில், உணர்வு ஆகும் பீடத்து - சங்கற்பமூற்பத்தியாகும் ஆசனத்தில் (இடத்தில்), இதயத்ததாக - சிதாகாஸவடிவாக, அடல் ஆர் - (மனதை இந்திரியவழி செல்லாது) வெற்றி பொருந்திய,

சமாதி – அமைதி நிலையை (சமாதி நிலையை), நடமாடிய – (இடையறாது) பழகி, குகைநாடிய– (தேகத்துக்குள்ளிருக்கும்) சிதாகாஸத்தைத் தேடியறிந்த, யோகி-இராஜயோகியாகிய ஞானி, மிடை ஆகாவண்ணம்–(பகிர்முகப்பட்ட காலத்துபாஹிய கிரியெயம் தனக்கு) அன்னியமென்கிற துவைதம் தோன்றாதபடி, மெல்லவே–(அகத்தில் விளங்கிய) சாத்வீக விளக்கமாகவே, சாதிக்கும் – பழகுவன், (பார்ப்பனென்பதாம்.) (12)

## தேவிகாலோத்தரம்.

### கலிவிருத்தம்.

பிறந்துபெற்றவறிவாற் பெறும்பயன்
நிறைந்தநீர்முகி னீங்கியவானென
அறிந்துதன்னை யமலவியாபகம்
செறிந்துநல்ல தியானத்திருத்தலே.-

(அ–ம்) நிறைந்த–(நீக்கமற) நிறைந்த, நீர்முகில்–நீரோடுங்கூடிய மேகங்களெல்லாம், நீங்கிய வான் என – நீங்கிய ஆகாசமானது, மாசில்லாமல் எப்படி பரிசுத்தமாயிருக்குமோ அதுபோல, அறிந்து–(இந்திரியவழி செல்லும் மனதை உபாதி வை

ராக்கிய விவேகத் துவாரா செல்லாது தடுத்து) இதயாம்பரத்தை பாவனை செய்து (அதில் தைல தாரைபோல் நிறுத்தி), தன்னை - (அப்படிநின்ற) மனம், அமலவியாபகம்-நின்மலமாகிய அகண்டா காரவிருத்தியை, செறிந்து - அடைந்து, நல்லதி யானத்து-ஆநந்த வடிவமாய் விளங்கும் துரிய நிலை யாகிய நிர்விகற்ப சமாதியில், இருத்தலே - நிலை பெற்றுநிற்பதே, பிறந்து - மக்களாய் ஜனனமெ டுத்து, பெற்ற அறிவால்-பகுத்தறிவைப் பெற்ற தினுல், பெறும்பயன் -அடையவேண்டிய (மேன் மையான) பிரயோஜனமாம். (13)

வள்ளலார்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மோகமெனுங்கடல்கடந்துமுத்தியெனுங்
கரைகாண்பான்முதிர்ந்தநாலாம்
பாகமெனுமலர்கொண்டுபத்தியெனும்
புனலாட்டிப்பரிந்துசாத்திச்
சோகமெனப்பாவித்துத்துரியமெனும்
விளக்கேற்றிச்சோகநீங்கி
யாகமெனுங்கோயிலின்கணறிவென்னுங்
கணபதிக்கேயன்புசெய்வாம்.

(அ-ம்.) மோகம் எனும்-துன்பமாகிய, கடல்கடந்து, (ஜனனமரணப்பிரவாக) சமுத்திரத்தைத் தாண்டி, முத்திஎனும்-மோக்ஷமென்னும் (விதேககைவல்லியமாகியபட்டினத்தினடைவிற்கு), கரைகாண்பான்-முடிவாகிய துரிய நிலைவாய்ப்பின்பொருட்டு, சோகம் என-சிவம் நானென, பாவித்து-(இடையறுப் பரைநினைவாய்) தியானித்து, முதிர்ந்த - (அத் தியானமு மிறந்து) மேன்மையான, (இடத்திலுண்டாவதாகிய) நாலாம்பாகம் எனும்-ஞானபூமி எழனுள் நான்காவதாகிய சத்வாபத்தியென்னும், மலர்கொண்டு-அகண்டாகாரவிருத்தியில் பிரிதலின்றி யிருந்துகொண்டு, பத்தி எனும் புனல் ஆட்டி - இடையறுது தைலதாரைபோற் பழகப்பழக அப்பழக்கமேலீட்டிலுள்வாகும் நனவிற்சுழுப்தியானந்தத்திற்றோய்ந்து, பரிந்துசாத்தி-பிரிதலின்றி நிற்பனவாகிய நிர்விகற்ப சமாதியையடைந்து, துரியம் எனும் விளக்கு ஏற்றி-ஆண்டு விளங்குந் தூரியநிலைபிராப்தியி னதீதத்தில் ஐக்கியத்தன்மையாகிய துரியாதீதமென்னும் விதேககைவல்லியத்தை அடைந்து, சோகம்நீங்கி-(இப்பெற்றியான்)சங்கற்பவாசனாக்ஷயத்தினைத்தியந்த

நிவிர்த்தியைப் பெற்று (நிரங்குச திருப்தனு யிருத்தற்பொருட்டு சற்குருநாதன்பால் உபதேசவுளவுகளை நன்குணர்ந்து மனோலய சாதகஞ்செய்யத் தொடங்கும் ஜிஞ்ஞாசுகளனைவரும் பிரதமத்தில் ஏகாந்தஸ்தலத்தை யடைந்து யோகநூலிற் கூறிய படி சரீரத்தை செவ்வனே நிறுத்தி கண்களை மூடிக்கொண்டு இந்திரிய வழிமனதை விடாது), ஆகம் எனும் கோயிலின்கண் அறிவு என்னும் கணபதிக்கே—தேகாலயத்தினுள் விளங்கும் சங்கற்ப உற்பத்தி ஸ்தானத்திலேயே, அன்புசெய்வாம்—மனதை பொருந்தும்படி நிறுத்துவாம். (14)

## பிரபுலிங்கலீலை.

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

இருந்தபடிகுகேசனை நீயறிவையெனி
  னின்பிறவியெனுநோய்தீர்ந்து
பொருந்துறுவைபேரின்பமென்றமலன்
  கூறவவன்போற்றியெந்தாய்
பரிந்தருள்செய்குகேசனெனுமொழிப்பொ
  த்துகூறப்படுவான்யாவன் [ருளே
தெரிந்துணரவருள்செய்வாயென்றுதொழ
  வெம்பெருமான்செப்புகின்றான்.

(அ-ம்.) இருந்தபடி - (மனதை யுதித்தவிடத்தில் நிறுத்தி யவ்விடத்தில் எத்தன்மையாயிருக்க வேண்டுமோ) அவ்வண்ண மிருந்து, குகேசனே - (அவ்விடத்தில் விளங்கும்) குகேசனென்பவனே, நீ அறிவை எனின்-நீயுணர்வாயாயின், நின்பிறவி எனும் நோய்-உனக்குண்டாகும் ஜனனமரணப்பிரவாகத் துன்பத்துக்கேதுவாகிய சங்கற்பவாசனைகளென்கிற வியாதியினின்று, தீர்ந்து-நீங்கப்பெற்று, பேரின்பம்-ப்ரஹ்மாநந்தத்தை, பொருந்துறுவை என்று-அடைவாயென்று, ◦அமலன்கூற-அல்லமாப்பிரபுவாகிய குருநாதன் (அநுக்கிரகித்துச்) சொல்ல, அவன்-அக்கோரக்கன், போற்றி-துதித்து, எந்தாய்-(ஜனன மரணப்பிரவாகத் துன்பக்கடலிலிருந்த வென்னை முத்திக்கரையேற்ற வந்தருளிய) எமதுகர்த்தனே, பரிந்து அருள்செய் - மிக்கவன்போடு அருள்செய்க, குகேசன் எனு மொழிப்பொருள்-குகேசனென்னு மொழிக்கருத்தம், எது-யாது, அது கூறப்படுவான் யாவன்-அம்மொழியால் பெயரிட்டழைக்கப்படுபவன் யாவன், தெரிந்து உணர - ஐயந்திரிபின்றியான் உணரும்படி, அருள்செய்வாய் என்று-அநுக்கிரகிக்கவேண்டுமெ

ன்று, தொழ-வணங்க (அதற்கு), எம்பெருமான்-எமது குருநாதனாகிய அல்லமன், செப்புகின்றான்-திருவாய்மலர்ந் தருளுகின்றான். (15)

குகையிதயமதன்கணமரிறையீச
னென்றுபொருள்குறித்துக்கொண்மோ
நிகழனையகுகேசமொழியுடையன்யான்
றனெனவேநிமலன்கூற
வகமகிழ்முகமலர்ந்துசித்தனறைகுவ
னீயேயாகிலுன்றன்
முகையவிழ்மென்மலர்க்கரத்திற்சிவலிங்கங்
கொண்டதென்கொன்மொழிதியென்றான்.

(அ-ம்.) குகை - குகை எனப்படுவது, இதயம் என்று-இருதயாம்பரமென்றும், அதன்கண் - அவ் விருதயாம்பரத்தில், அமர்-எழுந்தருளிய, இறை-துரியத்தை, ஈசன் என்று - ஈசனென்றும், பொருள் - அர்த்தமாக, குறித்துக் கொண்மோ - குறித்துக்கொள்ளுதி, நிகழ் - (இருதயாம்பரத்தில்) விளங்காநின்ற, அனைய - அத்தகையதாகிய, குகேச மொழியுடையன்-குகேசனென்னுஞ் சப்தத்துக்கு

ரிய துரியசிவன், யான்தான் எனவே - நானே யென்று, நிமலன்-அல்லமாப்பிரபு, கூற-சொல்ல, அகமகிழ முகமலர்ந்து-உள்ளங்களிப்போடு கூடிய முகமலர்ச்சி கொண்டு, சித்தன் - கோரக்கன், அறைகுவன் - சொல்லத்தொடங்கி, நீயேயாகில்-துரிய சிவம் நீயே யாகில், உன்தன்-உன்னுடைய, முகை அவிழ் - அரும்பென்னு முறுக்கவிழ்ந்த, மெல் மலர் - மெல்லிய தாமரை மலர்போன்ற, கரத்தில் - உள்ளங்கையில், சிவலிங்கம் கொண்டது-சிவலிங்கத்தை யேற்றிருப்பது, என் கொல்-யாது காரணம், மொழி என்றான்-சொல்லென்று கேட்டனன்.

(கசு)

---

☞ மகாவாக்கியத்தை ஜபிக்காமல் ஜபித்தல் என்பதற்குப் பிரமாணம்.

---

தேவாரம்.

முன்னமவனுடையநாமங்கேட்டாள்
மூர்த்தியவனிருக்கும்வண்ணங்கேட்டாள்
பின்னையவனுடையவாரூர்கேட்டாள்
பெயர்த்துமவனுக்கேபிச்சியானாள்

அன்னையையுமத்தனையுமன்றேநீத்தாள்
அகன்றாளகலிடத்தாராசாரத்தைத்
தன்னைமறந்தாடன்னாமங்கெட்டாள்
தலைப்பட்டாணங்கைதலைவன்றாளே.

[இளம்பருவத்திலேயே தன்னைப்பிரிந்து யாத்திரைசென்ற நாயகன் நெடுநாளாகியும் வரக்காணாது புருஷ சையோகமற்று சோகமுற்றிருந்த நாயகியைத் தோழிபார்த்து நாயகன் பெயரைக்கூறி அதோ வருகின்றானென, நாயகியானவள் எத்திக்கி லெனவினாவி, தோழியாற் றிசையறிந்தந்தத் திக்கிலேயே சிந்தனைவைத்து நோக்க நோக்கப் புருஷன் சமீபத்தில் வருதலைக்கண்ணுறவே மயிர்ச் சிலிர்த்தவிட்டு, அவன் தலைப்பட, (முற்பட) தாய் தந்தையரையும் மறந்து பிறிதியாதொன்றுந்தோன்றா வண்ணம் பித்துகொண்டு அச்சத்தைவிட்டு தன்னையு மறந்து பரவசமுற்றாளென்பதை முன்னிட்டு:—

மனதிற்கு, { ஆத்மாவை நாயகனாகவும்<br>ஜீவனை தந்தையாகவும்<br>அவித்தையைத் தாயாகவும்<br>விவேகத்தைத் தோழியாகவும்

தேஹத்தை அவித்யாபுரமாகவும்,

உருவகித்து தேக வயப்பட்ட ஆத்மஸொரூபம் இந்திரிய சகிதமாய் விடயங்களின்மீது யாத்திரை செல்லும் பெற்றியான், அவ்வாத்ம ஸொரூபத்தின் எதார்த்த நிலையைக்காணுது சோக மோக முற்றிருக்குஞ் சமயத்தில் அநந்த ஜன்ம புண்ணிய பரிபாக விசேடத்தாற் சற்குருநாதன் வாய்க்கப்பெற்று, அன்னேன்பால், ஆத்ம ஸொரூபத்தின் நிஜஸ்திதியை யடைதற்குரிய வுபதேச வுளவுகளை யறிந்தபின் ஏகாந்தஸ்தலத்தை யடைந்து மனேலய சாதகஞ்செய்யத் தொடங்கிப் பழகும்போது ஆத்ம ஸொரூபத்தின் பிராப்தி நிகழ்வதற்குமுன் ஆண்டுண்டாகும் பிரதிபந்தங்களுக்குச் சோர்வுபடும் மனதை யச்சமயம் விவேகத்தால், யூகித்து சற்குரு கிருபாவீக்ஷண்யத்தால் பெற்ற வருட்பார்வையிலேயே திருப்பி தைலதாரைபோனிற்கும் பரிபாக ஸ்திதியிலுளவாகும் அநுபவங்களைப்பெற்று ஸொரூபத்தோடு மனம் இரண்டறக் கலத்த லென்னுந் துறையி லித்தேவாரங் கூறப்பட்டிருக்கின்றது.]

(அ-ம்.) முன்னம் அவனுடைய நாமம் கேட்டான் - ஆத்ம சையோகமற்று இந்திரியவழி

சென்று தேஹோஹமென்றறிந்து சோக மோக முற்றுழலும் மனமானது (அநந்த ஜன்மங்களிற் செய்திராநின்ற நிஷ்காமிய புண்ணிய பரிபாக மேலீட்டால் ச ற் கு ரு நா த ன் கிடைக்கப்பெற் றன்னோனு லநுக் கிரகிக்கப்பட்ட மஹாவாக்கிய (ஆத்மநாட்டம்) அநுசந்தான வுளவுகளை நன்கு ணர்ந்தபின் ஏகாந்த ஸ்தலத்தையடைந்து யோக நூலில் விதித்த வ ண் ண ம் தேகத்தைச் செவ் வனே நிறுத்தி கண்களை மூடிக்கொண்டு மனதை யிந்திரியவழிவிடாது தடுத்து) பி ர த ம த் தி ல் ப்ரஹ்ம சாக்ஷாத்காரத்தையே சிந்தித்து, மூர்த்தி அவன் இருக்கும் வண்ணம் கேட்டாள் - அப்படி சிந்திக்கும் சிந்தனையில் மனதை நிறுத்தாது அச் சப்த முதிக்குமிடத்திலேயே நிறுத்தி, பின்னை அவனுடைய ஆரூர்கேட்டாள் - தைல தாரை போல் நாட்டம் நி லை த் த பி ற கு உள்ளத்தில் ப்ரஹ்ம ஸொரூபத்தின் லேசமாகிய ஒருவிதக் குளிர்ச்சியுண்டாகி யதிலேயே மனம் பிரிதலின்றி யிருக்க, பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்- மீண்டும் அப் பிரஹ்ம ஸொரூபத்திலேயே மனம் ஏகாக்கிரதையைப் பொருந்தி, அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள் - அகண்டாகார

விருத்தியுதயமாகி அவித்தையையும் ஜீவபோதத்தையு மக்கணமே நாசஞ்செய்து, அகல் இடத்து ஆராசாரத்தை அகன்றாள் - நாசமானவிடத்து ஆநந்தபோதம் ஜனித்து அசத்பிரதீதிகள் ஒன்றுந்தோன்றாது (அதனால்), தன்னைமறந்தாள்— மனோவிளக்கமற்று, தன்னுமம் கெட்டாள்—மனம் என்கிற பேரும்நீங்கி, தலைப்பட்டாள் நங்கைதலைவன்றாள் - அதனால் திரிபுடிரகிதமான நிர்விகற்ப சமாதியையடையும்.

(௯)

## கைவல்லியம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கடநீரின்மேகநீரிற்கண்டவா
 னிரண்டும்பொய்யே
குடவானும்பெரியவானுங்
 கூடியொன்றுமெப்போதும்
இடமானபிரமஞ்சாக்ஷி.
 யிரண்டுமெப்போதுமேகம்
திடமாகச்சுவாநுபூதி
 சிவோகமென்றிருந்திடாயே.

(அ - ம்.) கடநீரில் - கடஜலத்திலும், மேகநீரில்—மேகஜலத்திலும், கண்டவான் இரண்டும்— பிரதிபிம்பித்திருக்கின்ற ஜலாகாசம் மேகாகாசங்

களிரண்டும், பொய்யே - (உபாதிகளாற் கற்பிதங்களாதலால் மித்தையே, குடவானும்-கடாகாயமும், பெரியவானும் - மகாகாயமும், எப்போதும்-காலத்திரயத்திலும், கூடி-கலந்து (பேதமில்லாமலெப்படி), ஒன்றும் - ஏகமோ (அப்படி), இடம் ஆன-எவற்றிற்கு மிடமாயுள்ள (அதாவது வியாபக மென்றபடி), பிரமம்-ப்ரஹ்மமும், சாக்ஷி-கூட ஸ்தனும், இரண்டும் - (ஆகிய) இரண்டும், எப்போதும்-சர்வகாலமும், ஏகம் - ஐக்கியமேயாம் (ஆகலின்), திடம் ஆக - இவ்வைக்கிய வநுபவம் சம்ஸயாதி பிரதிபந்தமின்றித் திடமாதற்பொருட்டு, சிவோகம் என்று-சிவமே நான் நானே சிவமென்று நிதித்தியாசித்து, சிவாநுபூதி-நிதித்தியாசன பரிபாக வசத்தாலுளதாகும் அத்வைதாவஸ்தாநு ரூபமான ப்ரஹ்மாநு பூதியில், இருந்திடாய் - இருந்திடுதி. (உ)

வள்ளலார்.

கலி விருத்தம்.

சிந்தனைபுறஞ்செலாச் சிவோகம்பாவனை
சந்ததமுளுற்றிடிற் சமாதிவந்துறும்
அந்தநற்சமாதியா லறிவுமேலிடும்
இந்தநன்னிலையிலே யிருக்கற்பாலையே.

(அ-ம்.) சிந்தனை புறம்செலா-மனதை இந்திரியக் கூட்டங்களிற் செலுத்தாது வைராக்கியத்துடன் ஹிருதயாம்பரத்தில் நிறுத்தி, சிவோகம் பாவனை-சிவமே நான் நானே சிவமென்கிற பாவ னுலக்ஷியத்தை, சந்ததம்-சதாகாலமும், உஞற்றிடில்-ஊக்கத்தோடு அப்பியாசஞ்செய்யின், சமாதி வந்துறும் - மனம் ஸொரூபத்தில் ஏகாக்கிரதையடையும், அந்த நல் சமாதியால் – (அவ்விடத்திலுண்டாகாநின்ற) அவ்வாநந்தத்திலிடையறு பரிசயஞ் செய்வதால், அறிவுமேலிடும் – ஆநந்தாதீத நிலை வாய்க்கும், இந்த நல் நிலையிலே-இவ்வாநந்தாதீத ஸ்திதியிலேயே, இருக்கற்பாலையே-பிரிதலின்றி யிருக்கக்கடவாயாக. (௩)

ரிபுகீதை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அங்கமுதலனுவுமிலாதகண்டாகார
மாகியுளவத்துவிதபரசிவத்தைச்
சங்கமறச்சந்ததமுஞ்சிவோகமென்னுஞ்
சலியாதபாவனையாற்பூசைசெய்து
துங்கபரசிவகருணைதிடமாய்ப்பெற்றுத் [து
தொடருமனோவிகற்பமெலாமுடனேதீர்ந்

பங்கமிலாப்பரமசிவபோதங்கூர்ந்து
பரமசிவபத்தனுநானுனேனையா.

(அ—ம்.) ஐயா – சற்குரு நாதனே! அங்கமுதல்-தேஹோஹவுபாதிகள், அணுவும் இலாது-இறையளவேனுமிலாத, அகண்டாகாரமாகியுள – பரிபூரணமாய்விளங்குகின்ற, அத்துவித – துவைதப்பிரதீதியற்ற, பரசிவத்தை –ப்ரஹ்ம ஸொரூபத்தை, சங்கம் அற – இந்திரிய கூட்டங்களில் மனதை இறையளவேனும் செல்லாவண்ணம் (வைராக்கியத்தோடு ஹிருதயாம்பரத்தில் நிறுத்தி), சந்ததமும் – சதாகாலமும், சிவோகம் என்னும் – சிவமே நான் நானே சிவம்என்னும், பாவனையால்-பாவனுலக்ஷியத்தில்,சலியாத–சோர்விலாத,பூசைசெய்து -(பிரிதலின்றிய) அப்பியாசஞ்செய்து, (அதனது பரிபாகத்திசையிலுளவாகும்) துங்க-பரிசுத்தமாகிய, பரசிவ கருணைதிடமாய்ப்பெற்று-அகண்டாகார விருத்தியில் நிலைபெற்று, தொடரும்-(அதன்பின் தொன்றுதொட்டு) தொடாநின்ற, மனோவிகற்பம் எலாம் – மனோசஞ்சலமாகிய சங்கற்பவாசனைகளெல்லாம், உடனே தீர்ந்து–அக்கணமே நாசமடைந்து, பங்கம் இலா – எஞ்சுதலில்லாத

(குறைவில்லாத), பரமசிவபோதம் கூர்ந்து – மேலான சிவபோதத்தை யடைந்து, நான்–(ஜீவ போதமாயிருந்த) யான், பரமசிவ பத்தன் ஆனேன்-ப்ரஹ்மாநந்தனு யிருக்கின்றேன். (சு)

பிரபுலிங்கலீலை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நெஞ்சஞ்சோகம்பாவனையினிற்க
நிறுத்திவிடயங்க
ளஞ்சுந்துறவாத்துறந்தசிவயோகியொருவ
னடியிணையிற்
றுஞ்சுந்திருமான்முதலமருள்ளமவனைத்
துதித்திறைஞ்சா
தெஞ்சுந்தவமாமுனிவரிலை
யெனநான்மறையுமியம்புமால்.

(அ-ம்.) நெஞ்சம்-மனம், சோகம்பாவனையில்-சிவனே நான் நானே சிவனென்னும் பாவனு லக்ஷிய நிலையில், நிற்க-தைலதாரைபோல் கலங்காது நிற்க, நிறுத்தி-இடைவிடாது நிறுத்தி, விடயங்கள் அஞ்சும்-சப்த ஸ்பரிச ரூப ரச கந்தமாகிய வைந்துவிஷயங்களையும், துறவாத்துறந்த-(இருவகைப்பற்றும் ஆன்மாவையன்றி யின்றாகவும் அன்றாகவுமுள்ளவாறு கண்ட விடத்து பிராரத்

திவ வசத்தாய் நுகர்தற்குரிய புலன்களநுபவம் நிகழினும் அப்போகங்களில்சாமான்னியவிசேஷ பாவமற்ற, சிவயோகி - சகஜசமாதியைத் திடமாகப்பெற்று கிருதகிருத்தியனுன, ஒருவன்-ஒப்பற்ற புருடனுடைய, அடியிணையில்-உபயபாதங்களில், திருமால் முதல் - விஷ்ணுமுதலிய, அமரர் உள்ளம் - தேவர்களின் மனம், துஞ்சும் - ஆநந்த நித்திரை செய்யும், (அதாவது பரவசப் பட்டிருக்குமெனின்) அவனை-அங்ஙனமாகிய சிவயோகியை, துதித்து இறைஞ்சாது - தோத்திரஞ்செய்து அடைக்கலம் புகாமல், எஞ்சும்-மிகுதியாய்நின்ற, தவமாமுனிவர்-தவ நிலையிற் சிறந்த ருஷிகள், இலை என - இல்லையென்று, நான்மறை - நான்கு வேதங்களும், இயம்பும் - (இடையறாது) முறையிடாநிற்கும். (௫)

## சங்கராசாரியர்ஷட்கம்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அனித்தியபூதத்தேகநானன்று
விந்தியத்தாங்கநானன்று
நனித்தவாங்காரபிராணவர்க்கங்களன்று
நற்புந்தியுமன்று

தொனித்திடுந்தாரம்மனைசெல்வங்களுக்குத்
துாமாஞ்சாக்ஷிநானென்றுந்
தனித்துநித்தியமாய்ப் பிரத்தியவாள்மாவாம்
தற்பதப்பொருளதாஞ்சிவோகம்.

(அ-ம்.) அனித்திய-நாசமடைகின்ற, பூததேகம் பஞ்சபூதங்களால் ஸ்தூலீகரித்த அன்னமயகோசம், நான் அன்று-ஆத்மஸொரூபமல்ல, இந்திய- இந்திரிய, தரங்கம்-சமுதாயகலக்கங்களும், நான் அன்று - ஆத்மஸொரூபமல்ல, நனித்த - உதவியற்ற, ஆங்காரம் - அகங்காரதத்துவமும், பிராண வர்க்கங்கள் அன்று-பிராணசமுதாயங்களும் ஆத்மஸொரூபம் அல்ல, நல் - நன்மையைத் தருவதற்கேதுவாகிய, புந்தியும் அன்று - புத்திதத்துவமும் ஆத்மஸொரூபமன்று, தொனித்திடும்-(ஜனனமாணப் பிரவாகத் துன்பமுண்டாக்க) முதற்காரணமாயுள்ள முச்சாமக்கிரியைகளென கோஷிக்கும், தாரம்-மனைவி, மனை-மண், செல்வம் - பொருள் (ஆகிய விம்மூவாசையின் அவாவைமேற்கொண்ட புருடர்களுக்கு), தூரமாம் - எட்டப்படாததாயுள்ள, சாக்ஷி நான் என்றும்-சாக்ஷித்தன்மையாந்தனது மனதை நிறுத்தி, தனித்து - களங்காகித

மாய், நித்தியமாய் - அழிவற்றதாயும், பிரத்திய ஆன்மாவாம்-பிரத்தியேக ஸொரூபமாம், தற்பதப் பொருளது - ஐக்கியநிலையை, ஆம் - அடையும் பொருட்டு, சிவோகம் - சிவமே நான் நானே சிவமென்னும் பாவனுலக்ஷியத்தில் நிறுத்துவாம். (சு)

வள்ளலார்.

வெண்பா.

கல்லாலமர்ந்தாரைக்கண்மூன் றுடையாரைச், சொல்லாமற்சொல்லவந்த தூயாரைப் —பல்காலும், சிந்திசிவோகஞ்சிவோகஞ் சிவோகமென, வந்திபிறப்பறுமாணு.

(அ-ம்.) மாணு-மாணுக்கனே! கல் ஆல் - கல்லால விருக்ஷத்தினடியில், அமர்ந்தாரை-தக்ஷிணுமூர்த்தங் கொண்டெழுந்தருளினவராயும், கண்மூன்று உடையாரை - திரிநேத்திரங்களை யுடையோராயும், சொல்லாமல் சொல்லவந்த (சநகர்-சநந்தரர்-சநாதரர் - சநற்குமாரர் என்கின்ற நால்வரது தர்க்கங்களையும் சின்முத்திராங்சமான மௌனநிலையிலிருந்து நீக்கி) சுவாநுபவத்தையுணர்த்தவந்த, தூயாரை - பரிசுத்தமுடையாராயுமுள்ளவரை (அகத்தின்கண் நிதர்சனமாய் உண

ரும் பொருட்டு), பல்காலும்-அநவரதமும், சிவோ கம் சிவோகம் சிவோகம் என-சிவமே நான் நானே சிவமென்று, (சதா பரைாவினைவாய்) சிந்தி - மண னஞ் செய்யக்கடவாய் (இவ்வாறு செய்யும் பரி பாகதிசையில் சமாதிநிலையை யடைந்து அத்தறு வாயில் அகண்டாகார விருத்தியுதயமாகி), வந்தி பிறப்பு அறும்-வருத்துகின்ற ஜனனமரணப் பிர வாக துக்கங்களுக் கேதுவாகிய சங்கற்பமும் வாச னையும் க்ஷயத்தை யடையும். (எ)

பிரபுலிங்கலீலை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வானமல்லேன்வளியல்லே
னழனீரல்லேன்மண்ணல்லேன்
ஞானமல்லேன்வினையல்லே
ஞனே சிவமென்றெண்ணிநோ
னானமில்லாவொருசிவமே
யாவனிவ்வாறுன்னுதா
னீனமெல்லாமுடையவுடம்
பெடுத்துச்சுழலுமெஞ்ஞான்றும்.

(அ-ம்.) வானம் அல்லேன் - ஆகாயமல்லன், வளி அல்லேன் - காற்றுமல்லன், அழல்நீர் அல்

லேன்—அக்கினியும் அப்புமல்லன், மண் அல்லேன்—பிருதிவியுமல்லன், ஞானம் அல்லேன்—புத்திதத்துவமுமல்லன், வினை அல்லேன்—மனோதத்துவங்களிலொன்றுமல்லன் (ஆகலின்,) நானே சிவம் என்று எண்ணினேன்—(மேற் கூறியவைகளுக் கெல்லாம் விலக்ஷணமாக நின்று) நானே சிவம் சிவனே நானென்று திடங்கொண்டுமனனஞ்செய்வோன், ஊனமில்லா — தேகோபாதிகளில்லாத, ஒரு—ஒப்பற்ற, சிவமே யாவன் — சிவவடிவாகவே விளங்குவன், இவ்வாறு—இவ்வண்ணம், உன்னுதான்—மனனஞ் செய்யாதவன், ஈனம் எல்லாம் உடைய—எல்லாத் துன்பமும் ஒருங்கேதிரண்டு வடிவமாகவுடைய, உடம்பு — தேஹத்தை, எஞ்ஞான்றும்—சதாகாலமும், எடுத்து — பிரவாகரூபமாக எடுத்து, சுழலும் — (அதனோடு இன்பதுன்பத்தாக்குகளில்) சுழலாநிற்பன். (அ)

☞ சப்தம் உதிக்கிற இடத்தையே நாடுதல் என்பதற்குப் பிரமாணம்.

திருக்குறள் வெண்பா.

இலங்கிழாயின் றுமறப்பினென்றேண்மேற்
கலங்கழியுங்காரிகைநீத்து.

(பரி—உரை.) விளங்காநின்ற விழையிழையுடையாய், காதலரை இன்று யான் மறப்பேனாயின், மேலுங்காரிகையென்னைநீப்ப என்றோள்கள் வளை கழல்வனவாம்.

(அ-ம்.) இலங்கு இழாய் இன்றுமறப்பின் - சற்குருவாற்பெற்ற அருட்பார்வையில்மனதை தைலதாரைபோல் நிறுத்திப் பழகுங்காலத்து சப்தஸ்பரிசாதிகளிறந்து தைலதாரையென்கிற நினைவுமற்று எதார்த்தசுகமு முதயமாகாமல் பகிர்முகப்படப் பிரியமுமில்லாம லிருக்கு மத்தறுவாயில் சுழுப்தி யல்லது மனோராஜ்ஜியம் வரக்கூடும், அப்போது தீவிரதரனாகிய ஜிஞ்ஞாசு, மேற் சொல்லியவைகளுக்கு ஆதாரமாகியும், உளதை யிலதாகவும் இலதை யுளதாகவு முண்டுபண்ணும் அகடிதகடனா கடன சாமர்த்தியமுள்ள மாயையே எனக்கண்டு அதன்வயப்படாது அம்மாயாமலத்தை விளக்கி வைக்கும் ஆன்ம விளக்க நாட்டத்துடன் எதிரிட்டு நோக்கி, இச்சமயத்தில், அந்நாட்டத்தையே இடையறா நோக்காது பிரிவேனாயின், மேல் - பிரிந்த உத்தரக்ஷணத்தில், காரிகை—தைலதாரை போல் நிலைத்தவிடத்திலுளதாய வோர்வித) விஸ்

ராந்தியானது, நீத்து - (என்னைவிட்டு நீங்க, என் தோள்-எனதுமனம், கலங்கழியும்-துன்பமடையா நிற்கும், (ஆகையால் எத்தகைய துன்பம்வரினும் இடையருது நோக்குதலே தகுதியுடைத்தாம்.)

தாயுமானவர்பாடல்.

கண்ணி.

வானந்தமண்ணினந்தட்வைத்துவைத்துப்
பார்க்கவெனக், கானந்தந்தவரசேபராபரமே.

(அ-ம்.) மண்ணின் - பிருதிவிக்கு, அந்தம் - முடிவாகிய ஆகாசத்தில், வைத்துபார்க்க-மனதை நிறுத்தல், தைலதாரைப்போலிருக்க (அதனல்) வான் அந்தம் - ஆகாசத்திற்குமுடிபாகிய ஸொரூபத்தில், வைத்து - மனம்பொருந்த, எனக்கு - எனக்கு, ஆநந்தம் தந்த-ப்ரஹ்மாநந்தத்தை விளைவிக்கச்செய்த, அரசே - அகண்டாகார விருத்தியே, பராபரம் - மேலான துரியஸொரூபம்.(௨)

வண்டாய்த்துவண்டுமௌனமலரணைமேற்
கொண்டார்க்கோவின்பங்கொடுப்பாய்பராபரமே.

(அ - ம்.) மௌனமலர் அணைமேல் - சங்கற்ப உற்பத்திஸ்தானத்தில், வண்டாய் துவண்டு - மனதை தைலதாரைபோற் பிரிதலின்றி நிறுத்தி

சப்த ஸ்பரிசாதிகளிறந்து, கொண்டார்க்கோ - மனம் ஸொருபத்தி லேகாக்கிரதைய டைந்து அகண்டாகார விருத்தி யுதயமாகி யவித்தை நாச மடைந்தவ்விருத்தி நிலைபெற்றவர்களுக்கே, இன்பம் கொடுப்பாய் பராபரமே - நனவிற் சுழுப்தி யாநந்தம் அதிகரித்து அதனிறுதியில் துரிய ஸொரூபமாய் விளங்கும். (௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உறவுடலையெடுத்தவரிற்பிரமாதியேனு
முனையொழிந்துதள்ளற்
கறவுமரிதரிதன்றேஷிகபரமுமுன்னை
யன்றியாவதுண்டோ
வறிதிலுன்னையசத்தென்னல்வழக்கன்று
சத்தெனவேவாழ்த்துவேனென்
சிறுமைகெடப்பெருமையினின்சென்ம
தேயத்தினினீசெல்லல்வேண்டும்.

(அ - ம்.) உற - மிகவும், உடலை எடுத்தவரில்- தேஹோஹ உபாதியைமேற்கொண்டவர்களிலே,

ராந்தியானது, நீத்து – (என்னைவிட்டு நீங்க, என் தோள்–எனதுமனம், கலங்கழியும்–துன்பமடையா நிற்கும், (ஆகையால் எத்தகைய துன்பம்வரினும் இடையறாது நோக்குதலே தகுதியுடைத்தாம்.)

## தாயுமானவர்பாடல்.

### கண்ணி.

வானந்தமண்ணினந்தட்வைத்துவைத்துப்
பார்க்கவெனக், கானந்தந்தவரசேபராபரமே.

(அ–ம்.) மண்ணின் – பிருதிவிக்கு, அந்தம் – முடிவாகிய ஆகாசத்தில், வைத்துபார்க்க–மனதை நிறுத்தல், தைலதாரைப்போலிருக்க (அதனால்) வான் அந்தம் - ஆகாசத்திற்குமுடிபாகிய ஸொரூபத்தில், வைத்து – மனம்பொருந்த, எனக்கு – எனக்கு, ஆநந்தம் தந்த–ப்ரஹ்மாநந்தத்தை விளைவிக்கச்செய்த, அரசே – அகண்டாகார விருத்தியே, பராபரம் – மேலான துரியஸொரூபம்.(உ)

வண்டாய்த்துவண்டுமௌனமலரணைமேற்
கொண்டார்க்கோவின்பங்கொடுப்பாய்பராபரமே.

(அ – ம்.) மௌனமலர் அணைமேல் – சங்கற்ப உற்பத்திஸ்தானத்தில், வண்டாய் துவண்டு – மனதை தைலதாரைபோற் பிரிதலின்றி நிறுத்தி

சப்த ஸ்பரிசாதிகளிறந்து, கொண்டார்க்கோ - மனம் ஸொருபத்தி லேகாக்கிரதையடைந்து அகண்டாகார விருத்தி யுதயமாகி யவித்தை நாசமடைந்தவ்விருத்தி நிலைபெற்றவர்களுக்கே, இன்பம் கொடுப்பாய் பராபரமே - நனவிற் சுழுப்தியாநந்தம் அதிகரித்து அதனிறுதியில் துரிய ஸொரூபமாய் விளங்கும். (ரு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உறவுடலையெடுத்தவரிற்பிரமாதியேனு
முனையொழிந்துதள்ளற்
கறவுமரிதரிதன்றேஷிகபரமுமுன்னை
யன்றியாவதுண்டோ
வறிதிலுன்னையசத்தென்னல்வழக்கன்று
சத்தெனவேவாழ்த்துவேனென்
சிறுமைகெடப்பெருமையினின்சென்ம
தேயத்தினினீசெல்லல்வேண்டும்.

(அ - ம்.) உற - மிகவும், உடலை எடுத்தவரில்- தேஹோஹ உபாதியைமேற்கொண்டவர்களிலே,

பிரமாதியேனும்-பிரமாமுதலானவரானலும், உனை ஒழிந்து - உன்னை (மனதை) நீங்கி, தள்ளற்கு- சமாதி சுகத்தில் பிரிதலின்றியிருத்தற்கு, அறவும்- மிகவும, அரிது அரிது அன்றோ - அருமைக்கு மருமையாகு மல்லவா, இகபரமும் - பந்தமோக்ஷ போகங்களும், உன்னைஅன்றி-உன்னை (மனதை) யல்லது, ஆவது உண்டோ - கைகூடுவதுளதோ, வறிதில்-வியர்த்தமாக, உன்னை அசத்து என்னல்- உன்னை (மனதை) அசத்தென்று சொல்லுதல், வழக்கு அன்று - நியாயமல்ல, சத்து எனவே வாழ்த்துவேன் - ஸொரூபமென்றே மனனஞ் செய்யாநிற்பேன், என்சிறுமைகெட - (அப்படி மன்னஞ் செய்வதால் அபேதத்தன்மையாய் நிலைத்து அகண்டாகாரவிருத்தியுதயமாகி) எனது அவித்தை நாசமடைந்து பரமாநந்தப் பிராப்தி யுண்டாக, பெருமையின் - (இந்திரியவழிசெல் லாது ஆகாசநாட்டத்தில் தைலதாரைபோல் (நின்ற) அச்சிறப்புடன், நின் சென்மதேயத்து — உன் (மனதின்) உற்பத்தி ஸ்தானமாகிய ஸொரூ பத்தில், இனி நீ செல்லல்வேண்டும் - இத்தறுவா யில் நீ (மனம்) ஏகாக்கிரதை யடைதல் வேண்டும்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நினைவொன்றுநினையாமனிற்கிணைகமென்பார்
நிற்குமிடமேயருளாநிட்டையருளொட்டுந்
தனையென்றுமறந்திருப்பவருள்வடிவானது மேற்
றட்டியெழுந்திருக்குமின்பந்தன்மயமேயதுவாம்
பினையொன்றுமிலையந்தவின்பமெனுநிலயம்
பெற்றாரேபிறவாமைபெற்றார்மற்றுந்தான்
மனையென்றுமகவென்றுஞ்சுற்றமென்றுமசுத்த
வாதனையா மாசையொழி மன்னொரு சொற்
[கொண்டே.

(அ - ம்.) மன்-நிலைபெற்ற (ப்ரஹ்ம சாக்ஷாத்காரத்தை யகத்தின்கணுணர்ந்த சற்குருநாதனால் பெறப்பட்ட), ஒரு-ஒப்பற்ற, சொல் கொண்டு-மகாவாக்கிய அநுசந்தான வுளவுகளை யுபதேசவாயிலாய் நன்குணர்ந்து கொண்டு (பின்னர்), மனை என்றும்-பெண்சாதி என்கிற ஆசையும், மகவு என்றும் - மைந்தர்களென்கிற ஆசையும், சுற்றம் என்றும் - உறவினரென்கிற ஆசையும், அசுத்த வாதனையாம் ஆசை-சுத்தமல்லாத, (மேற்சொல்லியவைகளுக்கிருப்பிடமாகிய) தேகப்பற்றை, ஒழி-ஆகாச பாவனையில் தைலதாரைபோல் நிற்றலால்

நீக்கு, (அவ்வாறு நீங்கியவிடத்தில்) நினைவு ஒன் றும் - யாதொரு சங்கற்பமும், நினையாமல் நிற் கின் - உண்டாகாமல் (எண்ணம்அற்று) அடங் கின், அகம் என்பார்-(அவ்வாறடங்கினவிடமே) ஸொரூபமென்பர் மேலோர், நிற்கும் இடமே - அடங்கின அந்த இடமே, அருளாம்நிட்டை - ஸொரூப சமாதி, அருள் ஒட்டும் - அச்சமாதியில் அகண்டாகார விருத்தி யுதயமாகும், தனை என் றும் மறந்து இருப்ப-(அவ்வகண்டாகார விருத்தி யில்) ஜீவபோத மெழாவண்ணம் பிரிதலின்றி திட வைராக்கியத்துட னிருக்கின், மேல் - அதற்கு மேல், அருள் வடிவானது. துரிய ஸொரூபமானது, தட்டி எழுந்திருக்கும் - நிதரிசனமாய் விளங்கா நிற்கும், தன்மயமே - தனது ஸொரூபமேயாம், இன்பம் - சகஜாநந்தமும், அதுவாம் - அதுவே யாகும், பினை ஒன்றும் இலை - அவ்விடத்திலன் னிய ப்ரதீதிபிறி தொன்றுமில்லை, அந்த இன்பம் எனும் நிலயம் பெற்றுரோ-அத்தகைய சகஜாநந்த ஸதிதியை யடையப் பெற்றவர்களே, பிறவாமை பெற்றுர்-ஜனனமரணப்பிரவாகத்துன்ப மின்மை யாகிய வீட்டைடைந்தவர்களாம், மற்றுந்தான்-மேற்

சொன்ன வண்ணம் ஒழுகாத வினையவர்களோ வெனில் எதிர்மறைப் பொருளாகக் கொண்டு வீடடையார்க ளென்பதேயாம். (ரு)

திருப்போரூர்சந்நிதிமுறை,

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அலையிலாதசாகரம்போ
லனிலஞ்சோரவிளக்கதுபோ
லருங்கலிரும்பொன்சமமாகி
யானதாரசினுனியதுபோ
னிலையொன்றியநற்சமாதியுற்று
நின்றாட்கமலத்தெழுப்பிரச
நிறைவாரிதியிற்புகுந்ததனி
னேசித்தடியேனிருப்பேனோ,
விலையின்மகுடத்திருமுடியாய்
மிளிர்குண்டலங்கள்செறிகாதா
வியன்கேயூரத்திருத்தோளா
விஞ்சுஞ்சதங்கைசூழ்தாளா
புலையுங்கொலையுங்களவுமில்லாப்
புனிதத்தவத்தோர்தொழுதேத்தும்
புராரிகுமாரவுமைசிறுவா
போரூர்முருகப்பெருமானே.

(அ-ம்.) விலையில் - மதிப்புக்கடங்கா துவமை யற்ற, மகுடத்திருமுடியாய்-சிரோரத்தினங்களா லிழைக்கப்பட்ட கிரீடத்தை சிரசிற்றரித்தவனே, மிளிர் குண்டலங்கள் - பிரகாசிக்கின்ற குண்டலங் களை, செறிகாதா-காதிற்பொருந்தவணிந்தவனே, வியன்-பெருமைவாய்ந்த, கேயூரத்திருத்தோளா- கேயூரத்தைப் புஜத்தி லணிந்தவனே, விஞ்சும் - மேன்மையான, சதங்கை - சலங்கையை, சூழ் தாளா-தரித்த திருவடியை யுடையானே, புலையும்- விஷய நுகர்ச்சியும், கொலையும் - தேஹபாவமும், களவும் - சங்கற்ப எழுச்சியும், இல்லா - அற்ற, புனிதத் தவத்தோர் - சுத்த தவத்தினையடைந் தோர்களால், தொழுது எத்தும்-நிதரிசனமாய்க் கண்டு சதாபிரிதலின்றி யிருக்கும், புராரி குமரா- அவித்தையைத் தன்வசப்படுத்திய விருத்தி ஞானமே, உமை சிறுவா-சுத்தமாயையாற்றோன் றினவனே, போரூர்-சங்கற்பங்களை நாசஞ்செய் யுஞ் சத்துவாபத்தி யென்னும் பூமியி லெழுந்தரு ளும், முருகப் பெருமாளே - அகண்டாகார விருத்தி ஞானமே, (இத்தகையவிருத்தி ஞான முதயமாகு மிடத்தின் கண்ணே) அலையிலாத

சாகரம்போல்-நிஸ்த்தரங்க சமுத்திரம் போலவும், அனிலஞ்சேரா விளக்கதுபோல் - நிவாததீபம் போலவும் (மனதை நிறுத்தி) அருங்கல்-மனோ ராஜ்ஜியத்திற்கும், இரும்பொன் - சுழுப்திக்கும் (போகாமல்), சமமாகி-வைராக்கியத்துட னவ்வி டத்தி லுபேக்ஷா புத்தியுடனிருந்து, ஆனதாரா னுனியதுபோல் - தைல தாரைபோற் பழகி, நிலை யொன்றிய நற்சமாதியுற்று - தனது ஸொரூபத் திலேகாக்கிரதையடைந்து அவ்விடத்தி லுண்டா கின்ற அகண்டாகார விருத்தியினிலைத்து, நின் தாள் கமலத்தெழும் பிரசநிறைவாரிதியில்-ஆண்டு நிகழும் ப்ரஹ்மாநந்த சாகரத்தில், புகுந்து-அடை ந்து, அதனில் நேசித்து - அவ்வாநந்தத்திலேயே தூங்காமற்றூங்கும் நிலையைப்பிரிதலின்றி, அடி யேனிற்பேனோ - எக்காலத்திலியானிருப்பனோ?

சுப்பிரமணியர்:—சு - சுசாதி விசாதி சுவகத பேத ரஹிதமாகி, ப்ர - மேன்மையான, அம் - அழ கிய, (சச்சிதாநந்த) மணி - துரியசிவம்.

சுசாதி விசாதி சுவகதபேத ரஹிதமாய் விளங் கும் எந்த பாவஸ்துவோ அதனையே சுப்ரமணிய ரென்னுந் தாதுவுக்குச் சிறப்புடைத்தாகிய பொரு

வெனக் கண்ணுடையோராற் புகலலுறும். ஈண்டு இத்தகைய வநுபவப் பிராப்தியின் பொருட்டு மனோலய சாதகஞ் செய்யத்தொடங்கி, சாதகத்தின் பரிபாக ஸ்திதியில் அந்தக்காணவிருத்தி ஸொரூபத்தில் ஏகாக்கிரதைத் தன்மையடைந்து ஆண்டு ப்ரஹ்மாகார விருத்தி யுதயமாகும்; அவ்விருத்தி யுதயத்தை விநாயகர் எனவும், அத்தகைய விருத்தி தைலதாரைபோனின்ற வவசரம் சுப்ரமணியரெனவும் பொருட்கோடற்பாற்று. இத்தகைய விருத்தியினங்கம் எவ்வாறு நிகழுமெனின், நிரதிசயாநந்த வடிவாய் நிகழுமென்பார், 'விலையின் மகுடத் திருமுடியாய்' எனவும், இவ் வாநந்தாநுபவத்தி னின்றும் பிரபஞ்சத்தை நோக்குழி, ஆண்டு பதார்த்தங்களியாவும் சச்சிதாநந்த விளக்க மாகவே நிகழு மென்பார், 'மிளிர் குண்டலங்கள் செறிகாதா' எனவும்; இத்தகைய விளக்க மேலீட்டில் பதார்த்தங்கள் சச்சிதாநந்தமாய்ப் பிரகாசித்த லென்னு நினைவுங்கழன்று சகஜாநந்த ஸ்திதி யியல்பானே நிகழுமென்பார், 'வியன் கேயூரத் திருத்தோளா' எனவும், இத்தகைய வநுபவத்தினை யுடையார் யாண்டு யாண்டு சரிக்கினும்

ஆண்டாண்டு மவ்வநுபவமே முன்னிற்கு மென்பார், 'விஞ்சுஞ் சதங்கை சூழ்தாளா' எனவும், அநுபவ வாயிலான் ஸொரூபஸ்திதியை நன்குணர்ந்த ஆப்தர்களா லொருவாறு கூறப்படும். (சு)

ஞானசாகரவெண்பா.

ஏரியுறுநீரிலிருநாரைக்கஞ்சிநடு
வாரியுறுமீன்போல வல்வினைகள்-சாராமல்
மன்னுருவமெய்ஞ்ஞான வாரிநடுவேபுதைந்
நின்னுருவந் தோன்றுமனில். [து

(அ - ம்.) ஏரி யுறு நீரில் - ஏரியினது துவாராவாரநின்ற ஜலவாய்க்காலில், இரு-பெரிய, நாரை -நாரைப்புள்ளானது, வாரியுறு - மிகுதியாகவுள்ள (சிறுமீன்களை நோக்காது), அஞ்சி-ஒதுங்கி (சித்திர தீபம்போல்) நின்று, நடுமீன் - பெரிய மீன் (வருமளவுங் காத்திருப்பதுபோல,) வல்வினைகள் - ஆகாச நாட்டத்தி லிருக்குங்கால் வலிமையுள்ள மனோராஜ்ஜியமும் சுழுப்தியும், சாராமல் - அடையாமல், மன்-நிலைபெற்ற, உருவம் - ஸொரூபமாகிய, மெய்ஞ்ஞானவாரி-உண்மைஞான வியாபகத்தின், நடுவேபுதைந்து - சங்கற்பவுற்பத்தி ஸ்தானத்தில் மனதை ஏகாக்கிரதை யடையும்படிச்

செய்து, நின்உருவம் தோன்றாமல்-ஜீவபோதமெ ழாவண்ணம், நில்-நிர்விகற்பசமாதியையடைவாய்.

## பிரத்தியக்ஷாநுபூதிவிளக்கம்.

### கட்டளைக்கலித்துறை.

இவ்வாறுமேன்மேலிருக்குந் துறைசென்றிருந் திரு[ந்து
இவ்வாறுநின் றங்ககம்பாவமின்றியெவையுமின்றி
இவ்வாறுமாறாநிலைபிறழாதிங்கிருக்கின்முத்தி
இவ்வாறகன்றிடிலேகமதாயிடலில்லையதே.

(அ-ம்.) இவ்வாறு-முற்கூறியவண்ணம் ஆகாச நாட்டத்தில் தைலதாரைபோல் நிலைத்து, மேல் மேல் - (அதற்கு) அதீதமாகி, இருக்கும்துறை- ஸொரூபத்திலேகாக்ரதை யடைந்து, சென்று- (உண்டாகா நின்ற அகண்டாகார விருத்தியால் அவித்தை) நீங்கி, இருந்து இருந்து-ஆங்குஜனிக் குமாநந்தத்தில் தூங்காமற்றூங்கு நிலையையடைந் திருந்து, இவ்வாறு நின்று-இத்தகைய நிர்விகற்ப சமாதியில் நிலைபெற்று, அங்கு - அவ்விடத்தில், அகம்பாவம் இன்றி - திரிபுடிரகித ஸ்திதியை யடைந்து, எவையும் இன்றி-பகிர்முகத்தோற்றமு மில்லாமல் (ஸொரூபமாகவே விளங்காநிற்கும்), இவ்வாறு - இவ்விதமாக, மாறாநிலை - பிரிதலின்

றிய சகஜாநுபவத்தில், பிறழாது-நீங்காது, இங்கு இருக்கின்-ஈண்டே யிருந்திடின், முத்தி-விதேக கைவல்லிய ஸ்திதியாம், இவ்வாறு - (இருக்க வேண்டிய) இந்நிலையினின்று, அகன்றிடில் - நீங்கின், ஏகமதாயிடல் - ஐக்கிய முத்தியெனும் விதேககைவல்லிய ஸ்திதியை யடைதல், இல்லையதே - உண்டாகாவாம். (அ)

## தாயுமானவர்பாடல்.

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொற்பினொடுகைகரவில்வள்ளுகிர்படைத்தலாற்
பொருந்திடையொடுக்கமுறலாற்
பொலிவானவெண்ணீறுபூசியேயருள்கொண்டு
பூரித்தவெண்ணீர்மையா
லெற்படவிளங்குகனத்திலிமையாவிழி
யிசைந்துமேனோக்கமுறலா
லிரவுபகலிருளானகனதந்திபடநூறி
யிதயங்களித்திடுதலாற்
பற்பலவிதங்கொண்டபுலிகலையினுரியது
படைத்துப்பிரதாபமுறலாற்
பனிவெயில்கள்புகுதாமனெடியவான்றொடர்
நெடியபருமாவனங்களாரும்

பொற்பினிடையுறைதலாற்றவராசசிங்கமென
மிக்கோருமைப்புகழ்வர்காண்
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே.

(அ-ம்.) பொற்பினொடு - அழகாக, கைகாலில்-கைகால்களில், வள் - கூர்மையாகிய, உகிர் - நகங்களை, படைத்தலால் - வளரப்பெற்றலாலும், இடை-இடையானது, பொந்துஒடுக்கம் உறலால் -சுருங்கிவந்திருத்தலாலும், பொலிவான வெண்ணீறு பூசி - அகண்டாகாரவிருத்தியுதய மாவதற்கேதுவாகிய சாந்தவிருத்திபூண்டு, அருள்கொண்டு பூரித்த-ஆண்டுநிகழும் அகண்டாகார விருத்துயிலுண்டாகும் ஆநந்தத்தில் பரவசமுற்ற, எண்ணீர்மையால்-மதிக்கத்தக்க * மைத்திரியாதி குணங்க

* ஞானிகளின் குணங்கள் நான்குவிதமாம்.

1. மைத்திரி—மகான்கள், மகான்களைக் காணுறில் ஐக்கியபாவபுத்தி யுண்டாகுந்தன்மையோடிருத்தல்.

2. முதிதை - புண்ணிய வந்தர், அதிகுணயுக்தர், உபாசகர் இவர்களை மகான்கள்நோக்கின்

ளமைந் திருப்பதினாலும், எல்பட - பிரகாச முண்டாக, விளங்கு ககனத்தில்-விளங்குகின்ற அகண்டாகார விருத்தி யாகிய) சிதாகாசத்தில், இமையாவிழி இசைந்து-பிரிதலின்றி தைலதாரைபோற் பொருந்தி, மேல்நோக்கம் - ஊர்த்துவ (அந்தர் முகப்பார்வை,) உறலால்-அடைந்திருத்தலாலும், இரவு பகல்-கேவல சகல மென்கின்ற, இருளாண,

---

நாமும் இத்தகையபக்தியைச் செய்தல்லவா இப் பேற்றையடைந்தோ மிவர்களுஞ் சீக்கிரத்தில் நம்மைப்போலாவார்களென்ற நிச்சயத்தை யகத்தின்கணுணர்ந்து மிகுந்த வன்பு கொண்டவரா யிருத்தல்.

3. கருணை-துக்கி, நிக்ருஷ்டகுணயுக்தன், அஞ்ஞானி, அறியவிரும்புவோன், கர்மம் செய்கிறவர்கள், இவர்களை மகான்கள்காணில் இவைகளினின்று நீங்கி யெக்காலத்தில் நம்மைப்போ லாவர்களென விரக்கமிகுதியால் தயையுண்டாயிருத்தல்.

4. உபேக்ஷை - வேதத்திற்கூறிய விதிவிலக்குகளை யநுசரியாது புத்தி பூர்வகமாய் பாவகிருத்தியங்களைச் செய்கிற பாபிகள், அவகுணயுக்தர்கள்,

வெற்பினிடையுறைதலாற்றவராசசிங்கமென
மிக்கோருமைப்புகழ்வர்காண்
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே.

(அ-ம்.) பொற்பினொடு - அழகாக, கைகாலில்-கைகால்களில், வள் - கூர்மையாகிய, உகிர் - நகங்களை, படைத்தலால் - வளரப்பெற்றலாலும், இடை-இடையானது, பொங்குஒடுக்கம் உறலால்-சுருங்கிவந்திருத்தலாலும், பொலிவான வெண்ணீறு பூசி - அகண்டாகாரவிருத்தியுதய மாவதற்கேதுவாகிய சாந்தவிருத்திபூண்டு, அருள்கொண்டு பூரித்த-ஆண்டுமிகழும் அகண்டாகார விருத்தியிலுண்டாகும் ஆநந்தத்தில் பரவசமுற்ற, எண்ணீர்மையால்-மதிக்கத்தக்க * மைத்திரியாதி குணங்க

---

* ஞானிகளின் குணங்கள் நான்குவிதமாம்.

1. மைத்திரி—மகான்கள், மகான்களைக் காணுறில் ஐக்கியபாவபுத்தி யுண்டாகுந்தன்மையோடிருத்தல்.

2. முதிதை - புண்ணிய வந்தர், அதிகுணயுக்தர், உபாசகர் இவர்களை மகான்கள்நோக்கின்

ளமைந் திருப்பதினாலும், எல்பட - பிரகாச முண்டாக, விளங்கு ககனத்தில்-விளங்குகின்ற அகண்டாகார விருத்தி யாகிய) சிதாகாசத்தில், இமையாவிழி இசைந்து-பிரிதலின்றி தைலதாரைபோற் பொருந்தி, மேல்நோக்கம் - ஊர்த்துவ (அந்தர்முகப்பார்வை,) உறலால்-அடைந்திருத்தலாலும், இரவு பகல்-கேவல சகல மென்கின்ற, இருளாண,

நாமும் இத்தகையபக்தியைச் செய்தல்லவா இப்பேற்றையடைந்தோ மிவர்களுஞ் சீக்கிரத்தில் நம்மைப்போலாவார்களென்ற நிச்சயத்தை யகத்தின்கணுணர்ந்து மிகுந்த வன்பு கொண்டவராயிருத்தல்.

3. கருணை-துக்கி, நிக்ருஷ்டகுணயுக்தன், அஞ்ஞானி, அறியவிரும்புவோன், கர்மம் செய்கிறவர்கள், இவர்களை மகான்கள்காணில் இவைகளினின்று நீங்கி யெக்காலத்தில் நம்மைப்போ லாவர்களென விரக்கமிகுதியால் தயையுண்டாயிருத்தல்.

4. உபேக்ஷை - வேதத்திற்கூறிய விதிவிலக்குகளை யநுசரியாது புத்தி பூர்வகமாய் பாவகிருத்தியங்களைச் செய்கிற பாபிகள், அவகுணயுக்தர்கள்,

அஞ்ஞான அந்தகாரமாகிய, கனதந்தி - பெரிய யானையானது, படநூறி - இறக்கும்படி நாசஞ் செய்து, இதயம் - மனம், களித்திடுதலால் - பரமாங்காரமடைந்திருத்தலாலும், பற்பல - எண்ணிறந்த, விதம் கொண்ட - விதமான, புலிகலையின் உரியது படைத்து - புலித்தோலையும் மான் தோலையும், ஆசனங்களாகப் படைத்து, பிரதாபம் உறலால் - சகஜநிலை யநுபவதிடத்தைப் பெற்றிருத்தலாலும், பனிவெயில்கள்-பனி வெயில் முதலியவைகள், புகுதாமல் - அடையப்பெறுமல், நெடியவான்தொடர் - விசாலமான ஆகாயத்தை யளாவிய, நெடிய - உயரமான, பரு - பருத்த, மரவனங்களாரும் - மரங்களடரப்பெற்ற காடு செறிந்த,வெற்பினிடைஉறைதலால்-மலையினிடைத்து வாழ்தலாலும், தவராஜ சிங்கமென-தவசிரேஷ்ட சிங்கம் என்று, மிக்கோர் - அறிஞர்கள், உம்மை புகழ்வர்-உம்மைக் கொண்டாடுவார்கள், வேதாந்த சித்தாந்த சமரசம் - வேதாந்தசித்தாந்தங்களின்

---

துவேஷி, பாமரர்கள் இவர்களை, மகான்கள் காணுங்கால் ராகத்துவேஷம் விருப் புவெறுப் பற்று உதாசீன பாவத்தோடிருத்தல்.

முடிபாகத்தேர்ந்த பொருளைச் சமரசமே எனப் பாவித்தலாகிய, நன்னிலைபெற்ற—சிறந்தநிலையை யடைந்ததனாலுண்டாகிய, வித்தகம்—ஞானத்தை யுடைய, சித்தர்கணமே – சித்தர்கூட்டமே. (க)

ஔவைக்குறள்வெண்பா.

இமையாதநாட்டத்திருந்துணர்வாருக்
கமையாதவானந்தமாம்.

(அ–ம்.) இமையாத நாட்டத்து—(காரணகாரிய சகித சர்வசங்கற்பங்களுமுண்டாகி யொடுங்குமிடமாகிய சிதாகாசத்தில்) தைல தாரைபோல் மனோ விருத்திநின்று, இருந்து உணர்வாருக்கு – (அவ்வாறு நின்றமனோவிருத்தி) சொரூபத்திலேகாக்கிரதையடைந்தாங் குண்டாகாநின்ற அகண்டாகார விருத்தியில் பிரிதலின்றிய அவ்வறிவுநிலை பெற்றிருப்பவருக்கு, அமையாத ஆனந்தமாம்—பரிபூரண வாநந்தமாகிய நனவிற்சுழுப்தி நிலைவடிவ அநுபவமாம். (௧0)

கண்ணுலுறப்பார்த்துக் காதலாற்றாேனாக்கி லுண்ணுமே யீசனொளி.

(அ–ம்.) கண்ணால் உறப்பார்த்து—(ஆகாசநாட்டத்தில்) மனம் பொருந்தும்படி நின்று, காதலால் தானோக்கில்—பொருந்திய வவ்வாகாசத்தில் தைல

தாரைபோல் பிரிதலின்றி யிருக்கில், உண்ணுமே ஈசன்ஒளி-அகண்டாகாரவிருத்தி யுதயமாகும். ()

பத்திரகிரியார் (கண்ணி.)

அமையாமன தமையுமானந்தவீடுகண்டால்
இமையாமனோக்கியிருப்பதினியெக்காலம்.

(அ-ம்.) இமையாமல் நோக்கி-ஆகாச நாட்டத்தில்) தைல தாரைபோல் நின்றால், அமையா மனது – கறங்குபோற் சுழலாநின்ற மனமானது, அமையும் – (ஸொரூபத்தில்) ஏகாக்கிரதையடையும், ஆனந்தவீடுகண்டு – (அடையவே அகண்டாகார விருத்தி யுதயமாகி) ஆனந்தம் ஜனித்து, இருப்பது – (அதில் தூங்காமற் றூங்குநிலையை) அடைவது, இனி எக்காலம்-(பந்தப்பகுதியினின் றுள்ள யான் இதினின்று நீங்கி) எக்காலத்தி லத்தகைய நிலைவாய்க்கப் பெறுவன். (கஉ)

ஒழிவிலொடுக்கம்.

வெண்பா.

தன்னையிழப்பார்க்கென்னசார்வூழிசங்கார
மென்னிலெள்ளித்தெங்கேயிருக்கலா - முன்னே
புலிபார்க்கப்போனகதைப்போலிமையாநாட்டஞ்
சலியாமன்மூடுந்தனை.

(அ - ம்.) தன்னை இழப்பார்க்கு - தற்போதம் ஒழிப்பார்க்கு, சார்வுஎன்ன-(மற்றைச்) சார்புகள் என்னை உள்ளன?, ஊழிச்சங்காரம்-(முப்பத்தாறு தத்துவம் என்பதும் அவற்றின் முடிவில் நின்ற தாம் என்பதும் தமக்கு அறிவித்த அருள் என்பதும் இதனைக் கடந்த ஆநந்தம் என்பதும் இன்றி ஆநந்தா தீதரா யிருத்தலின் அவர்க்கிதுவே) சர்வசங்காரகாலம், என்னில்-என்று (மெய்ஞ்ஞானிகள்) சொல்லுவாரெனின், ஒளித்து எங்கே இருக்கலாம் - அவருக்கு எவ்விடத்து ஒளித்திருக்கலாகும், (ஆனால் சிவத்தை அருளாலறிந்து அடையவேண்டுமென்பது என்னை யெனின்), முன்னே புலிபார்க்கபோன கதைபோல் - முன்னே புலியினைப்பார்த்து அறியச்சென்ற ஓர் புருடன் அஃது இருந்த முழைக்கு எதிர்ப்படும் தறுவாயில் அவன் தேகப்பதைப்பற அது பிடித்துக்கொண்டதென்று கூறும் கதைபோல், தனை - (சிவத்தை அறியவேண்டும் என்று முப்பத்தாறு கருவிகளையும் கடந்துசென்று அருள் நேர்நிற்குந்தறுவாயில்) இவன் றன்னை, இமையாநாட்டம் - இமையா நாட்டமாகிய அச் * சிவந்தானே, சலியாமல் மூடும்-இவன் றுபோதப்பதைப்பு அறும்படி மூடிக்கொள்ளும்.

---

* இமைத்தல் விழித்தலின்றிய, இமையாநாட்டம்போல் மறப்பு நினைப்பு இன்றிய பேரறிவு

## கடவுளந்தாதி.

### கட்டளைக்கலித்துறை.

சுழிமுனைவட்டச்சுழிமுனை
யுச்சித்துவாரத்திலே
வழிபயமென்றுமலைப்பர்களோ
மடைக்கொக்கதுபோல்
தெளிவுறுபார்வையசையாதுசிற்றடி
தூக்கிநின்று
விழியிமையாதொளிபார்த்தூடுறுவ
வெளிப்படுமே.

(அ-ம்.) சுழிமுனை வட்டச்சுழி முனை உச்சி-உஸ்வாஸ நிஸ்வாசங்களுண்டா யடங்குவதாயும் சங்கற்பமடங்குவதாயுமுள்ள, துவாரத்திலே - இடத்திலே, வழிபயம் என்று - (சற்குருசாமீப்பியம் பெற்ற தீவிரதரபக்குவாதிகாரிகள்) மனதை நிறுத்தல் கூடாமை என, மலைப்பர்களோ-பிரமிப்பார்களோ (பிரமியார்களென்றபடி), மடைக்கொக்கதுபோல்-(வாய்க்கால்) மடையின்கணின்று சிறுமீன்களை விட்டு பெரிய மீன்வருமளவுங் காத்திருக்குங் கொக்கைப்போல், தெளிவுறுபார்வை

ஆகலின், சிவத்தை இமையாநாட்டம் எனப் பொருள் கொண்டார்.

அசையாது—இந்திரியவழி செல்லாது (ஆகாசநாட்டத்தில்) மனம் பிரிதலின்றி யிருந்து, சிற்றடி தூக்கிநின்று - ஸொரூபத்திற் பொருந்தும்படி வைராக்கியத்துடன் தைல தாரைபோனின்று, விழி - (ஆங்குண்டாகா நின்ற அகண்டாகார விருத்தியில் விளங்கும்) சுத்தமனம், இமையாது - அவ்விளக்கத்தில் பிரிதலின்றி, பார்த்து ஊடுறுவ - பழகப்பழக (அம்மனம் ஸொரூபமாகவே கரைந்து) ஒளி வெளிப்படுமே - (அத்தறுவாயில்) துரியம் விளங்கும். (கச)

## திருவாசகம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொய்யனேனகநெகப்புகுந்தமுதூறும்
புதுமலர்க்கழலிணையடிபிரிந்துங்
கையனேனின்னுஞ்செத்திலேனந்தோ
விழித்திருந்துள்ளக்கருத்தினையிழந்தே
னையனேயரசேயருட்பெருங்கடலே
யத்தனேயயன்மாற்கறியொண்ணாச்
செய்யமேனியனேசெய்வகையறியேன்
திருப்பெருந்துறைமேவியசிவனே.

(அ-ம்.) பொய்யனேன் - ஜீவபோதனேனது, அகன் நெகப்புகுந்து - தேகோஹபாவத்தை நான் நானெனும் மயமாய்ப் பரிணமித்து (நிற்கும் பெற்றியான்), அமுது ஊறும் - ப்ரஹ்மாநந்தம் சுரக்கின்ற, கழல்-வீரக்கழலணிந்த, புதுமலர்-அழகிய தாமரை மலர்போன்ற, இணைஅடி - சச்சிதாநந்த ஸொரூபமாகிய அகண்டாகார விருத்தி யுதயஸ்தானத்தில், பிரிந்தும் - சிருஷ்டி தொடங்கி (மனம்பொருந்தாமல்) பகிர்முகப்பட்டிருக்கின்ற, கையனேன் - (என் பக்குவாபக்குவங்களை முற்றுமாராயாதடுத்த அக்கணமே ஜன்ம சாபல்லியமடையும் வண்ணம் உபதேஸ வுளவுகளை நன்குணர்த்தியு முணராத) மூடனேன், அந்தோ - ஐயகோ, இன்னும் செத்திலேன் - இன்னமும் தற்போதநாசமடையப் பெற்றிலேன், (ஆனாலெப்படி தற்போத நாசம் எய்திற்றெனில்) விழித்திருந்து-அவ்வுபதேச வுளவுகளில் சித்த விருத்தியைப் பொருந்துமாறு நிறுத்தி, (ஆண்டு சகல கேவல தாக்குதலுக்கிடந்தராது தைலதாரைபோலிருந்து அதன் பரிபாகஸ்திதியி லுண்டாகும் அகண்டாகார விருத்தியால்) உள்ளக்கருத்தினை

இழந்தேன் - தற்போத நாசமடையப்பெற்றேன், ஐயனே - சற்குருநாதனே, அரசே-(அகமமதை களையடக்கி நிலையினிற்கும் உளவை யேவுதலாற் காட்டிய) தலைவனே, பெரு - மேன்மையான, அருட்கடலே - (சகஜாநந்த நிலையடைவிக்கும் அகண்டாகார விருத்தியாகிய) ஞானசாகரமே, அத்தனே - (ஜனன மரணப் பிரவாகத் துன்பத்தினின்றுங் காத்தருளிய) தந்தையே, அயன் மாற்கு - சங்கற்ப எழுச்சி ஆகாரங்களுள்ளவர்களுக்கு, அறியொண்ணா-அறியப்படாத, செய்ய மேனியனே - சச்சிதாநந்த விளக்கமே திருமேனியாக வுடையவனே, செய்வகை அறியேன்-(சிவாநந்தமளவறுக்க அன்னியப்பிரதீதி யின்மையால்) செய்யும்விதம் ஆங்கு கண்டிலேன் (இப்பெற்றியென்ன வாச்சரியம்), திரு-அழகிய, பெருந்துறை-(சச்சிதாநந்த விளக்க மாகிய) சகஜாநந்தத்தில், மேவிய - எழுந்தருளிய, சிவனே-துரியவடிவே.

## கைவல்லியம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அசத்திலெம்மட்டுண்டம்மட்டும்பராமுக
மாகினுயம்மட்டும்

நிசத்திலுள்விழிப்பார்வையாயிப்படி
நிரந்தரப்பழக்கத்தால்
வசத்திலுன்மனநின்றுசின்மாத்திர
வடிவமாகிடின்மைந்தா
கசத்தகேதகத்திலிருக்கினுமாநந்தக்
கடல்வடிவாவாயே.

(அ—ம்.) அசத்தில் – (ஸொரூப ஞானத்தை யகத்தின்கணுணர்ந்த புமானாகிய வுனக்கு பிரா ரத்த வசத்தாய்ப் பிரவிருத்தி யுண்டாகுங்கால் திரிசிய தோற்றமாகிய) திரிபுடியில், (ஆதரவு) எம்மட்டுண்டு – எவ்வளவுகாலந்தோன்றி நிக ழுமோ, அம்மட்டும்—அவ்வளவு காலமளவும், பரா முகமாயினுய்—(பரமாநந்தப் பிராப்தத்தின் முடிபும் அத்தியந்த துக்க நிவர்த்தியும் உன்பாலுண்டாகா மையின்) பகிர்முகப்பட்டனே, அம்மட்டும்—(ஆத லால் திரிசியப் பிரதீதி யிறையளவேனு மில்லாத சகஜாநந்த அடைவு உண்டாகிற) பரியந்தம், நிசத்தில்—(அகத்தின்கண் விளங்கிய) ஸொரூபத் தில், உள் விழிப்பார்வையாய்—அந்தர்முக நாட்ட முடையவனுய் (நின்று) இப்படி—இங்ஙனம், நிரந்

தாப் பழக்கத்தால்—இடையறு வப்பியாசமேலீட்டின‌ல், மனம் - (சுத்த) மணமானது, உன்வசத்தினின்று—ஸொரூபத்தில் பிரிதலின்றியிருந்து, சின்மாத்திரவடிவமாகிடின்—திரிபுடிரகிதத்தன்மையையடைந்து ஐக்கிய நிலையாகிய சுபாவ ஸ்திதியில் நிலைத்திடுமாயின், மைந்தா - (ஞான) புத்திரா, கசத்த தேகத்தில் - அருவருக்கத்தக்க துக்கமயமானதேகத்தில், இருக்கினும்-(நீ) இருந்திடினும், ஆநந்தக்கடல் - ப்ரஹ்மாநந்தசாகரமாகிய, வடிவாவாய்-(மோக்ஷ) ஸொரூபமாக விளங்குவாய். (கசு)

## சௌந்தரியந்தாதி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உமையேமூலத்துறைந்தபொரு
ளுணர்ந்தேகசுழியின்முனைதிறந்து
இமைபோரறியவரிதாகு
மெந்தாயுனதுபதங்கருதி
நிமையாநாட்டத்துடன்காலை
நீட்டிமுடக்கிநிலைபுகுந்து
தமையேயுணருந்தாமருளுக்
தாயேயமலன்றனிவாழ்வே.

(அ-ம்.) உமையே-ஈஸ்வரியே (உனது கிருபா வீக்ஷண்ணியத்தினூற் காட்டிய லக்ஷியார்த்தத்தில்), நிமையா நாட்டத்துடன்-(மனதை) தைலதாரைபோல் நிறுத்தி, காலை நீட்டி முடக்கி-(இந்திரியவழி செல்லாமல்) உஸ்வாச நிஸ்வாசங்களை யடக்கி, நிலைபுகுந்து-ஸொரூபத்திலேகாக்கிரதை யடைந்து, சுழியின் முனை திறந்து - அகண்டாகாரவிருத்தி யுதயமாகப்பெற்று, இமையோர் அறிய - சங்கற்பவெழுச்சி சங்கற்பவாகாரமுடையவர்களா லறிவதற்கு, அரிதாகும் - அருமையாயிராநின்ற, எந்தாய்-ஜீவபோதத்துன்பத்தை நீக்கிச் சிவபோதத்தைத் தருகின்ற சுத்தமாயையான, உனது பதம் கருதி-(ஆநந்தத்தின் அடைவு உண்டாகுவதற்குமுன் விளங்காநின்ற) அவ்வகண்டாகார விருத்தியிலேயே நிலைத்து, தாயே- அதனுல் உண்டாகின்ற ஆநந்தமே, மூலத்துறைந்த - மூலகாரணமாக நிலைபெற்ற, பொருளுணர்ந்து- துரிய அடைவைப்பெற்று, தமையே உணருந்தாம்-ஐக்கிய நிலையைப் பொருந்துந் தன்மையை, அருளும் - அடைவிக்கச்செய்யும், அமலன் தனிவாழ்வே - துரியசிவத்திற் கேவலத்தன்மையாய் நிகழாநின்ற வாநந்தமே. (கஎ)

## சௌந்தரியலகரி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இணைவிழியிமையாநாட்டமெய்திய
தலாத்தோன்றும்
பணைநெடும்புவனமிந்தப்
பார்வைசற்றிமைக்குமாயிற்
றுணையிழந்தழிவதெண்ணித்
துணிந்தநின்கருணையென்றுற்
கணையினுங்கொடியதென்னக்
கடவதோகடவுண்மாதே.

(அ-ம்.) கடவுள்மாதே - தெய்வமாதே, இணைவிழி - துணையாம்மனம், இமையாநாட்டம் எய்தியது-ஸொரூபத்தி லேகாக்கிரதையடைந்து தைலதாரைபோல் பிரிதலின்றி யிருந்ததனால், அலாத்தோன்றும் - ப்ரஹ்மாகார விருத்தி ஞான முதயமாகி ஆநந்தம் ஜனிக்கும் (அவ்வண்ணம் நிலைக்காமல்), இந்தப்பார்வை-இம்மனமானது, பணை-பிசகாய், நெடும்புவனம் - பொருந்தி யிராநின்றவுலக வாசனைகளில், சற்று-அரைக்கணமேனும், இமைக்குமாயில்-செல்லுமாயின், துணையிழந்து-(ஓர்வித விஸ்ராந்தி ஜனித்திருந்த)ஆதரவு நீங்கி,

அழிவது எண்ணி - (தேகோஹப்பட்டு) துன்பந் தாக்குமெனத் தீவிரதரவைராக்கியங் கருதி, துணிந்த-அவ்விடத்தில் பிரிதலின்றி யிருந்தது, நின்கருணை என்றால்-உனது கிருபாவீக்ஷணிய மிகுதிப்பேறென்றால், கணையினும் - (தீவிரதாபக்குவமுடையவர் ஆநந்தமுதய மாகிறவரையில் பிரிதலின்றி காத்திராது) அம்பினுந்துரிதமாய், கொடியது என்ன - அவித்யா வசப்படுவரென்பது, கடவதோ - முறையதோ (முறையல்ல). (கஅ)

—(*)—

☞ சப்த ஸ்பரிசாதிகளிறந்துநிற்றல் என்பதற்குப்பிரமாணம்.

---

சொரூபத்தந்தாதி.

*கட்டளைக்கலித்துறை.*

நயனமுமேவடிவாஞ் சொரூபத்தைநீ நண்ணிநின்றால், நயனஞ்செவிதொக்கு மூக்கெனுமிந்திய நாவினொடு, நயநண்சுழுத்தியவத்தைகனவினனவினுடன், நயனம்பிரிவற்றிருக்குமெல்லாங்கண்டு நாட்டத்திலே.

(அ - ம்.) நயனமுமே வடிவாம் - மனதிற்கு யதார்த்தவடிவாகிய, சொரூபத்தை-ஸொரூபஸ்திதியை, நீநண்ணி-உன்மனம்பொருந்தி, நின்றால்-(தைலதாரைபோல்) நிலைபெறுமாயின், நயனம்-(ரூபக்காட்சியாகக்காணும்) சட்சு, செவி-(சப்தாதிகளைக் கேட்கும்) சுரோத்திரியம், தொக்கு -(சீதோஷ்ணங்களை உணரும்) ஸ்பரிஸேந்திரியம், மூக்கு - (வாசனையைக்கிரகிக்கும்) கிராணேந்திரியம், நாவின்ஒடு - (இரசஜாதிகளையறியும்) சிங்குவேந்திரியம், எனும் - என்றுசொல்லப்பட்ட, இந்தியம்-பஞ்சேந்திரியங்களும், நயம் - ஓர்விதவின்பத்தையுண்டுபண்ணும், நண்சுழுத்தி - காடநித்திரையாகிய கேவலாவஸ்தையும், கனவின் நனவினுடன்-சொப்பன சாக்கிரமெனு மிரண்டோடுகூடிய, * அவத்தை - சகலாவஸ்தையும் (ஆகிய விவைகளில்) நயனம்-மனமானது (செல்லாமல் இறந்து)நாட்டத்தில்-(ஆண்டு உதயமாகும் ப்ரஹ்

* அவஸ்தை யென்னும் பதம் சிங்நோக்காய் முன்னுணர்த்தியவைகளைநோக்கி கேவலாவத்தை யென்றும் பின்னுணர்த்தியவைகளை நோக்கி சகலாவத்தை யென்றும் பொருள்படும்.

மாகாரவிருத்தி முதிர்ச்சியில், எல்லாம் கண்டு — சகஜாநந்த பிரவாக ரூபஸ்திதியைப் பெற்று, பிரிவு அற்று — இடையறுச்சமாதியைப் பொருந்தி, இருக்கும் — இருந்திடும். (க)

## வைராக்கியசதகம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கண்டவைம்புலக்காட்சிபோய்க்
காட்சியாற்கலந்தவாதனையாவும்
விண்டுமூடமற்றலையிலாக்கடலென
விளங்கினையெனினெஞ்சே
யுண்டுகொன்னமக்கொருதுயராங்குவி
டுளங்கையிற்கனியேயாம்
பண்டைமேவியபயமெலாமறுங்குரு
பதத்திலும்புகலாமே.

(அ—ம்.) கண்டவைம்புலக் காட்சிபோய் — (சற்குரு நாதனு லருளப்பட்ட மகாவாக்கிய வநுசந்தான உளவில் சித்தவிருத்தியை நிரந்தரம் நிறுத்திப் பழகும் பழக்கமேலீட்டில் சிந்தனுதீதமாகிய சூனியமே விளங்கும் இப்பெற்றியான்) ஐம்பொறிகளாற் கண்டுணரப்படும் சத்தாதி விஷயக் காட்சிகளும் நீங்கும், காட்சியால் கலந்த வாதனை

யாவும் விண்டு-நீங்கவே ஆண்டு நிகழும் சூனியக் காட்சியில் சித்தவிருத்தி நிலைக்காது சம்ஸ்கார வாயிலாய் மனோராஜ்ஜிய முதலிய சம்பந்த முண்டாகும் அஃதையும் தனது வீரப்பாட்டினால் நீங்குமாறு அதி நுண்ணுணர்வோடு யூகிக்க அவ்வாசனையும் நீங்கும், மூடமற்று-அவ்வவசரத்தில் சுழுப்தி நிலையை யடைய அதிசன்னத்தமா யிருக்கும் அவ்வாறடையாத யூகத்தைப் பெற்றிருக்கும் பரிபாகஸ்திதியில் ப்ரஹ்மாகார விருத்தி யுதயமாகி அஞ்ஞானம் நீங்கும், அலையிலாக் கடலென விளங்கினையெனின் - அத்தகைய விருத்தி விளக்கத்திலேயே சித்தவிருத்தி நிஸ்தரங்க சமுத்திரம் போல் நிர்விகற்ப சமாதியை யடையுமாயின், ஆங்கு - அவ்விடத்தில், நமக்கு - துரியசொரூபமாய் விளங்கும் நமக்கு, ஒருதுயர் - அணுவளவாகிய துன்பத்தாக்குதலாவது, உண்டுகொல்-உண்டாகுமோ (உண்டாகாதென்றபடி), வீடு-மோக்ஷ சுகமானது (சகஜாநந்தமானது), உளங்கையிற் கனியேயாம் - உள்ளங்கை நெல்லிக்கனிபோல் நிதரிசனமாம், பண்டைமேவிய பயமெலாமறும்-அநாதியாய்ப் பொருந்தியிராநின்ற சஞ்சிதாகாமி

யங்களெல்லாம் அத்தியந்த நிவர்த்தியைப் பெறும், குருபதத்திலும் புகலாம் - துரியாதீத அடைவையும் பெறலாம். (உ)

சசிவர்ணபோதம். (கலித்தாழிசை.)

வினவிற்பாத்தையறிவுறுதற்
கவத்தைபுலன்வினைமாறியே
நனவிற்சுழுப்திநிலைவரினப்
பொருட்டிகழுநலனுகவே.

(அ - ம்.) பாத்தை - ப்ரஹ்மஸொரூபத்தை, அறிவுறுதற்கு - அறிவதற்கு, வினவில் - நம்மைக் கேட்கில், புலன் அவத்தைவினைமாறி-(யாம் கூற லுறும் உபதேசவுளவின்கண் சித்தவிருத்தியை தைலதாரைபோனிறுத்திப் பழகும் அப்பியாச மேலீட்டில் சிந்தனையிறந்து ஆண்டுநிகழும் சூனிய ப்ராப்தத்தினடைவால்) புலனடங்கி இப்பெற் றியா னிகழும் உள்ளக்குளிர்ச்சியில் தைலதாரை யொத்த யூகமேலீட்டி லுண்டாகும் ப்ரஹ்மாகார விருத்தியால் சகல கேவலாவஸ்தைகளின் தாக்கு தலுமற்று அஞ்ஞானமும் நீங்கி, நனவிற்சுழுப்தி நிலைவரின்-ஆண்டுநிகழும் ப்ரஹ்மாகார விருத்தி

னிடையறுப் பரிசயமேலீட்டில் விளங்கும் நன விற் சுழுப்தியாநந்த அடைவுவரின், அப்பொருள்-என்னை விஞவிய ப்ரஹ்மஸொரூபாநுபவம், நலஞக-உரிமையாக, திகழும்-விளங்கும். (௩)

—*—

## சூனியத்தில் தைலதாரைபோல்நிற்றல் என்பதற்குப்பிரமாணம்

—*—

### குறுந்திரட்டு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அண்டமெண்டிக்கெங்கணு
மடங்கச்சூனியமதாகக்
கண்டுகொண்டிருக்கக்கண்ட
கருத்தையுமறவேவிட்டா
லண்டமெண்டிக்கெங்கணு
மாய்நின்றவாநந்தத்தைக்
கண்டுகொண்டிருக்கும்வண்ணங்
கணத்தில்வந்துதிக்குமன்றே.

(அ-ம்.) அண்டம் - அண்டமும், எண் திக்கு- அவைகளுக் கெல்லையாய் நிகழ்வனவாகிய எட்டுத் திக்குகளும், எங்கணும் - எல்லா விடங்களும், அடங்க - ஒருமிக்க, சூனியமதாக - (சற்குருநாத

னுற்பெறப்பட்ட மஹாவாக்கிய அநுசந்தானவுள வில் நிரந்தரம் பழகும் பழக்கவிறுதியில் கேவலம்) சூனியமாக,கண்டுகொண்டு-(தைலதாரைபோல்) உணர்ந்துகொண்டு, இருக்க - இருக்கும்படி, கண்ட-பார்க்கப்பட்ட, கருத்தையும் - எண்ணத் தையும், அறவேவிட்டு - பழக்கத்தின் முதிர்ச்சி யால் மனம் ஸொரூபத்தில் ஏகாக்ரதை யடைந்து ப்ரஹ்மாகார விருத்தி யுதயத்தால் நீங்கி, அண்ட மெண்டிக்கு எங்கண்ணுமாய் நின்ற - ஆண்டு அண்டமெண்டிக் கெங்கண்ணுமாய் வியாபித்து நின்றுள்ள, ஆநந்தத்தை-ப்ரஹ்ம சுகத்தை, கண்டு கொண்டிருக்கும் வண்ணம் - இடையறுப் பரிச யஞ்செய்துக்கொண் டிருக்கும்படியாகிய பரிபாக ஸ்திதியில், கணத்தில் வந்துதிக்கும் - விரைவாய் துரியசிவம் சாக்ஷாத்காரமாகும். (க)

## திருவாசகம்.

### ஆசிரியவிருத்தம்.

ஆற்றகில்லேனடியேனரசே
 யவனிதலத்தைம்புலனுய
சேற்றிலழுந்தாச்சிந்தைசெய்து
 சிவனெம்பெருமானென்றேத்தி

யூற்றுமணற்போனெக்குநெக்குள்ளே
யுருகியோலமிட்டுப்
போற்றிநிற்பதென்றுகொல்லோவென்
பொல்லாமணியைப்புணர்ந்தே.

(அ - ம்) அரசே-சற்குருநாதனே, அடியேன்-அடியனேன், அவனிதலத்து - இப்பூமியில் (இச்சரீரத்தின் கண்ணே), ஐம்புலனுய சேற்றில்-பஞ்சேந்திரிய விஷயங்களாகிய சேற்றில், அழுந்தாமூழ்கி, ஆற்றகில்லேன் - (தேவரீர் கூறிய உபதேச வுளவின்கண் அந்தக்கரண விருத்தியை நிறுத்திப் பழகத் தொடங்குங்கா லாண்டு நிலைபெருது பகிர்முக நாட்டத்திற்கே தலைப்பட்டு துவந்துவங்களின் தாக்குதலுக்கு) பொறுக்க கில்லேன், சிவன் எம்பெருமானென்று சிந்தை செய்தேத்தி-(ஆதலால் துரியசிவம்ஜீவாதிஷ்டானமாமாதலின்) பரைநிலைனொடு சிவம்நான் நானே சிவம் என்னும் ப்ரஹ்மானன்னிய பாவனையில் அந்தக்கரண விருத்தி ஸ்திரத்தன்மை யடைதலாகிய யூகஞ்செய்து பழகி, ஊற்றுமணற்போல் நெக்கு நெக்குள்ளேயுருகி-அப்பழக்கத்தின் பரிபாகஸ்திதியில் நிகழும் சூனியப் பிராப்தத்தின் உள்ளக்குளிர்ச்சி

ஞற்பெறப்பட்ட மஹாவாக்கிய அநுசந்தானவுள வில் நிரந்தரம் பழகும் பழக்கவிறுதியில் கேவலம்) சூனியமாக, கண்டுகொண்டு-(தைலதாரைபோல்) உணர்ந்துகொண்டு, இருக்க - இருக்கும்படி, கண்ட-பார்க்கப்பட்ட, கருத்தையும் - எண்ணத் தையும், அறவேவிட்டு - பழக்கத்தின் முதிர்ச்சி யால் மனம் ஸொரூபத்தில் ஏகாக்ரதை யடைந்து ப்ரஹ்மாகார விருத்தி யுதயத்தால் நீங்கி, அண்ட மெண்டிக்கு எங்கண்ணுமாய் நின்ற - ஆண்டு அண்டமெண்டிக் கெங்கண்ணுமாய் வியாபித்து நின்றுள்ள, ஆநந்தத்தை-ப்ரஹ்மசுகத்தை, கண்டு கொண்டிருக்கும் வண்ணம் - இடையறுப் பரிச யஞ்செய்துக்கொண் டிருக்கும்படியாகிய பரிபாக ஸ்திதியில், கணத்தில் வந்துதிக்கும் - விரைவாய் துரியசிவம் சாக்ஷாத்காரமாகும். (க)

திருவாசகம்.

ஆசிரியவிருத்தம்.

ஆற்றகில்லேனடியேனரசே
யவனிதலத்தைம்புலனுய
சேற்றிலழுந்தாச்சிந்தைசெய்து
சிவனெம்பெருமானென்றேத்தி

ஊற்றுமணற்போனெக்குநெக்குள்ளே
யுருகியோலமிட்டுப்
போற்றிநிற்பதென்றுகொல்லோவென்
பொல்லாமணியைப்புணர்ந்தே.

(அ - ம்) அரசே—சற்குருநாதனே, அடியேன்—அடியனேன், அவனிதல்த்து - இப்பூமியில் (இச்சரீரத்தின் கண்ணே), ஐம்புலனுய சேற்றில்—பஞ்சேந்திரிய விஷயங்களாகிய சேற்றில், அழுந்தாழ்கி, ஆற்றகில்லேன் - (தேவரீர் கூறிய உபதேச வுளவின்கண் அந்தக்கரண விருத்தியை நிறுத்திப் பழகத் தொடங்குங்கா லாண்டு நிலைபெருது பகிர்முக நாட்டத்திற்கே தலைப்பட்டு துவந்துவங்களின் தாக்குதலுக்கு) பொறுக்க கில்லேன், சிவன் எம்பெருமானென்று சிந்தை செய்தேத்தி—(ஆதலால் துரியசிவம்ஜீவாதிஷ்டானமாமாதலின்) பரைநினைவொடு சிவம்நான் நானே சிவம் என்னும் ப்ரஹ்மானன்னிய பாவனையில் அந்தக்கரண விருத்தி ஸ்திரத்தன்மை யடைதலாகிய யூகஞ்செய்து பழகி, ஊற்றுமணற்போல் நெக்கு நெக்குள்ளேயுருகி—அப்பழக்கத்தின் பரிபாகஸ்திதியில் நிகழும் சூனியப் பிராப்தத்தின் உள்ளக்குளிர்ச்சி

யில் (பிரிதலின்றி யுள்ளது விளங்குகிற பரியந்தம் சுழுப்தி மனோராஜ்ய முதலிய பிரதி பந்தங்களுக் கிடந்தராது மேற்கூறிய உள்ளக் குளிர்ச்சி சகித மாகிய சூனிய வியாபகத்தை எந்த வியாபகம் விளக்குகின்றதோ அவ்விளக்கமயமாய்) தைல தாரை போனின்று, ஒலமிட்டு-(இவ்வாறு நிற்கும் பரிபாக ஸ்திதியில் ப்ரஹ்மாகார விருத்தி யுதய மாகி அதிற்பிரிதலின்றி) அமைதிநிலை யடையு மாறு காத்திருந்து, என் பொல்லாமணியைப் புணர்ந்துபோற்றி - (அங்ஙனங் காத்திருத்தலின் மேலீட்டி லுளவாகும் நனவிற் சுழுப்தி ஆநந்தத் தில் தூங்காமற் றூங்கும் ஸ்திதியாகிய நிர்விகற்ப சமாதியில் நிலைத்து ஆண்டு திரிபுடி ரகிதமாய் விளங்குந்) துரியப் பேற்றினை யடைந்து, நிற்பது- நிரங்குச திருப்தனா யிருப்பது, என்று கொல் - எக் காலம் வாய்க்குமோ. (உ)

நெக்குநெக்குள்ளுருகியுருகி
நின்றுமிருந்துங்கிடந்துமெழுந்து
நக்குமழுதுந்தொழுதும்வாழ்த்தி
நானாவிதத்தாற்கூத்துநவிற்றிச்

செக்கர்போலுந்திருமேனி
திகழநோக்கிச்சிலிர்சிலிர்த்துப்
புக்குநிற்பதென்றுகொல்லோவென்
பொல்லாமணியைப்புணர்ந்தே.

(அ-ம்) நெக்குநெக்குள்ளுருகியுருகி - (சற்குரு நாதனே! தேவரீர் உபதேச வாயிலாயுணர்த்திய வநுபவநிலைகளுள், பிரதமத்தில் அந்தக்கரண விருத்தியை இந்திரியவழி விடாது, மகா வாக்கிய வநுசந்தானத்துவாராதடுத்து, அவ் வநுசந்தான முதயமாகு மிடத்தையே யூகித்துப் பழகும் பழக்க மேலீட்டிற் சிந்தனையிறந்து விளங்கும் அகண்ட சூனிய வியாபகத்தில் ஆண்டு நிகழும் பிரதிபந்தங்களானிலைபெறுதிருத்தலை அதி சூக்ஷ்மமாகிய தீவிரதரவாற்றலுடன் அச்சூனிய வியாபகத்தை விளக்கும் எந்த வியாபகவிளக்கமோ அவ்விளக்கத்திலேயே) தைலதாரைபோல் உள்ளது விளங்குகிற பரியந்தஞ் சித்தவிருத்தியை நிறுத்திநிறுத்தி, நின்றும் - அவ்வாறு நிற்றலின் பரிபாகஸ்திதியிலுளவாகும் ப்ரஹ்மாகார விருத்தியினிலைத்தும், இருந்தும்-ஆண்டுநிகழு மாநந்தத்தினமைதி நிலை

யைப்பெற்றும், இடந்தும் — நிர்விகற்ப சமாதி ஸ்திதியாயிருந்தும், எழுந்தும் — (இன்றியமையாத பிராரர்த்த வசத்தாய்ப் பகிர்முகப்படுங்கால் அகத்தின்கண் விளங்கிய ஆநந்தவடிவமாகவே) வெளிப்பட்டும், நக்கும் — பதார்த்தங்களை யம்மய மாகவே பற்றியும், அழுதும் — அவ்வாறு பற்றுவதால் சாமான்னியதுக்கப் பிரதீதிதோன்றியும், தொழுதும் — (இவ்வாறாகிய புடைபெயர்ச்சிகளை யூகித்து இத்தகைய நிகழ்ச்சியுண்டாகா திருத்தற் பொருட்டு பகிர்முகப்பட்ட வக்கணமே) பதார்த்தத்தின் சாமான்னிய விசேட பாவந் தோன்றாதனவாகிய ஸ்திதியிலிருந்தும், வாழ்த்தி — அத்தகைய வநுபவத்திலிடையறாப் பிரிதலின்மையைப் பெற்று, என் பொல்லாமணியைப்புணர்ந்து — இப்பெற்றியானமையும் ஜீவாதிஷ்டானமாகிய துரிய சிவத்தில் திரிபுடி ரூபத்துவைத மின்றிய சகஜ சமாதியை யடைந்து, நானவிதத்தால் — பிராரர்த்துவத்தின் வேறுபாட்டால், கூத்து நவிற்றி — அபுத்தி பூர்வகமாகவே பிராரர்த்தபோகங்களைத் துய்த்து, செக்கர்போலும் — மேற்கூறிய பிராரர்த்தங்களினிறுதியில் துரிய சிவத்தின்

ஆரூடத் தன்மை பெற்ற முக்தர்போலும், திரு மேனி திகழநோக்கி-அமைதி நிலையைப்பெற்று, சிலிர் சிலிர்த்து - ப்ரஹ்மாஞ்சலியத் தன்மை யென்னு நிரங்குச திருப்தியுண்டாகி, புக்கு நிற் பது - அதிற் பிரிதலின்றி யிருப்பது, என்று கொல்லோ - எக்காலம் வாய்க்குமோ. (௩)

திருப்போரூர்ச்சந்நிதிமுறை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பற்பல்விதப்பூச்சோலைபுகாதே
பரிபூரணமாமேகச்சோலையி
லெற்பெறநீயெந்நாளுமகிழ்ந்தங்
கிதுவதுவென்றொன்றைப்நாடாமே
செப்பமதாய்நின்னையுநாடாமே
சீருருளேவடிவாகியிருந்து
குப்புகழ்போரூரப்பனைநாடிக்
கூவாய்வாநீகூவாய்குயிலே.

(அ-ம்.) பற்பல் விதப்பூச்சோலை - (சற்குரு நாதன் வாய்க்கப்பெற்று உபதேசவுளவுகளை நன் குணர்ந்தபின்) நானுவிதமாகிய சாஸ்திர விசார

மென்னுங் கூட்டத்தில், புகாது — அந்தக்கரண விருத்தியைச் செலுத்தாமல், பரிபூரணமாம் ஏகச் சோலையில் — அன்னோன்பாற்பெற்ற மகாவாக்கி யத்தை நிரந்தரஞ் சிந்திக்கச்செய்து அச்சிந்தனை யுதிக்கின்றவிடத்தில் (நிறுத்தி), எற்பெற—(அவ் வாறு நிறுத்துதலாந் தொழிற்குக் கருத்தாவாகிய) ஜீவபோதத்தி னதிஷ்டானவடிவை யடைதற்கு, நீயென்நாளுமகிழ்ந்து- (ஆண்டு விளங்குஞ் சூனிய சகித) உள்ளக்குளிர்ச்சியினிடத்து தைலதாரை போலிருந்து, அங்கு - அவ்விடத்தில், இது அது வென்றொன்றையு நாடாமே-உண்டாகும் மனோ ராஜ்ஜியம் சுழுப்திமுதலிய சம்பந்த மாகாமே, செப்பமதாய்—இணக்கமதாய், நின்னையு நாடாமே —ஜீவபோதத்தையும் பொருந்தாமலிருக்கும் பரி பாக ஸ்திதியில், சீரருளே வடிவாகியிருந்து—விளங் கும் ப்ரஹ்மாகார விருத்தியே வடிவாயிருந்து, குப் புகழ்போருரப்பனே—ஞானபூமி ஏழனுளைந்தாவதா கிய வசம்ஸத்தி யென்னும் பூமியை யுடைத்தாய் விளங்கும் ஞான வான்களாலே போற்றப்படுஞ் சங்கற்ப வாஸனைகளை நாசஞ்செய்யும் ப்ரஹ்மா கார விருத்திசகித நனவிற் சுழுப்தி ஆநந்தத்தை,

நாடி—அடைந்து, (அவ்வாநந்தம் ஸ்திரத்தன்மை யடைதற்பொருட்டு) குயில்—ஆண்டு நிகழுஞ் சுத்த மனமானது, கூவாய் வா நீ கூவாய் — இடையறு சமாதி ஸ்திதியைப் பழகல் வேண்டும். (௪)

---

☞ அவித்தை வசப்படுதலாகிய சுழுப்தியும் மனோராஜ்ஜியமும் உண்டாகா வண்ணங்காத்தல் என்பதற்குப் பிரமாணம்.

---

ஞானசாகர வெண்பா.

இந்திரியக்கள்வரிருட்காலம்பேருறாக்கம்
வந்திடுமோவென்றுவழிபார்ப்பர்—முந்தி
யமையாமனுளுமகல்ஞானக்கண்ணி
விமையாமனேக்கியிரு.

(அ — ம்.) இந்திரியக் கள்வர் — (சற்குருநாதன் பாற்பெற்ற வருட்பார்வையில் மனதை நிறுத்திப் பழகும் பழக்கவிறுதியில் நிகழ்வனவாகிய அகண்ட சூனியத்தில் சித்தவிருத்தி தைலதாரைபோல் நிலைக்குமவசரத்தில்) இந்திரியத் திருடர்கள்,

இருள்காலம் பேருறக்கம் - மனோராஜ்ஜியமாகிய விருட்டும் மூடத்தன்மையான சுழுப்தியும், வந்திடுமோ என்று-வருவதற்கு அதிக சன்னத்தர்களாக, வழிபார்ப்பர் - எதிர்பார்த்திருப்பார்கள், முந்தி-அத்தகைய அவஸ்தை வருவதற்கு முன்னமே, அமையாமல் - (அவர்கள்) வசப்படாமல், நாளும்-சதாகாலமும், அகல்-விசாலித்த, ஞானக்கண்ணில்-தைலதாரைபோல் நின்ற ஞான நாட்டத்தில், இமையாமல்-பிரிதலின்றி, நோக்கி இரு -(உள்ளது விளங்குகிற பரியந்தம் திட வைராக்கியத்துடன்) காத்துக்கொண் டிருக்கக்கடவாய்.

அஞ்ஞவதைப்பரணி.

வஞ்சிவிருத்தம்.

ஒழித்தேயுள்ள முணர்வடைய
வொழியாவொருவன்வருமளவும்
விழித்தேயுறங்கும்விளங்கிழையீர்
மேவுங்கபாடந்திறமினோ.

(அ-ம்.) உள்ளம்-மனம், உணர்வு அடைய-ஸொரூபத்தி லேகாக்கிரதையடைய, ஒழித்து-(இந்திரியவழிசெல்வதை) தடுத்து (ஆகாசநாட்

டத்தினிறுத்தி சுழுப்தியும் மனோராஜ்ஜியமு முண்டாகாமல்), ஒழியா ஒருவன் - பரிபூரணமாகிய ப்ரஹ்மாகாரவிருத்தி, வரும் அளவும் - உண்டாகிறவரையில், விழித்து-தைலதாரைபோல் நிற்க, உறங்கும் விளங்கு இழையீர்-மனம் ஸொரூபத்திலேகாக்கிரதையடைந்து சுத்தமாயையில் விளங்கும் சச்சிதாநந்த வடிவுடைய அகண்டாகார விருத்தியுதயமாகி ஆநந்தம் ஜனிக்கும் அதில் பிரிதலின்றிய சமாதிநிலையடையில், மேவும் கபாடம் திறமின் - பொருந்துகின்ற அவித்யா நாசத்தின் அத்தியந்த வடைவு பெறப்படும். (உ)

அவிரோதவுந்தியார்.

அசைவறச்சித்தமடங்குமேற்பின்ன
ரசையாமற்காத்திடென்றுந்தீபற
அறிவால்வருந்தியுமுந்தீபற.

(அ-ம்.) அசைவறச் சித்தமடங்குமேல் - யாம் கூறியவுளவின்கண் மனதை நிறுத்திச் சாதகஞ் செய்யத் தொடங்கும்போது ஆண்டுநிலைபெறாது சரிக்கின்ற மனந் தீர்க்க கால பரிசயமேலீட்டில் அடங்குமாயின், பின்னரசையாமல் - பின்னருள்

ளது (ப்ரஹ்மாகார விருத்தி) விளங்குகிற பரியந்தம் பகிர் முகத்திற்கு இடந்தராமல், அறிவால் வருந்தியும்–ஆண்டு நிகழும் சுழுப்தி மனோராஜ்யங்களை அறிவினது வீரப்பாட்டினால் அக்கணமே நீக்கி, காத்திடு–திடசித்தம் பண்ணிக்கொள். (ந)

திருக்குறள் வெண்பா.

எண்ணியவெண்ணியாங்கெய்துபவெண்ணி
திண்ணியராகப்பெறின். [யார்

(பரி–உரை.) தாமெய்த எண்ணிய பொருள்களெல்லாவற்றையும் அவ்வெண்ணியவாறே எய்துவர்; எண்ணியவர் அவற்றிற்கு வாயிலாகிய வினைக்கட் டிண்மை யுடையராகப் பெறின்.

(அ–ம்.) எண்ணியார்–(துக்கநிவர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியு மடைய) எண்ணினவர், திண்ணியாராகப் பெறின் – (சற்குருநாதன்பால் உபதேச வுளவுகளை நன்குணர்ந்தபின் ஏகாந்த ஸ்தலத்தை யடைந்து அன்னோன்பாற் பெற்ற வருட் பார்வையில் அந்தக்காண விருத்தியை நிறுத்திப் பழகும் முமுக்ஷுக்கள் உள்ளது (ப்ரஹ்மாகார விருத்தி) விளங்குகிற பரியந்தம் இடையிடையே

யுளவாகும் மனோராஜ்ஜியமும் சுழுப்தி முதலிய பிரதிபந்தங்கட்கிடந்தராது அப்பொருட்கு வழியாகிய வருட் பார்வையினிடத்து) திட்ப முடையவராக விருக்கப்பெற்றால், எண்ணிய — (ஆண்டு ஜனிக்கும் உள்ளக்குளிர்ச்சியின் பரிபாக ஸ்திதியில் ப்ரஹ்மாகாரவிருத்தி யுதயமாகி தம்மால்) எண்ணப்பட்ட அஞ்ஞான நிவர்த்தியும் ப்ரஹ்மாநந்தப் பிராப்தியும், எண்ணி யாங்கு—அவ் வெண்ணியபடியே, எய்துப—அடைவர். (௬)

மோகவதைப்பரணி. (கலியினம்)

ஆங்குணராமையுமுணர்வுமாகியகோளற
தூங்கினர்காண்சுகமடைவார் [விருந்து
சும்மேலோ சும்முலக்காய்.

(அ—ம்.) ஆங்கு — சற்குருநாதனாற்பெற்ற வருட் பார்வையில் அந்தக்கரண விருத்தியைத் தைலதாரை போனிறுத்திப் பழகும் பரிபாகஸ்திதியினுண்டாகும் உள்ளக் குளிர்ச்சியில் நிலைத்துள்ள அவ்விடத்து, உணராமையும் உணர்வு மாகிய — (அதிசன்னத்தமாய் வருவதற்குத் தலைப்படும்) மனோராஜ்ஜியமும் சுழுப்தியும் ஆகியவிவைகளில்

கோளற - (விருத்தியை விடாது ஈண்டு நிகழும் உள்ளக்குளிர்ச்சியை விளக்கும் எந்த வியாபகமோ அத்தகைய வியாபகத்தினிடமாகவே அறிவினது வீரப்பாட்டால் நிறுத்தி யவ்வாறு நிறுத்தலாலுள வாகும் ப்ரஹ்மாகார விருத்தியால்) சகல கேவலத்தின் தாக்கற, இருந்து-(ஆண்டு நிகழும் ப்ரஹ்மாகார விருத்தியில் தைல தாரைபோல் நிலை பெற்று), தூங்கினர்காண் - (அவ்விடம் ஜனிக்குமாநந்தத்தில்) நிர்விகற்ப சமாதியைப் பெற்றவர்கள், சுகமடைவார் - துரியாநுபவமாகிய சகஜாநந்தப் பேற்றினை யடைவர் (ஆதலின்), சும்மேலோ சும்முலக்காய் - மேற்கூறிய வநுபவம் தடஸ்தப்படும் பொருட்டு சற்குரு நாதன்பாற் பெற்ற அருட் பார்வையினின்றமனம் இடையறு சாதகத்தைச் செய்தல்வேண்டுமென்பதாம். (ரு)

## ஞானவாசிட்டம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஓரிடம்விட்டோரிடத்தேயுள்ள
முறிலவற்றினடுவுண்மையாகிப்
பேரிலதாயுணர்விலதாய்ச்
சடமிலதாயதுரீயாய்ப்பிரியேயென்றுங்

கூரியபுந்தியினுலேயூகித்துக்
குடும்பியெனுங்குறிப்பைமாற்றித்
தூரியதாம்படிமனத்தின்றுவக்கறுத்து
விருந்தபடி துணிந்துநிற்பாய்.

(அ-ம்.) உள்ளம்-மனமானது, ஓரிடம் விட்டு-பற்றியிராநின்ற பதார்த்தத்தை (நாமரூப பரிணமத்தை) விட்டு, ஓரிடத்தே உறில் - இன்னொரு பதார்த்தத்தை (நாமரூபத்தை) பற்றுகின்ற காலத்து, அவற்றினடு வுண்மையாகி - அவ்வாறு பற்றுதற்கு முன்னின்றுள்ள விடைவெளியான (அந்தராளமான) தகராகாசத்தில் மனதை அம்மயமாகவே நிறுத்தி, பேரிலதாய் உணர்விலதாய் சடமிலதாய்-ஆண்டுநிகழும் ப்ரஹ்மாகாரவிருத்தியால் சம்ஸ்கார எழுச்சி யிலாததாயும் அவ்வெழுச்சி யின்மையால் ஜீவபோத மின்மையாயும் அப்போத மின்மையால் அஞ்ஞான மிலதாயும் நீங்கப்பெற்று, அது நீயாய்-அவ்வவசரத்தில் விளங்கும் ஆநந்தப் பிராப்தியால் அகம் புறம் இன்மையாகிய சகஜ சமாதியை யடைந்து, என்றும் - எக்காலமும், பிரியேல் - அச்சகஜ சமாதி யநுபவ

மாகவே யிருக்கக் கடவாய் இத்தகைய வநுபவம் மேற்கூறிய உபதேச வுளவால் சீடனுக்குப் பிராப்த மாகாமையை யறிந்து, எவ்வாற்றானு மவ் வநுபவப் பிராப்தி யடையுமாறு கிருபாநோக்குடை யரா யவ்வுபதேசவுளவினையேவேறோரா ற்றாற்கூறு வான் றொடங்கி ஈண்டவ்வநுசந்தான நீர்மையை யுணர்த்துகின்றனர், கூரிய புந்தியினாலே யூகித்து- ஏகாந்த ஸ்தலத்தையடைந்து யோகநூலிற் கூறிய வண்ணஞ் சரீரத்தை செவ்வனே நிறுத்தி கண் களை மூடிக்கொண்டு மனதை யிந்திரியவழி விடாது தேகத்திற்குள்ளிருக்கும் ஹிருதயாம்பரத் தைப் பாவித்து, குடும்பியொனுங் குறிப்பைமாற்றி- அப்படிப்பாவித்தமனம் தேகோஹ சமஸ்காரங் கள் ஆண்டு நிக ழாவண்ணம் "ஸோகம்" பாவ னையை அதிசூக்ஷ்மமாக (பரைநினைவாக) சிந் திக்கச்செய்து, தூரியதாம்படி மனத்தின்-(சிந்த னையில் விருத்தியை நிறுத்தாது அச்சிந்தனை யுதிக்குமிடத்தையே தைலதாரைபோல் யூகித்து அத்தருணத்தி லாண்டுளவாகும்) அஞ்ஞான சம் பந்தங்களுக்குப் பற்றுக்கோடாய் நிகழும் அசுத்த மனதினுடைய, துவக்கறுத்து — மனோராஜ்யம்

சுழுப்தி முதலிய உடனிகழ்ச்சிகளைத் தனது வீரப்பாட்டினால் நீக்கி, இருந்தபடி—அவ்விட முண்டாகின்ற ப்ரஹ்மாகாரவிருத்தி மயமாயிருந்து, துணிந்து—ஆங்கு ஜனிக்கும் ஆநந்தத்திற் பரவச முற்று (நிர்விகற்ப சமாதியை யடைந்து), நிற்பாய் - சகஜா நுபவியா யிருக்கக்கடவாய். (சு)

தேவிகாலோத்தரம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆராதசித்தமானதோர்
காலத்தடங்குமானாற்
போாமல்வருந்திக்காத்து
பின்னைசிந்தனைகள்சென்று
சாராமல்வல்லவாறுதடுத்துச்
சார்வானவெல்லாஞ்
சோாமன்மயக்கநீக்கித்
திறமாகச்செய்துகொள்வான்.

(அ-ம்.) ஆராத சித்தமானது - சற்குருநாதன் பாற் பெற்றவருட் பார்வையிற் சித்தவிருத்தியை நிறுத்தி நிறுத்திப் பழகுங்கால் ஆண்டுநிலைபெறாது சரிக்கின்ற மனமானது, ஓர் கால் - ஒருசமயம், அடங்குமானால் மேற்கூறிய லக்ஷியத்தில் நிலை

பெறுமாயின், போமல் வருந்திக்காத்து-உள்ளது (ப்ரஹ்மாகார விருத்தி) விளங்குகிற பரியந்தம் பகிர்முக நாட்டத்திற் கிடந்தராது ஆண்டு நிகழும் உள்ளக்குளிர்ச்சியை வைராக்கியத்துடன் காத்து, பின்னை சிந்தனைகள் சென்று சாராமல் வல்லவாறு தடுத்து – அதன்பின் சம்ஸ்காரவாயிலாய் எழாநின்ற மனோராஜ்ஜிய முதலிய புடைபெயர்ச்சிகளுக் கிறையளவேனு மிடந்தராதனவாகிய யூகத்திலேயே யிருந்து மேற்கூறிப் போந்த புடைபெயர்ச்சிகள் உண்டாகாவண்ண நீக்கி, சார்வானவெல்லாஞ் சேராமன் மயக்கநீக்கி-ஈண்டு பதார்த்தங்களின் பிரதீதிகளுக்கெல்லாஞ் சார்வாய் நிகழ்வனவாகிய வஞ்ஞானசகித சுழுப்தியின் வசப்படுவதற்கு அதிசன்னத்தமாயிருக்கு மத்தருணத்தின் கண்ணேயே அவ்வாறுசெல்லுஞ்சுழுப்தியினின்று நீங்குவதாகிய யூகத்தினல் நீக்கி,திறமாகச் செய்து கொள்வான் – தீவிரதர ஜிஞ்ஞாசுகள் ஸ்திரத்தன்மையாகவே யிருக்குமாறு செய்து கொள்வர். (எ)

திருக்குறள் வெண்பா.

துன்பமுறவரி னுஞ்செய்கதுணிவாற்றி
யின்பம்பயக்கும்வினை.

(பரி - உரை.) முதற்கண் மெய்ம்முயற்சியாற் றமக்குத் துன்பம் மிகவருமாயினும், அது நோக்கித் தளராது முடிவின்கண் இன்பம் பயக்கும் வினையைத் திட்பமுடையராய்ச்செய்க.

(அ-ம்.) துன்பம்-(ஸொரூபத்தி லேகாக்கிரதையடைந்த மனதுக்கு நிஜாநந்தம் விளங்குகிறவரையி லவ்விடத்திலேயே அந்தர் முகமாய் நிலைக்கவொட்டாமல்) பிரதி பந்தங்கள், உறவரினும்-(தமக்கு) மிகநிகழினும் (அதுகண்டு தளராமல்), இன்பம் - ப்ரஹ்மாகாரப்ராப்தியை, பயக்கும்-(முடிவிலே) அடைவிக்கின்ற, வினை-(பிரிதலின்மையாகிய அந்தர்முக) அப்பியாசத்தில், துணிவு ஆற்றி-(உண்டாகும் ப்ரஹ்மாநந்த வடைவின் நிச்சயத்தை யகத்தினிடங் கொண்டு) வலிமை யுடையராய், செய்க-செய்யக்கடவது.

நாலடியார் (வெண்பா.)

ஊக்கித் தாங்கொண்டவிரதங்களுள்ளுடையத்
தாக்கருந்துன்பங்கடாந்தலைவந்தக்கால்
நீக்கிநிறாஉமுரவோரேநல்லொழுக்கங்
காக்குந்திருவத்தவர்.

(அ-ம்) ஊக்கி-(ப்ரஹ்மாநந்த வடிவையடையும் வண்ணம்) முயன்று, தாம் கொண்ட விரதங்கள்-

மனதை ஸொரூபத்தில் ஏகாக்கிரதை செய்துஅவ் விடத்தில் தைலதாரைபோல் நிற்கும் நிதித்தி யாசன பரிபாக ஸ்திதியில் உளவாகும் சுகப் பெருக்குகள், உள்ளுடைய - தம்மில் கலங்கும் படி, தாக்கரும் துன்பங்கள் - நீக்குதற் கருமையா கிய பிரதிபந்தங்கள், தலைவந்தக்கால் - தாக்கிமே லிட்டு வந்தால், நீக்கி - (சூக்ஷ்மவறிவால் அப்பிரதி பந்தங்களை) நீங்கச்செய்து, நிறூஉம் - (அச்சுகப் பெருக்குகளிலேயே சித்தவிருத்தியை) ஸ்திரப் படும்படிச் செய்யும், உரவோரே-மனோபலமுள்ள பேரறிவுடையோரே, நல் ஒழுக்கம் காக்கும்-ப்ரஹ் மாகார விருத்தி யநுபவநிலையினையடைந்து ஆண் டுளவாகும் ஆநந்தத்தில் அறிதுயிலில் தலைப்பட் டிருக்கும், திருவத்தவர்-(சகஜாநுபவத்தை யடை யப்படும்) ஞானச்சிறப்புடையவர். (௬)

திருக்குறள் (வெண்பா.)

கலங்காது கண்ட வினைக் கட்டு ளங்காது
தூக்கங் கடிந்து செயல்.

(பரி - உரை.) மனந் தெளிந்து செய்வதாகத் துணிந்த வினையின்கண் பின்னைசைதலின்றி நீட் டித்தலையொழிந்து செய்க.

(அ-ம்.) கலங்காது - (சற்குருநாதன்பால் உபதேசவுளவுகளை நன்குணர்ந்து அந்நெறிக்கண் மனதை நிறுத்திப் பழகும்போது ஆண்டு நிகழும்) மலவிக்ஷேப தோஷங்களுக் கிடந்தராது தைலதாரைபோன்ற சாதகஞ் செய்யும் பரிபாக ஸ்திதியில், கண்ட விளைக்கண் - விளங்கும் உள்ளக்குளிர்ச்சி சகிதமான சூனிய வியாபகத்தினிடம் (ப்ரஹ்மாகாரவிருத்தி யுதயமாகி) ஆநந்தம் ஜனிக்குமளவும் பிரிதலின்றிப் பழகுஞ் சமாதியினிடத்து, துளங்காது தூக்கம் கடிந்து-(உண்டாகும் பிரதிபந்தங்களாகிய) பகிர்முகப்பிரவிருத்தி ஆலசியம் நித்திரை முதலியவைகளை அறிவினது வீரப்பாட்டினு லக்கணமே தகைத்து, செயல்-சமாதியை செய்யக்கடவது. (௬௦)

---

ப்ரஹ்மாகாரவிருத்தி உதயம் என்பதற்குப்பிரமாணம்.

---

திருவாசகம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இன்றெனக்கருளியிருள்கடிந்துள்ளத்

றெழுகின்றஞாயிறேபோன்று
நின்றநின்றன்மைநினைப்பறநினைந்தே
னீயலாற்பிறிதுமற்றின்மை [தொன்றுந்
சென்றுசென்றணுவாய்த்தேய்ந்துதேய்ந்
திருப்பெருந்துறையுறைசிவனே
யொன்றுநீயல்லையன்றியொன்றில்லை
யாருன்னையறியகிற்பாரே.

(அ - ம்.) இன்று - (சற்குருநாதன் உபதேசவு லவை யறிவித்த பின்னர் அந்நெறிக்கணிடை யறா முயற்சியுடன் பழகும் பழக்க விறுதியிற் புருட தந்திரமற் றிருத்தலாகிய) இத்தருணத்தில், எனக்கு-(ஜீவபோதனேனாகிய) எனக்கு, அருளி- (மலரகிதத் தன்மையை யுண்டு பண்ணுவதற் கேதுவாகிய) அகண்டாகாரவிருத்தி ஞானம் உதய மாகப்பெற்று, இருள்கடிந்து - (ஆண்டு நிகழ்வன வாகிய நனவிற் சுழுப்தியாநந்தத்தால்) அவித்தை நாசமடைந்து, உள்ளத்து-அகத்தின்கண் (விளங் கும் ஆநந்தத்தில்), எழுகின்ற - உதயமாகின்ற, ஞாயிறே போன்று நின்ற-சூரியனையே நிகர்த்து நிற்கும், நின்தன்மை - துரியவிளக்கத்தில், நீ அலால் - அத்துரிய விளக்கமன்றி, பிறிது மற்று இன்மை-அன்னிய பிரதீதியானது இறையளவும் நிகழக் காண்கிலன், நினைப்பு அற நினைந்தேன் -

(இப்பெற்றியானுங்கு ஜனிக்கும் சகஜாநந்த வநுபவத்தால் சங்கற்பமும் வாசனையு மத்தியந்த க்ஷயமடைந்தது) * நினைப்பொழிய நினைந்தனன், சென்று சென்று — இத்தகைய வநுபவ நிகழ்ச்சியானது எப்பதார்த்தங்களிலும் தற்சொரூபமே விசேஷித்துப்பதார்த்தங்களினது தன்மை சாமான்னியமாகக் காணப்பட்டு, அணு ஆய் தேய்ந்து தேய்ந்து—(மேற் சொல்லிய வநுபவம் திடவுறுதியடைந்த தன்மையால்) பதார்த்தங்களில் சாமான்னிய விசேஷ பாவமு நீங்கி, ஒன்று ஆம் — ஐக்கியநிலையை யடையப் படுகின்ற, திரு — (சச்சிதாநந்தவிளக்கமாகிய) செல்வம், பெருந்துறை உறை —அதிகரித்து விளங்காநின்ற சகஜாநந்தத்தில் வாசஞ்செய்யும், சிவனே—துரியாதீதமே, ஒன்றும் நீ அல்லை — (ஸொரூப சமாதியைப் பழகுங்காலத்தில்) தத்துவக் குழாங்களெல்லாம் நீ அல்லவாகியதற்கதீதமாய் விளங்கப்பட்டனை, நீ அன்றி — (அவ்விளக்கா நுபவ நிகழ்ச்சியைக் கொண்டு பார்க்கும் சமயத்தில் முன்பு நேதிகளைந்தபதார்த்தங்கள்

* நினைப்பொழிய நினைந்தனன் — நினையாமல் நினைந்தேன், என்று மறவாதிருந்தேன்.

யாவும்) அவ்விளக்கத்தையல்லது, ஒன்று இல்லை—வேறு யறிகிலேன் (இத்தகைய சூழ்ச்சியால்), உன்னை அறியகிற்பார்-விளங்கப்படும் இத்துரியாதீத வநுபவத்தை நிஷ்காமிய புண்ணிய மிகுதிப் பேறில்லாது அறியவல்ல புருடர், யார் - யாவர். (அறியவல்லுநர் இல்லை என்றபடி.) (க)

பாடுதுறை - மெய்ஞ்ஞானவிளக்கம்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

காணுதேநின்று கழியுமென்னைக்
காலிட்டுக் காலிட்டுப் பாயுதேனே
காணுத கண்ணைத் துடைக்குதேனே
கதிர் போலறிவங்கே காணுதேனே.

(அ-ம்.) காணுதேநின்று கழியுமென்னை - சற்குரு நாதன்பால் மஹா வாக்கிய அநுசந்தான வுளவுகளை நன்குணர்ந்து அவ் வநுசந்தான வுளவின்கண் சித்தவிருத்தியைத் தைலதாரைபோனிறுத்திப் பழகும் பழக்க விறுதியில் அப்பழக்கமுமற்று கேவலம் சூனியப் பிரதீதியே நிகழ்ந்து தனது எதார்த்த ஸ்வரூபம் விளங்காமலும் பகிர்முகப்பட பிரியமின்மையு மாகிய தருணத்தில்,

காலிட்டுக் காலிட்டுப் பாயுதேனே - சுழுப்தி யல்லது மனோராஜ்ஜியமாகிய பிரதிபந்தங்களிடையிடையேவந்து தாக்காநிற்கும், காணுதகண்ணைத் துடைக்குதேனே - அத்தகைய பிரதிபந்தங்களுக்கிடந்தராது தீவிரதர வூக்கத்துடன் சற்குரு நாதனூற் பெறப்பட்ட வருட்பிரசாத வலிவாற்றகைத்து சாக்ஷிமாத்திரமாய் நிற்கும் பரிபாகஸ்திதியில், கதிர்போலறிவங்கே காண்குதேனே-ஞானபானுவாகிய ப்ரஹ்மாகாரவிருத்தி யவ்விடமுதயமாக வவ்வநுபவத்தைப் பெறுவேன். (உ)

திருவாசகம். (கலிவெண்பா.)

நோக்கரியநோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும்வரவும் புணர்வுமிலாப்புண்ணியனே
காக்குமெங்காவலனே காண்பரியபேரொளியே.

(அ-ம்.) நோக்கு-சர்வபதார்த்தங்களையுந் திருஷ்டித்து, அரிய - உணர்தற்குரிய வறிவாலறிதற்கரிய எந்தவுணர்வோ (அவ்வுணர்வினிடத்து), நோக்கு-அந்தக்காண விருத்தியை நிறுத்திப் பழகுங்கால், நுணுக்கரிய நுண்ணுணர்வே - ஆண்டு நிலைபெருது பிரதிபந்தங்களின் சம்பந்தமாதற்குத் தலைப்படு மவசரத்தின்கண்ணேயே அவ்வாறு விருத்தியை விடாது அதி சூக்குமமாகிய உணர்

வுடனிருந்து யூகிக்குந் தருணத்தில், போக்கும் வரவும் புணர்வும் இலா - பஞ்சேந்திரிய விடயங் களும் தேஹோக வுபாதியுங்கழன்று உஸ்வாஸ நிஸ்வாஸ மடங்கி பாகியாந்தரமென்னும் பாகு பாடுக ளிறந்த வகண்ட சூனிய விளக்கமே முற் படும், புண்ணியனே - அச்சமயம் அகண்டாகார விருத்தி வடிவாயுடைய வாநந்தாநுபவத்தின் லேச மாகிய சீதளத்தன்மை யுண்டாகும், காக்குமெங் காவலனே-அத்தகைய சீதள (குளிர்ச்சி)த் தன் மையை யுள்ளது (ப்ரஹ்மாகாரவிருத்தி) விளங்கு கிற பரியந்தம் பிரிதலின்றிக் காத்தல்வேண்டும், காண்பரிய பேரொளியே - அவ்வாறுகாத்து நிற்ற லாம் பரிபாகஸ்திதியில் அந்தக்கரண விருத்தி சொரூபமயமாய் நிலைபெற்று ப்ரஹ்மாகார விருத்தி யுதயமாகும். (ரு)

---

## ☞ நனவிற்சுழுப்தி ஆநந்தத்தில் பரவசப்படலேன்பதற்குப் பிரமாணம்.

---

### ஞானவாசிட்டம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அறிபொருளைவிட்டகன்றுலழியுஞ்சித்த
மந்தநிலேவியாபாரமனைத்துமில்லாச்

செறிநனவிற்சுழுத்தியாமிதனைநாளுந்
தீராதபரிசயமேசெய்பச்செய்யப்
பிறிவின்முதுதுரியமாமென்பர்மேலோர்
பிழையிலாவிதனிலேநிலைமைபெற்றுக்
குறியறுமானந்தமேகாந்தசிலக்
கொள்கையாலாநந்தங்கூடுமன்றே.

(அ-ம்.) அறிபொருளை - திரிசிய பிரதீதிக்குக் காரணமாய் நிகழாநின்ற சங்கற்ப ஆகாரங்களை, விட்டு அகன்றால் - தவிர்ந்து (உற்பத்தி ஸ்தானத்தையே பற்றி) நின்றால், சித்தம் அழியும் - மனமானது நாசத்தை யடையும், அந்த நிலை-அத்தகையஸ்திதி, வியாபாரம் - சங்கற்ப எழுச்சியும் வாசனையும், அனைத்தும் இல்லா-இறையளவேனு மில்லாத, செறிநனவில் சுழுத்தியாம் - அடர்ந்தொன்றான பரிபூரணமாகிய நனவிற் சுழுப்தியென்னும் பேரானந்த நிலையாம், இதனை - இத்தகைய வாநந்தத்தை, நாளும் - சதாகாலமும், தீராத-ஒழியாத, பரிசயமே - அப்பியாசத்தையே, செய்ய செய்ய-பழகப்பழக, பிறிவு இல் முது துரியம் ஆம் - சகஜாநந்தமாய் விளங்கும் பழமையாகிய துரிய நிலையாகும்; பிழை இலா இதனிலே-

அவித்யா சகிதம் இல்லாத விச்சொரூபா நுபவத்திலே, நிலைமைபெற்று - ஆரூடத்தன்மையையடைந்து, ஆனந்தம் - சச்சிதானந்தமெனும் நிலைவாகிய, குறி அறும்-சுத்த திரிபுடியும் நாசமடையும், அன்றே - அக்கணமே, ஏகாந்தசீலக்கொள்கையால் - இத்தகைய பெற்றியுடைத்தாய சுபாவ கோட்பாட்டினால், அநாநந்தம் கூடும் - ஆநந்தாதீத நிலைமை வாய்க்கும், என்பர் - என்று கூறுவர், மேலோர் - உண்மை ஞானத்தையுணர்ந்த ஞானவான்கள். (க)

பத்திரகிரியார். (கண்ணி.)

ஆங்காரமுமடக்கியைம்புலனைச்சுட்டறுத்துத்
தூங்காமற்றூங்கிச்சுகம்பெறுவதெக்காலம்.

(அ-ம்.) ஆங்காரமும்-(மனதை சப்த முதிக்குமிடத்தில் நிறுத்திப் பழகும் பழக்க மேலீட்டினால் தேகோக பாவமும், ஐம்புலனை - ஐந்துபுலன்களினுணர்வும், அடக்கி-நீங்கப்பெற்று, சுட்டறுத்து-ஆண்டு நிகழும் சூனிய வியாபகவிளக்கத்தை விளக்குவது எவ் விளக்கமோ அவ் விளக்கத்தையேயூகித்திருக்கும் பரிபாக ஸ்திதியில் ப்ரஹ்மாகாரவிருத்தி யுதயமாகி யஞ்ஞான நீங்கி, தூங்காமற்றூங்கி - ஈண்டு நிகழு மாநந்தத்தில் தூங்காமற்

றாங்குவதாகிய நிர்விகற்ப சமாதியை யடைந்து, சுகம்பெறுவது - இப்பெற்றியால் துரியாநுபவம் வாய்த்து சகஜாநுபவியாயிருப்பது, எக்காலம் — எந்தகாலம் வாய்க்கும். (உ)

நீங்காச்சிவயோக நித்திரைகொண்டேயிருந்து
தேங்காக்கருணைவெள்ளந் தேக்குவதுமெக்காலம்.

(அ-ம்.) சிவயோகம்-சற்குருநாதனுற் காட்டிய வுளவின்கண் மனதை நிறுத்தின திடப்பேற்றினு லுண்டாகும் அகண்டாகார விருத்தி ஞானமாகிய பரிபூரண வாநந்தத்தில், நீங்கா - பிரிதலின்றிய, நித்திரைகொண்டே-சமாதி யடைந்தே, இருந்து -(அதனது இறுதியிலுண்டாகுந் துரிய ஸொரூபமாய்) நிலைத்து, தேங்காக் கருணைவெள்ளம்-நிரங்குச திருப்தியாகிய சகஜ நிலையானது, தேக்குவது - நிறைந்து நிலைப்பேறுடைத்தாய் விளங்குவது, எக்காலம் - எந்த காலத்தில் (வாய்க்கும்).

## பட்டினத்துப்பிள்ளையார் பாடல்.

கட்டளைக்கலித்துறை. [ற்று

சினந்தனையற்றுப்பிரியமுந்தானற்றுச்செய்கைய
நினைந்ததுமற்றுநினையாமையுமற்றுநிர்ச்சிந்தனாய்

தனந்தனியேயிருந்தானந்தநித்திரைதங்குகின்ற
வனந்தனிலென்றிருப்பேனத்தனேகயிலாயத்த
[னே.

(அ-ம்.) சினந்தனை அற்று - (ஆகாச பாவனை
யில் மனதை நிறுத்தி) தேஹபாவத்தைநீக்கி, பிரி
யமும் தானற்று-ஜீவபோதத்திற்குக் காரணமான
பலசங்கற்பங்களையு மொழித்து, செய்கை அற்று-
(அவ் வாகாசத்தில் தைலதாரைபோல் நிலைக்க)
மனோவியாபாரமற்று, நினைந்ததும் அற்று - (அவ்
வேக நினைவாய் விளங்கும்) ஆகாசபோதமும்
(அகண்டாகார விருத்தியுதயத்தால்), நீங்கி,
நினையாமையும்-அகண்டாகார விருத்தி ஞானஸ்
புரிப்பும் (அப்பியாச மிகுதியாலுண்டாகும் நன
விற் சுழுப்தியாநந்தத்தில் பாவசமுற்றிருத்த
லாகிய சமாதியநுபவத்தால்), அற்று-நீங்கி, நிர்ச்
சிந்தனாய் - சிந்தனாகிதனாய், தனந்தனியே இரு
ந்து-கேவலத்தன்மையாகிய துரியநிலையிலிருந்து,
ஆனந்தநித்திரை - நிரங்குசதிருப்தி, தங்குகின்ற
வனம் தனில்-நிலைபெற்று விளங்குகின்ற சகஜா
னந்தத்தில், என்று இருப்பேன் - எக்காலத்தி
லிருப்பேன், கயிலாயத்தனே-கைலாயத்தில் வீற்
றிருக்கும், அத்தனே-அப்பனே. (௪)

## கந்தரலங்காரம்.

### கட்டளைக்கலித்துறை.

ஆங்காரமுமடங்காரொடுங்கார்
பரமானந்தத்தே
தேங்கார்நினைப்புமறப்புமறார்தினைப்
போதளவு
மோங்காரத்துள்ளொளிக்குள்ளே
முருகனுருவங்கண்டு
தூங்கார்தொழும்புசெய்யாரென்
செய்வார்யமதூதருக்கே.

(அ-ம்.) ஆங்காரமும் - (சற்குரு கிருபா வீக்ஷணியத்தால் பெற்ற அருட்பார்வையில் மனதை நிறுத்தி) அவித்யாசகிதத் தன்மையுடைய தேஹோஹ பாவத்தை, அடங்கார்-(அடக்குந் தந்திரத்தையறிந்து) நீங்கியிருக்கப் பெறுதவரும், பரமானந்தத்தே ப்ரஹ்ம சுகத்தின்கண்ணே, ஒடுங்கார்-(மனம் தைலதாரைபோல்) நிலைபெறுதவரும், தேங்கார்-(மயக்கத்தாலுண்டாகும் தியங்குதலைப் பொருந்திய, நினைப்பும்-(ஜாக்கிர சொப்பனங்களாகிய) சகலா வஸ்தையையும், மறப்பும் (சுழுப்தியாகிய) கேவலா வஸ்தையையும், அறார்—

(அத்தியந்த) நிவர்த்திசெய்யாதவரும், நினைப் போது அளவும்-இறையள வாயினும், ஓங்காரத்து -(பரிபூரணமாய் விளங்காநின்ற) ப்ரஹ்ம ஸொரூ பத்தினது, உள் ஒளிக்குள்ளே - அகமுகவப்பியா சத்தினு லுண்டாகின்ற அகண்டாகார விருத்தி நிலைபெற்ற அவசரத்தில் உதயமாகும் ஆநந்தத் திலே, முருகன் உருவங்கண்டு-எதார்த்த வடிவா கிய துரியசிவத்தை நிதரிசனமாக வறிந்து, தொழும்புசெய்யார் - சகஜாநந்த பரவசத்தி லீடு படாதவர்களும் (ஆகிய விவர்கள்), யமதூதருக்கு-காலனுடைய நியதியாகிய ஜனன மரணப் பிரவா கத்துன்பத்துக்கு, என்செய்வார் - யாது சூழ்ச்சி கொண்டு உஜ்ஜீவிப்பார். இச்செய்யுள் எதிர்மறை யாயிருக்கினும் உடன்பாடாகப் பொருட்கோடல் அப்பியாசிகளுக் குசிதமெனவோர்க.

அஃதாவது:—

சற்குரு கிருபா வீக்ஷணியத்தாற் பெற்ற வருட் பார்வையில் மனதை நிறுத்தி அவித்யா சகிதத் தன்மையுடைய தேஹபாவம் நீங்கி தைலதாரை போ லாகாசபாவம் நிலைபெற்று மனஞ்சொரூ பத்தி லேகாக்கிரதை யடைந்து ஆங்குண்டாகின்ற

அகண்டாகார விருத்தியினது மேலீட்டினால் ஜனிக்கும் ப்ரஹ்மாநந்தத்தில் நிலைபெற்று பிரவாகரூபமாய் நிறைந்துள்ள ஜாக்கிர சொப்பனங்களாகிய சகலாவஸ்தையும் சுழுப்தியாகிய கேவலாவஸ்தையும் அத்தியந்த நிவர்த்தியடைந்து சதாகாலமும் பரிபூரணமாய் விளங்காநின்ற ப்ரஹ்மஸொரூபத் தகமுகவப்பியாச முதிர்ச்சியாலுண்டாகின்ற நிலைப்பேறுடைத்தாய அகண்டாகார விருத்தி ஞானத்தின் ஆநந்தாதீதமாகிய துரியஸொரூபத்தை நிதரிசனமாயறிந்து ஆங்கு சகஜாநந்த நித்திரையை யடைந்த அறிஞர்களெவர்களோ அவர்கள் ஜனன மரணத் துன்பங்களை யுண்டுபண்ணுநின்ற கால நியதிக்கு உட்பட்டவர்களாகார். பின் யாதுசெய்வரெனின் ப்ரஹ்மஸொரூபத்திற் பிரிதலின்றிய நிலையைப் பெற்றிருப்பார்கள்.

---

## திரிபுடிரகித ஸ்திதியை யடைதலென்பதற்குப் பிரமாணம்.

---

### திருவாய்மொழி.

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.**

நன்றாய்ஞானங்கடந்துபோய்
நல்லிந்திரியமெல்லாமீர்த்

தொன்றாய்க்கிடந்தவரும்பெரும்பா
ழுலப்பிலதனையுணர்ந்துணர்ந்து
சென்றாங்கின்பதுன்பங்கள்
செற்றுக்களைந்துபசையற்றா
லன்றேயப்போதேவீ
டதுவேவீடுவீடாமே.

(அ-ம்.) நன்றாய்-(சற்குருநாதனருளால் அறி யப்பட்ட வுளவின்கண் மனதை நிறுத்தி) திடமாய்ப் (பழகப்பழக), ஞாலம்-(பூதபௌதிக வடிவாய்ப் பரிணமிக்கும்) உலகத்தை, கடந்து போய் -ஒழிந்து (ஆங்கு நிகழும் சூனிய விளக்கா நுபவத்தில் நிலேத்து), நல் இந்திரியம் எல்லாம்-சாத்வீகாம்சமாகிய ஞானேந்திரிய வியாபாரங்களும் இராஜசாம்சமாகிய கருமேந்திரிய வியாபாரங்களும், நீத்து-நீங்கி, பெரும்பாழ்-ஆண்ட நுபவமாயிராநின்ற சூனியவிளக்கத்தை, உலப்பில்-காலத்திரயத்திலுங் கெடுதலில்லாத எவ்விளக்கம் விளக்குகின்றதோ அவ்விளக்கத்தில் நிலைபெற்றிருக்க, அரும்-அரிய, ஒன்றாய் கிடந்த - பரிபூரணமாகிய ப்ரஹ்மாகாரவிருத்தி யுதயமாகி, அதனை உணர்ந்து உணர்ந்து - அவ்விருத்தியிலேயே பிரித

வின்றிய சமாதியை யடைந்து, ஆங்கு சென்று - (அதனால்) அவ்விடத்தி லுண்டாகும் ஆநந்தத்திற் றலைப்பட்டு, (துரியாநுபவம் பிராப்தமாகி) இன்ப துன்பங்கள் - இன்ப துன்பங்களுக்கு ஆதாரமாகிய மாயா மலமானது, செற்றுக்களைந்து - துரிசறநீங்கி, பசை அற்றால் - (சகஜநிலை யப்பியாச மேலீட்டில் சுத்த திரிபுடியும்) நாச மடைந்தால், அன்றே - அக்கணமே, அப்போதே - அந்தவிடத்திலேயே, வீடு- மோக்ஷம், அதுவே - அம்மோக்ஷமே,வீடு வீடு ஆம்- விடுதலையாகிய விதேககைவல்லிய ஸ்திதியாகும். ()

## பிரபுலிங்கலீலை

### கலிநிலைத் துறை.

ஞேயஞானஞாதருவெனு மிவைபலநிற்கு
மாயின்வேறறு முத்தியன்றது சகமாமென்
றேயுமாறிது வதுவெனுஞ் சுட்டிலாவியல்பை
மாயைமாறியதேவிபாலருளினன்வள்ளல்.

(அ - ம்.) ஞேய ஞான ஞாதரு வெனும் - காண்பான் காக்ஷி காணப்படுபொருள் என்கின்ற, இவை- (திரிபுடி ரூபமாகிய) இப்பேதப்பகுதிகள், பலநிற்

கும் ஆயின் (நிவர்த்தியாகாது) பலவாக எங்கணுந் தோன்றி நிகழுமாயின், வேறறு முத்தி யன்று - ஐக்கிய முத்தியன்று, அது - அம்முத்தி, சகமாமென்று - விஷயாநந்தமாகிய பதவி முத்தியாமென்று, வயும் ஆறு - (ஐக்கியமுத்தி பொருந்தும் மார்க்கத்தை, இது அது எனும் சுட்டு இலா-அகச்சமாதி புறச்சமாதி யென்னும் பாகுபாடிறந்த, இயல்பை - என்று மிருந்தபடி யிருக்குஞ் சுபாவ நிலையை, மாயைமாறிய தேவிபால் - * மாயாசம் பந்தங் கடந்த அக்கமாதேவியி னிடத்தில், வள்ளல் - அல்லமாப் பிரபுதேவர், அருளினன் - அநுக்கிரகித்தனர். (உ)

## மௌனதரிசனம்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருமையென்றமௌனத்தைமூட்டுமூட்டு
அடங்காதகரணமைந்துமடங்கிப்போகும்

---

* மாயாசம்பந்தங் கடத்தலாவது மோகவசப்படும் மனதின்வழி தான்செல்லாது தன்பால் அம்மனதை சுவாதீனஞ் செய்துகொள்ளல்.

இருமையென்றவிந்திரியமாண்டுப்போகும்
இருண்மலம் போம்திரோதை யில்லை மயக்கம்நீங்
வெருவுபலகோடிகன்மங்கணத்தினீங்கும் [கும்
வெளியினுள்ளேயெளிதோன்றும்நாதங்கேட்கு
உரிமையுடன்மௌனசித்தியாகவாக [ம்
உருவமுனக்கானந்தவுருவமாமே.

(அ - ம்.) அருமை என்ற மௌனத்தை - (தீவிர தர வைராக்கியமுடையவரால் கோசரிக்கத்தக்க ஹிருதயாம்பரத்தில் நாம ரூப நாட்டந் தவிர்ந்த) மனதை, மூட்டு மூட்டு - (நிறுத்தி) பழகு பழகு, அடங்காத - சலித்தலாதி தொழில்களை யியல்பாயுடைய, கரணம் ஐந்தும் - ஐந்து கரணங்களும், அடங்கிப்போகும் - (அவ்விடத்திலேயே) ஒடுங்கிவிடும், இருமை என்ற இந்திரியம் - ஞானேந்திரிய கர்மேந்திரியங்களென்கின்ற இரண்டின் வியாபாரங்களும், மாண்டு போகும் - ஒழிந்துவிடும் (அதனால் ஆகாசபாவம் தைலதாரைபோல் நிலைத்து), இருள் மலம் போம் - அஞ்ஞானத்தின் காரியமாகிய மலவிக்ஷேபதோஷங்கள் நீங்கிநிற்கும், திரோதைஇல்லை- ஆண்டு நிகழு முள்ளக்குளிர்ச்சியின் முதிர்ச்சியால்

அகண்டாகார விருத்திஞான முதயமாகி ஆவரணம் க்ஷயமடையும், மயக்கம் நீங்கும் - (அப்போது) துக் கமாகிய பிராந்தி நீங்கும், வெருவு - துன்பத்திற்கு ஆஸ்பதமாகிய, பலகோடி கன்மம்-சஞ்சிதாகாமியங் களும், கணத்தில் நீங்கும - க்ஷணத்திநசமடையும், வெளியின் உள்ளே (நாசமடையவே ஆங்கு) விளங் காநின்ற சிதாகாச விருத்தியினில், ஒளிதோன்றும்- ஆநந்தம் ஜனிக்கும், நாதம் கேட்கும் - (அவ்வாநந்த மேலீட்டால்) நாதரூபியாகிய துரியஸொரூபம் தட ஸ்தப்படும், உரிமை உடன் - (அத்துரிய ஸொரூபத் தில்) சுதந்திரத்துடன், (பிரிதலின்றிய) மௌன சித்தி ஆக ஆக - சகஜசமாதி பழகப்பழக, உனக்கு - அம் மனதுக்கு, உருவம் - ஸொரூபம், ஆனந்த உரு வம் ஆம் -ஆநந்தாதீத வடிவமேயாய் நிகழாநிற்கும். (இப்படியாகித் தன்மையாய் விளங்குமென்பதாம்)

## உண்மைநெறிவிளக்கம்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எப்பொருள்வந்துற்றிடினுமப்பொருளைப்பார்த்தங் கெய்து முயிர்தனைக்கண்டிங்கவ்வுயிர்க்குமேலாம்

ஒப்பிலருள் கண்டுசிவத்துண் மைகண்டிங்
குற்றதெல்லாமதனாலேபற்றிநோக்கித்
தப்பினைச்செய்வதுமது வேவினைப்புமதுதானே
தருமுணர்வுபுசிப்புமது தானேயாகி
எப்பொருளு மசைவில்லையெனவந்தப்பொருளோ
டிசைவதுவேசிவபோகமெனுமிறைவன்மொழியே.

(அ - ம்.) எப்பொருள்- (சற்குரு நாதனாற் பெற்ற அருட்பார்வையில் மனதை நிறுத்துங்கா லச்சமயம் நிலைபெறாமல்) எத்தகைய கிரிசியபதார்த்தங்கள், வந்து உற்றிடினும் - தோன்றி பொருந்திடினும் (அதன்மயமாகாமல்), அப் பொருளை - அதனது உற்பத்தி ஸ்தானத்தையே, பார்த்து - நோக்கி (பழசப் பழக), அங்கு எய்தும் - சகலாவஸ்தையில் நிகழா நின்ற, உயிர்தனைக்கண்டு - ஜீவனுக்குக் காரணமான அவித்தையானது நாமரூபத்தோற்றமின்றிக் காண, அதை இங்கு அவ்வுயிர்க்கு - (இவ்விடத்தில் விளங்காநின்ற) அச்சூனிய போதத்துக்கு, மேலாம்- மேம்பட்ட, ஒப்பு இல் அருள் கண்டு - நிகரில்லாத அகண்டாகார விருத்தி விளக்கத்தை யறிந்து,

சிவத்துண்மை கண்டு - (அதற்காதாரமான) துரிய நிலையாகிய சகஜானந்தத்தையடைந்து, இங்கு உற்றது எல்லாம் - (பிராரத்துவ வசத்தால் பகிர்முகப் படுங்கால்) ஈண்டு தோன்றுவனயாவையும், அசஜே லே பற்றிநோக்கி - தனது துரிய விளக்கமாகவே பழகி யறிந்து, தப்பினைச் செய்வதும் அதுவே - அன்னியப்பிரதீதி நிகழினும் அந்நிகழ்ச்சி துரிய சொரூபமாகவேயமையும், நினைப்பும் அதுதானே - ஆண்டு யாதாயினுமோர் சங்கற்பவெழுச்சி யுண்டாயின் அஃதுயவ்வாறே நிகழும், சருமுணர்வு புசிப்பும் கொடுக்காநின்ற பிராரத்துவ நுகர்ச்சியும், அது தானே யாகி - அவ்வடிவேயாகி, எப்பொருளும் - எப்பதார்த்தங்களும், அசைவு இல்லை என - பரிபூரண சொரூபமாகவே நிகழுமென்பதாக, அந்தப் பொருளோடு - அப்பரிபூரண சொரூபத்துடன், இசைவதுவே - திரிபுடி ரூபத்துவைதமற் றிரண்டறப் பொருந்துதலே, சிவபோகம் எனும் - ஐக்கிய முத்தியென்று சொல்லும், இறைவன் மொழி - ஈஸ்வரனாற் கூறப்பட்ட வேதாகமங்கள். (௯)

## திருவம்மானை.

காண்பானுங்காட்சியுங்கைவிட்டேனம்மானை
கைவிட்டவின்பங்கரைகாணேனம்மானை.

(அ - ம்.) காண்பானும் காட்சியும் - சற்குரு நாதனாற் காட்டியவுளவில் மனதை நிறுத்தி அகண்டாகார விருத்தியையடைந்து அதனால் துரியப் பேற்றில் நிலைத்து திரிபுடிரூபத் துவைதத்தை, கைவிட்டேன் - அற்றேன், கைவிட்ட இன்பம் - அற்ற அத்தருவாயில் நிகழாநின்ற ஆநந்தாதீதவடைவிற்கு, கரைகாணேன் - அவதியை யறிந்திலன், * அம்மானை - மகளீர் கைகளிற் பந்து கொண்டு ஆடும் ஓர் விளையாடல் (ரு)

---

* அம்மானை:—அம்-சச்சிதாநந்த வழகினை யியல்பானே யுடைய, மான் - (திரிபுடி ரூபத் துவைத மிறந்த சுத்த) மனம். மாக்ஷிமையுடையது எப்பதார்த்தமோ அப்பதார்த்தத்தினையே மனமென்ப "பொன்போலிலங்குமனம்" எனக் கருணாகரசுவாமிகளருளிய ஸொரூபானந்தப்பொருளான உபநிடதக்கவியான் தெற்றென விளங்கும்.

## சிவஞானசித்தியார்.

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

அறியாமையறிவகற்றியறிவினுள்ளே
 யறிவுதனையருளினாலறியாதேயறிந்து
குறியாதேகுறித்தந்தக்கரணங்களோடுங்
 கூடாதேவாடாதேகுழைந்திருப்பையாகிற்
பிறியாதசிவன்றானே பிரிந்துதோன்றிப்
 பிரபஞ்சபேதமெல்லாந்தானாய்த்தோன்றி
நெறியாலேயவையெல்லாமல்லவாகி
 நின்றென்றுந்தோன்றிடுவனிராதாரனாயே.

(அ - ள்.) அறியாமை அறிவு-சகலகேவலங்களும் சங்கற்ப ஆகாரமும் சங்கற்ப வெழுச்சியும், அகற்றி-(ஆகாமல்) நீக்கி, அறிவின் உள்ளே - (ஸொரூபத்தில் மனம் ஏகாக்கிரதையடையும் பொருட்டு) சங்கற்ப முதிப்பதற்கு முன்னுள்ள விடத்தினுள்ளே (நாடிநின்று), குறியாதேகுறித்து - ஆண்டு நிகழும் சூனியவிளக்கத்தைக் குறியாது அச்சூனியத்தை எவ் விளக்கம் விளக்குகின்றதோ அவ்விளக்கத்தையே யூகித்து (அவ்வாறு யூகித்து நிற்குந் தருணத்

தில்), அந்தக்கரணங்களோடுங் கூடாதேவாடாதே- (அந்தருணத்தில்) மனோராஜ்ஜியம் (இந்திரியவழி வருதல்) சுழுப்தியாகிய பிரதி பந்தங்கள் (அதிசன்னத்தமாய் வருதற்குத் தலைப்படும் அக்கணமே யறிவினது வீரப்பாட்டினுற் றகைத்து, குழைந்து இருப்பை ஆகில் - (எதார்த்த ஸொரூப முதயமாகிற வரையில்) பிரிதலின்றி திடவைராக்கியத்துடன் தைலதாரைபோல் நிலைபெற்றிருப்பையாகில், அருளினுல் - ஆங்குண்டாகாநின்ற அகண்டாகார விருத்தி ஞானத்தினுல், அறிவுதனை - ஜீவபோதத்தை, அறியாதே-உணராமல், அறிந்து - (ஆண்டு ஜனிக்கும் ஆநந்தமயமாகவே) உணர்ந்து (இருப்பையாகில்), பிறியாத சிவன்தானே - (பிரமாதி ஸ்தம்ப பரியந்தம் உள்ளும் புறம்பும்) பரிபூரணமாய் நிறைந்து விளங்கா நின்ற துரியந்தானே, பிறிந்து தோன்றி - அவித்யா நாசத்தை யுண்டுபண்ணி நனவிற் சுழுப்தியாநந்தமாகவிளங்கப்பெற்று (அது வன்றி), பிரபஞ்சபேதம் எல்லாம் தானுய் தோன்றி - புறச்சமாதி அப்பியாசத்தால் பாஹ்ய பிரதீதிகள் யாவும் அச்சொரூபமாகவே விளங்கி, நெறியாலே - சகஜ

சமாதி யப்பியாச மேலீட்டினாலே, இவை எல்லாம் அல்லவாகி - யாவும் ஆநந்தமயமாய் விளங்குகிற தென்கிறவந்நினைவு நீங்கி, நின்று - (திரிபுடிரூபத் துவைதமற்று ஐக்கியத்தன்மையாய்) நிலைத்து, என்றும் - சதாகாலமும், தோன்றுமவன் நிராதாரனாயே விளங்காநின்ற சத்தாசாமான்னிய வடிவாயிருப்பன் (அஃதாவது) விதேக கைவல்லியத்தன்மையனாகி விளங்குவன் என்பதாம். (சு)

## பிரத்தியக்ஷாநுபூதிவிளக்கம்.

### கட்டளைக்கலித்துறை.

இதயம்பரமாவிலங்கிடக்கண்டங்
கிதுவதுவென்
றெதுங்கிடக்கண்டிலனாயலென்
பதுறுவதுண்டோ
மதியாதிசிற்சடபேதப்பகுதிகள்
வாழ்வதுண்டோ
எதுவுந்தனை யன்றிக்காணுமற்
போகவிருந்தனனே.

(அ - ம்) இதயம் பரமா - இதயாம்பரத்தில் மனதை தைலதாரைபோல் இறுத்தி (ஆங்கு), (இலங்கிடக்கண்டு - (உண்டாகாநின்ற) அகண்டாகார விருத்தி விளங்கி— உணர்ந்து, அங்கு - அவ்விளக்கத்தில், இது அது என்று ஒதுங்கிட - தன்னுடைமை முன்னிலை படர்க்கை எனும் பேதப் பகுதியாகிய திரிபுடிரூபம் நீங்கிட, கண்டிலன்-தனக்கொன்றுந் தோன்றாது சகஜாநந்தமா விளங்குவானாயின், நான் அயல் என்பது - நான் அன்னியமென்று தோன்றுந் தன்மை, உறுவது உண்டோ - அடைவதுவவோ, மதியாதி சிற் சடபேதப்பகுதிகள் - தன் தன் காரியத்தை நோக்கத் தான் சித்தாயும் ஆத்மாவைநோக்க ஜடமாயும் பேதப்பட்டுள்ளனவாகிய புத்தி முதலிய தத்துவக் கூட்டங்களின் உடனிகழ்ச்சியாகிய ஜீவபோதம், வாழ்வது உண்டோ - நிகழ்வதுதான் உண்டாகுமோ, எதுவும் - எத்தகைய பாவா பாவ நிலைகளும், தனை அன்றி - ஸொரூபவிளக்கத்தை யன்றி, காணாமற்போக-தோன்றாமல் திரிபுடிரூபமுமிறந்து, இருந்தனன் - சத்தாசாமான்னிய வடிவாய் விளங்கினன். (ஏ)

## ஞானவாசிட்டம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பரந்தவுள்ளத்தினொருமையின்செறிவினை
பழகலாற்பெருஞ்சித்து
நிரந்தரித்தெங்குஞ்சமமதாயினன்புவி
நிறைவுறும்வெயிலென்னத்
திரந்தருஞ்சித்தினொருமையை நெடும்பகற்
செறிபரிசயஞ்செய்ய
வரந்தைதீர்ந்தசற்பாவசாமானிய
மடைந்தனனதனாலே.

(அ - ம்) பரந்த உள்ளத்தின் - விரிந்த மனதினது உற்பத்தி ஸ்தானமாகிய இதயாம்பரத்தில், ஒருமையின் செறிவினை - மனதை நிறுத்தி ஆண்டே ஐக்கியத்தன்மை பொருந்துதலை, பழகலால் - பழகுதலால் (அப்பழக்கத்தின்பரிபாக ஸ்திதியில்), பெரும் சித்து நிரந்தரித்து - ப்ரஹ்மாகாரவிருத்தி (உதயமாகி), ஆண்டு நிகழு மானந்தத்தில் நிரந்தரம் நிறைதல்பெற்று, புவிநிறைவுறும் - உலகத்தில் நிறைந்திருக்கின்ற, வெயிலென்ன - சூரியகிரணத்தைப் போல,

எங்கும் சமமதாயினன் - பாகியாந்தரம் என்னும் வேறுபாடுகளின்றி யாண்டும் சமமதாயிருந்தான், திரம் தரும் சித்தின் - ஸ்திரத் தன்மையைக்கொடுக்கின்ற சகஜாநுபவமாகிய சிற்சாமான்னியத்தின், ஒருமையை - ஐக்கியத்தை, நெடும் பகல் - திரிபுடிரூபத்துவைதம் அத்தியந்த நிவர்த்தியை யடைகிற காலம்வரையில், செறி பரிசயம் செய்ய - மிகுந்த பழக்கஞ் செய்ய, அமைந்த நீர்ந்த - துன்பப்பகுதிகளின் அத்தியந்த நிவர்த்தியுண்டாகின, அதனல் - அதனல், சற்பாவ சாமானியம் அடைந்தனன் - சத்தா சாமான்னிய ஸ்திதியாயிருந்தனன். (அ)

## ஞானசூரியன்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சாக்கிரசொப்பனங்களிரண்டையுந்
தாண்டிப்போறற்
சூக்கமாஞ்சுழுத்திவந்து
தொல்லிருளாகிமூடும்
ஆக்கமுமழிவு நில்லா
தறிவினலதுவும்போறற்

போக்கொடுவரவுமில்லாப்
பூரணப்பொருள்வந்தெய்தும்.

(அ - ம்.) சாக்கிரசொப்பனங்கள் - (சற்குருநாத ஞற் பெறப்பட்ட அருட்பார்வையில் மனதை நிறுத்திப்பழகும் பழக்கத்தால்) புறவிந்திரிய அகவிந்திரிய வியாபாரங்கள், இரண்டையும் - (ஆகிய) இவ்விரண்டையும், தாண்டிப் போனல் - கடந்து சென்றல் (ஆகாசபாவனை தைலதாரைபோல் மேவிட்டு விளங்கும்), சூக்கம் ஆம் - (அத்தருணத்தில்) சூக்ஷ்ம அவஸ்தையாகிய, சுழுத்தி வந்து - சுழுப்தியுண்டாகி, தொல் இருளாகி மூடும் - காரணசரீரத்தில் லயப்படுந்தன்மை யுண்டாகவுங்கூடும், ஆக்கமும் அழிவும் - (அவ்வண்ணமாகாமல் திடவைராக்கியத்துடன் அவ்விடத்தில் அறிவோடுகூடி பிரிதலின்றியிருக்கில்) உற்பத்தியும் நாசமும்,இல்லாது- இல்லாத, அறிவிஞல் (ஆண்டு விளங்கும்) பரிபூரணவிருத்தி விளக்கத்தால், அதுவும் - அக்காரணசரீரமும், போனல் - நாசமடைந்தால், போக்கொடு வரவும் இல்லா - அகம் புறம் இல்லாத, பூரணப் பொருள் வந்து எய்தும் - நிர்விகற்ப சமாதி வாய்

த்து துரிய ஸொரூபத்தின் பிராப்தி யுண்டாகி ஆண்டு நிகழும் சகஜானந்தவநுபவ ஆரூடத்தின் இறுதியில் திரிபுடி ரகிதஸ்திதி யடையப்படும். (க)

## ஆனந்தருத்திரேசர்வண்டுவிடுதூது.

கலிவெண்பா.

மறைக்கோவணத்தான்
மறைச்சிலம்பான்மாவான்
மறைக்கோவறிவரிய மாண்பா—
னெறிக்கொள்
உயிருக்குயிரானுயிரறிவுக்கெட்டான்
பயிலுயிர்க்கேயின்பருளும் பண்பான்—
பயிலுநர்க்குக்
கண்ணுமானந்தங்கனிவாயுமானந்தம்
வண்ணவதனமு மானந்தம்—
தண்ணறல்சேர்
வேணியுமானந்தம்வியன்மார்புமானந்தம்
பூணுமானந்த புயங்கரந்தா—
ளூணுடையு
மானந்தமானந்தமானந்தமானந்த
மானந்தமெவ்வுறுப்பு மானந்த—
மானந்தம்

காஞ்சியுமானந்தமாய்க்
காணநிற்பானத்தகையின்
வாஞ்சையுறுமானந்தவள்ளல்.

(அ - ம்.) * மறைக்கோவணத்தான் - வேதங்களைக் கௌபீனமாகத் தரித்தவனாகியும், மறைச்சிலம்பான் - வேதங்களில் கோஷிக்காநின்ற மகாவாக்கிய வநுசந்தான மேலீட்டா லுண்டாகும் ப்ரணவ சப்தத்தின் இலக்ஷியார்த்த விறுதியில் விளங்குபவனாகியும், மாவான் -வேதங்களையே குதிரையாக

* கோவணம் :—கோ - பசு, வணம் - வர்ணம், எனப் பொருள் படுதலால் பசுத்தன்மையாகிய ஜீவர்களது சங்காதத்தைக் குறிப்பிக்கின்றது.

மறை, வேதம், சிற்சத்தி யென்பன ஒருபொருட்கிளவி. இத்தகைய சிற்சத்தியினிடத்து நானாவகை ஜீவபேதங்கள் அத்தியாசமாய்த் தோன்றுதலா லிவ்வத்தியாச சங்காதங்கட்கு அதிஷ்டான சிற்சத்தியை ஆன்ம வடிவாகவே அமரச் செய்தல் யாதோ அதுவே கோவணத்தைத் தரித்தல் என்னும் பதங்கட்குத்திரண்ட ஆந்தரார்த்தமாம்.

வுடையானுகியும்(உள்ளவனை),மறைக்கோ - வேதங்களிற் கூறப்பட்டுள்ள மகாவாக்கிய விசாரத்தைப் பரோக்ஷவாயிலாயறிந்து, (அம் மட்டு முள்ளவர்களால்), அறிவரிய - அறிதற்கரிய, மாண்பான் - மாக்ஷிமைப்பட்டவன், நெறிகொள் உயிருக்கு - (சற்குருதுவாராபெற்ற வருட்பார்வையில் மனதை தைலதாரைபோல்) நிறுத்திப்பழகும் ஜீவ அறிவுக்கு, உயிரான் - (ஆண்டு நிகழாநின்ற ஆவரணத்தைப்பழக்கமிகுதியா லுண்டாகின்ற அகண்டாகார விருத்திஞானத்தாணீக்கி) தூய சிவமாய் விளங்கப் பட்டவன், உயிர் அறிவுக்கு - ஜீவபோதநாச வடைவைப் பெறுதவருக்கு, எட்டான் - அறியப்படாதவன், பயில் உயிர்க்கே - (சற்குருநாதன் காட்டிய வளவில் மனதை நிறுத்திப்) பழகாநின்ற போசமுடையவர்க்கே, இன்பு அருளும்பண்பான் - நனவிற் சுழுப்தியானந்தத்தைத் தந்தருளுங் குணத்தை யுடையவன், பயிலுநர்க்கு - (அவ்வானந்தத்தை) இடையறுவப்பியாசம் புரிபவர்க்கு,கண்ணும்ஆநந்தம் - சட்புலனுமாநந்த பாஷ்ப மாகவே நோக்காநிற்கும், கனிவாயும்

ஆநந்தம் - (அன்னோர் வாக்கின்கணிருந்து வாநின்ற) இனிய சொற்களும் வேத ஸொரூபமாகவே நிகழும், வண்ண வதனமும் - முகத்தி னெப்பனையும், ஆநந்தம் - ப்ரஹ்ம தேஜஸாகவே விளங்கும், தண் - குளிர்ந்த, * அறல் சேர் - கங்கையைத்தாங்கிய, வேணியும் - ஜடைகளும், ஆநந்தம் - ஆநந்தமே, வியன் மார்பும் ஆநந்தம்-பெருமை பொருந்திய மார்பு மாநந்

---

* ஈசனும் ஞானியு மொன்றென்று பிரபல சுருதிகளனைத்தும் முரசறை கின்றமையின் ஈண்டு ஞானி கங்கையைத்தரித்தல் உமையவளை யொருபாகம் வைத்தல் என வுருவகப்படுத்தி யெழுதலாயிற்று. பரசிவத்தினின்றும் பிரிதலின்றி யிருக்கும் கங்கை, உமையவள் என்னும் இரு சக்திகளின் ஆந்தரார்த்தம் முறையே யாதெனின்:— கேவலம் சுத்த ப்ரஹ்மத்தில் அக்கினியிற் சூடு போல அபின்னமாய் வியக்தமாகாமல் அடங்கியிருக்கும் எச்சிற்சொலிதையாகிய சத்தியோ அதனையே கங்கையென்றும் அஃது என்றான்றும்

தம், பூணும் ஆாந்தம் (அணிந்திராநின்ற) ஆபரணங் களு மாநந்தமய மாகவே பிரகாசியா நிற்கும், புயம் கரம் தாள் நாண் உடையும் ஆநந்தம் - புஜங்களுங் கைகளும் பாதங்களும் அரைஞாணும் வஸ்திரமும் ஆநந்தமாகவே நிகழாநிற்குங் குறியை யுணர்த்து மாதலால், ஆநந்தம் ஆநந்தம் - ஆநந்த மாநந்தம், எவ்

---

கேவல ப்ரஹ்ம மய மாகவே இருத்தலின் சிரத்தின் கண் கங்கையைத்தரித்த லென்றும்; புருஷ சமூகத் தில் ஸ்திரீக்கு இன்பம்ஜனித்தாற் போல கேவல சுத்த ப்ரஹ்மத்தினிடத்து அச்சத்திக்கு அவிகிருத மாகிய சத்வ ரஜோ தம குணங்களுண்டாயின வென் றும் அது சத் ரூபசத்தி சித்ரூப சத்தி ஆநந்தரூப சத்தி யென்னும் நாமங்களை வகித்து சச்சிதாநந்த மெனப் பெயரிய எச்சத்தியுளதோ அது சர்வ அத் தியக்ஷங்களை விளக்கிவைப்பதற்குப் பற்றுக்கோடா க விருந்து ப்ரஹ்மத்தினின்று மதனை வேறுபடுத்த முடியாததாயிருத்தலினால் அதனையே உமையவளெ ன்றும், அர்த்தநாரீஸ்வரி யென்றுங் கூறப்படும்.

வுறுப்பும் ஆநந்தம் - எப்பதார்த்தங்களும் ஆநந்தமய மாகவே விளங்கப்படும், காஞ்சியும் - (இப்பெற்றி யால்) உலகப்பிரதீதியும், ஆநந்தமாய் - ஆநந்தவடி வாகவே, காணநிற்பான் - விளங்கும்படி நிற்பதால், அத்தகையில் - கூடஸ்த ப்ரஹ்ம ஐக்கிய நிலையில், ஆநந்தவள்ளல் - துரியசிவம், வாஞ்சை உறும்-நிலை ப்பேறுடைத்தான விதேக கைவல்லிய ஸ்திதியாய் அமரும். (௧0)

## துகளறுபோதம். (வெண்பா.)

அண்ணலுமாநந்தமருளுமாநந்தமுயி
ரெண்ணிலாவாநந்தமெவ்வுலகும் - பண்ணி
யளித்தழிப்பராகியமரருமாநந்தங்
களித்ததுவேயெங்குமெனக்காண்.

(அ - ம்) அருளும் - (சற்குருநாதனுற் காட்டிய வளவில் மனதை நிறுத்திப்பழகும் பழக்க மிகுதியா லுதயமாகும்) அகண்டாகார விருத்தி ஞானமும், ஆநந்தம் - ஆநந்தமே, அண்ணலும் ஆநந்தம் - (அவ் வாநந்தத்தி லிடையறாப்பரிசயு மேலீட்டினு லுண்

டாகும்) துரியஸொரூபமு மாநந்தம், எண்ணிலா - (சகஜாநந்தம் பழகப்பழக) கணக்கற்ற, உயிர் ஆன்ம கோடிகளும், ஆநந்தம் - ஆநந்தமாகவே நிகழா நிற்கும், எவ்வுலகம் - எவ்வகைப்பட்ட வுலகங்களையும், பண்ணி-சிருஷ்டித்து, அளித்து-காப்பாற்றி, அழிப்பர் - சம்ஹாரஞ்செய்யும் மூர்த்திகள்), ஆதிஅமரரும் - முதலாகவுள்ள தேவர்களும், ஆநந்தம் - ஆநந்த ஸொரூபமாகவே விளங்காநிற்பர் (ஆதலால்), எங்கும் களித்ததுவே எனக்காண் - எவ்விடத்தும் சத்தா சாமான்னிய வடிவமே நிலைபெற்றிருப்பதென் றறியக்கடவாய். (கக)

---

☞ அகண்டாகார விருத்தியிலேயே துரியசிவம் விளங்குமென்பதற்குப் பிரமாணம்

---

ஞானவாசிட்டம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அன்றியேயதுதனையுந்தீரநீக்கி

யுறிபொருளின்முடிவானுவறிவாற்றுன்னி

யொன்றுமுபசாந்தனாப்பளிங்குபோ
லுள்ளொளிமேவிசீவனொருமித்துநிற்க
நன்றுணர்சிற்சுகராகிப்பெரியோராகி
ஞானபரராய்ப்பரமனன்றாய்ப்பெற்றோர்
நின்றசைவார்புறத்தின்மயிற்பீலிபோல
நிலைகலங்கார்மேருவைப்போ னெஞ்சினுள்ளே.

(அ - ம்) அன்றியே - அதுவுமல்லாமல், அதுதனையும் - அந்த ஏகசங்கற்பத்தையும், தீரநீக்கி-(அப்பிபாச மிகுதியால் ஆங்குண்டாகும் அகண்டாகாரவிருத்தியினால்) மீண்டும் உற்பன்னமாகாமல் நாசஞ்செய்து;அறிபொருளின் முடிவான - அச்சங்கற்ப நிவர்த்தியினந்தமான, அறிவால் ஆண்டுநிகழும் அகண்டாகாரவிருத்தியிலெழாநின்ற நனவிற்சுழுப்தியானந்தத்தால், துன்னி - நிறைதலடைந்து, ஒன்றும் உபசாந்தனாப் - பிரிதலின்றிய உபசாந்தத்தை மேற்கொண்டவனாய், பளிங்குபோல் உள் ஒளி மேவி-நிதரிசனமாக வகத்தின்கண் துரியநிலையையடைந்து,ஜீவன் ஒருமித்து நிற்க - ஜீவபோதமற்று சிவபோதமாய் விளங்க,நன்று உணர் - கரதலாமலகம்

போல் அறிந்த, சிற்சுகராகி - சிவாநந்த வடிவராகி, பெரியோர் ஆகி பரிபூரணத்தன்மையுடையவராகி, ஞானபரர் ஆய் உள்ளத்தை யுள்ளவாறறிபவராய், பிர மஞன்றாய் பெற்றோர் சகஜானந்தத்தைத் திடமாகப் பெற்றுள்ளவர்கள், புறத்தின்மயில் பீலிபோல - பாஹியத்திலுள்ள மயில் இறகையசைக்கி லெவ்வண்ணம் அவ்விறகுக ளசையினும் தனது சுவாபாவிக அங்கங்கள் கலைதலின்றியே யிருத்தல்போல், நின்று அசைவர் பிராரத்துவ போகங்கள் நிகழினும் அஃதையு மனுபவிப்பர், நெஞ்சின் உள்ளே-அகத்தினிடமாக, மேருவைப்போல் - மேருமலை யைப்போல், நிலைகலங்கார் - அச்சமயத்திலும் தன் சுபாவநிலையின்கணின்றும் பிறழ்தலடையாமலிருப்பர். (க)

## திருமந்திரம்.

அன்புசிவமிரண்டென்பரறிவிலார்
அன்பேசிவமாவதாருமறிகிலார்
அன்பேசிவமாவதாருமறிந்தபின்
அன்பேசிவமாயமர்ந்திருப்பாரே.

(அ - ம்.) அன்பு - சற்குரு நாதனாற் காட்டிய நிலையினின்று பழகுங்கா லுதயமாகும் அகண்டாகார விருத்தியானது, சிவம் (அஃது திடப்படும் வண்ணம் அசமுக வப்பியாசத்திலிடையறாப் பிரிதலின்மையாகிய ஸ்திதியை மேற்கொண்டிராநின்ற துரியாநுபவத்தை, அறிவு இலார் - (கலைஞான மட்டிலுணர்ந்து) பெத்த நிலைசக்க ணின்றவர், இரண்டு என்பர் - சமாதி நிலையைப் பொருந்தி நின்ற நிலையேயன்றி) அவ்விரண்டநுபவமும் வேற்றுமையுடைத்தென்றுசொல்லுவர், அன்பே - (அவ்வகண்டாகார விருத்தி ஞானத்தில் பிரிதலின்றி) யிடையறாச் சமாதி பழகி நிற்றலே, சிவமாவது - துரியநிலையென்பது, ஆரும் அறிகிலார் - கலைஞான மட்டிலுள்ள எத்தகையர்களும் அறிய மாட்டார்கள், அன்பே சிவம் ஆவது - அகண்டாகார விருத்தி ஞானத்திலிடையறாப் பிரிதலின்றிய சமாதி பழக்கத்தின் முடிபே துரியநிலை யென்பது, ஆரும் அறிந்த பின் - (கலைஞான வல்லுநராயினும் சற்குருநாதனையடுத்து அவராற் காட்டிய உளவில் மனதை நிறுத்தி மேற்சொல்லிய தன்மையை) யறிந்த பின்னர் எத்

தகையினரும், அன்பே சிவமாய் - அவ்வகண்டாகார விருத்தி ஞானத்திற் பிரிதலின்றிய சமாதி பழகி யிறுதியில் துரியவடிவாய், அமர்ந்து இருப்பார் - நிலை பெற்றிருப்பார். (உ)

## அவிரோதவுந்தியார்.

ஆங்கறியாமையுஞ்சாராதறிவொடுந்
தூங்குவாய் நாளுமென்றுந்தீபற
தோன்றும்பரம்பொருளுந்தீபற.

(அ - ம்) உந்தி - சற்குருநாதன் காட்டிய வுளவின்கண் அந்தக்கரண விருத்தியை நிறுத்தி, பற - நிரந்தர சாதகத்தைச் செய்வாயாகில், ஆங்கு - (விகற்பவுணர்வாகிய சித்த சலனமற்று விளங்குமுள்ளக்குளிர்ச்சி சகிதமாகிய) அவ்வநுபவத்தினிடத்தில், அறியாமையுஞ் சாராது - (அதிசன்னத்தடாய் வருதற்குத் தலைப்படும்) சகல கேவலாவஸ்தைப் பொருந்தாமல், அறிவொடும் - (பழகும் பழக்கமேலீட்டி லுளவாரும ப்ரஹ்மாகார விருத்தியாகிய சுபாவவறிவோடுங்கூடி, நாளும் - சகல கேவலாவஸ்

தை அத்தியந்த நிவர்த்தி யடையும் பரியந்தம், தூங்குவாய் - சமாதிஸ்திதியைப் பெற்றிருக்கில், பரம்பொருள் தோன்றும் - துரிய சிவமானது நிதரிசனமாகும் என்பதாம். (௩)

## திருவம்மானை.

உற்றமறப்புநினைப்பற் றேறன்காணம்மானை
யோவாதசித்தத்தே யொத்தேன்காணம்மானை.

(அ - ம்.) உற்ற மறப்பு நினைப்பு அற்றேன் - (சற்குருநாதன்பாற்பெற்ற அருட் பிரசாதவுளவில் அந்தக்கரண விருத்தியை நிறுத்தி நிரந்தரசாதகஞ் செய்யும் பரிபாகஸ்திதியி லுளவாகும் ப்ரஹ்மாகார விருத்தி யநுபவத்தால்) என்பாற் பொருந்தியிரா நின்ற சகல கேவலாவஸ்தையின் துவந்துவங்கள் நாசமடையப்பட்டது, ஓவாத சித்தத்தே யொத்தேன் - (அடையவே) என்றுங் கெடுதலில்லாத துரியாநுபவத்திலேக்கிய நிலையுங்கூடிற்று. (௪)

## அமிர்தசாரம். (வெண்பா.)

போக்குமனமொருக்கிப்போதமங்கில்லாமை
நோக்கியநோக்காலந்நோக்கத்தை - நோக்கென்றான்

ரேன்றுதவண்ணம்போய்த் துஞ்சிற் றிருளறிவாச் சான்றுகிநின்றேனுன் றன்.

(அ - ம்.) போக்குமனமொருக்கி - பஞ்சேந்திரிய விடயங்களிற் செல்லுகின்றமனதை(மஹாவாக்கிய வநுசந்தானத்தாற் செல்லவொட்டாது தடுத்து அவ்வநுசந்தானம் நிகழும்ஹிருதயாம்பரத்தில்) நிறுத்தி, போதமங்கில்லாமை-(பழகும் பழக்கமேலீட்டி லுளவாகும்) சூனியப் பிரதீதியை, நோக்கிய - அறிந்திருக்கின்ற, நோக்கால் - அவ்வறிவால், அந்நோக்கத்தை - அவ்வறிவையே, நோக்கென்றான் - (உள்ளது விளங்குகிற பரியந்தம்) உணர்ந்து கொண்டிருக்க வேண்டுமென்று குருநாதன் கட்டளை யிட்டனன் (அவ்வாறிருக்குந் தருணத்தில் ப்ரஹ்மாகார விருத்தி யுதயமாகி, இருள் - அஞ்ஞானமானது, அறிவாய்-ஞானமயமாய், தோன்றுவண்ணம்போய் - ஜனியாவாறுநீங்கி, துஞ்சிற்று - ஆண்டு நிகழும் ஆநந்தத்தால் நிவர்த்தியை யடைந்தது, நான்றான் - இப்பெற்றி யான் ஈண்டு நிகழும் கூடஸ்தவறிவே, சான்றுகி நின்றேன் - துரியசிவமாக விளங்கினேன். (ரு)

## அமிர்தசாரம். (வெண்பா)

இன்பக்கண்ணீராட்டியேத்தியெழின்மலரா
மன்பிட்டுத்தம்மையமிர்தாக்கி - முன்புற்ற
சிற்சடமெல்லாஞ்சிவமாகநோக்கல்சிவற்
கர்ச்சனையாகுமது.

(அ - ம்.) இன்பக்கண்ணீர் ஆட்டி - சற்குருநாதன் காட்டிய லக்ஷியார்த்தத்தில் அந்தக்கரண விருத்தியை நிறுத்தி நிரந்தரம் பழகும் பழக்க மேலீட்டிலுளவாகும்) சூனிய சகிதவுள்ளக் குளிர்ச்சியை யடைந்து, ஏத்தி - உள்ளது (ப்ரஹ்மாகார விருத்தி) விளங்குகிறபரியந்தம் பிரிதலின்றிக்காத்து, எழில் மலராம் அன்பிட்டு - ஆண்டுண்டாகும் பிரகாசவடிவினையுடைய சச்சிதானந்த விருத்தி யநுபவத்தில் பிரிதலின்றியிருந்து தம்மையமிர்தாக்கி - அவ்வாறு பிரிதலின்றி யிருத்தலென்னும் நினைவை நிர்விகற்ப சமாதியின் மேலீட்டால் ஆநந்தவடிவினை யியல்பானே யுடைய துரிய ஸொரூபமாயமரும் நிலையைப் பெற்று, முன்புற்ற - பெத்ததிசைக்கண் பொருந்திய, சிற்சடமெல்லாம் - சித்சடபேதப் பகுதிகளியாவையும், சிவமாக நோக்கல் - இன்றி யமையாத பிரா

ரத்தவசமாய்ப் பகிர்முகப் படுங்கால் அகத்தின்கண் விளங்கிய துரியாநுபவ மாகவே பார்த்தலே, சிவற்கு - அத்துரியவஸ்து விற்கு, அர்ச்சனையாகும் - அருச்சித்தலாகும். (அ)

---

☞ எத்தகைய பதவிப்பேற்றின்கணின் றவேளாராலுமறியப்படாத தேன்பதற்குப் பிரமாணம்.

---

பஞ்சாக்கரப்பஃறேடைவெண்பா.

பொன்னுடரிந்திரனும் பூமகனும்மாதவனு
மென்னடுமெங்காளுமேடீநாடித் - தன்னை
வேதமுடிவின்விளங்குமொளியுயிரின்
போதமுடிவிற்பொருந்துமொளி * * *

(அ - ம்.) வேதமுடிவின் - வேதங்களினிறுதியில், விளங்கும் - பிரதிபாதிக்கப்படும், ஒளி துரியவொரூபத்தை, பொன்னுடர் - (வானுலகத்திலிருக்கிற) தேவர்களுக்கு, இந்திரனும் (தலைவனான) தேவேந்திரனும், பூமகனும் - தாமரை புஷ்பத்தில் வசிக்கும்

பிரமதேவனும், மாதவனும்-திருப்பாற்கடற் சயனனான மகாவிஷ்ணுவும், எந்நாளும் - சர்வகாலமும், என்றும் - எவ்வகைபட்ட திக்குகளிலும், நாடி - (ஆவலாற் சென்று) தேடியும், துன்னாத - அடையப்படாத, ஒளி - (அத்தகைய தாய) துரிய ஸொரூபத்தை (எவ்வா றடையலாமெனின்), உயிரின் போத முடிவில் - (சற்குருநாதனாற் காட்டிய வுளவின்கண் மனதைநிறுத்தி பரிசயஞ் செய்யச்செய்ய அப்பரிசய மேலீட்டிலுண்டாகும் அகண்டாகார விருத்திஞானத்தினால்) ஜீவபோதவத்தியந்த நாசவடைவில், பொருந்தும் - அடையப்படும். (௧)

---

☞ சங்கற்ப வாகாரம் தவிர்ந்து மறுசங்கற்ப முதிப்பதற்கு முன்னின்றுள்ள இடம் ஸொரூபப்பிரகாசம் என்பதற்குப் பிரமாணம்.

---

ஞானவாசிட்டம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

தெரிபொருளுந்தரிசனமுஞ்சேரும்போதிற்
சேர்ந்தசுகவறிவுமிகச்சிறந்ததாகுங்

தெரிபொருளால் வளைப்புண்டாற்பந்தமாகுந்
தெரிபொருளைவிட்டகன்றாற்றிடங்கொள்வீடாந்
தெரிபொருளுந்தரிசனமுஞ்சேரும்போதிற்
சேர்ந்தவனுபூதியிடர்தீர்ந்ததாகுந்
தெரிவுறவாய்சதுபற்றிநிற்பாய்நீநின்
றிரநிலையாஞ்சுழுத்திதனைச்சேருவாயே.

(அ - ம்.) தெரிபொருளும்-சங்கற்ப வெழுச்சியும், தரிசனமும் - ஞானவிளக்கமும், சேரும் போதில் - சங்கற்பவச மாகாது அச்சங்கோற்பத்தியை விளக்கும் விளக்கத்தை இடையறாது நோக்கிப்பழகப்பழக மேற்கூறிய விரண்டும் லயப்படும்போது, சேர்ந்த சுகவறிவு - அவ்விடத்திலுண்டாகும் ஆநந்தபோதம், மிகச்சிறந்ததாகும்-மிகவும் சிறப்புடைத்தாய் நிகழும், தெரி பொருளால் வளைப்புண்டால் சங்கற்பவசப்பட்டால், பந்தமாகும் - ஜனனமரணப்பிரவாகத்துன் பத்திற்கேது ஆகும், தெரிபொருளைவிட்டகன்றால் - சங்கற்பவசமாகாது (அச்சங்கோற்பத்தியை விளக்கும் விளக்கத்தையேநோக்கி) ஸொரூபத்தி லேகாக்ரதையடைந்தால், இடங்கொள் வீடாம் - நிலை

பேறுடைத்தாய் விளங்காநின்ற மோக்ஷமாம், தெரி பொருளும் - சங்கற்பமும், தெரிசனமும் - ஞான விளக்கமும், சேருட்போதில் - (விஷயாகார பரிணாமத்தை யடையாது) அதிஷ்டான சேதனத்திலொருமிக்கும் போது, சேர்ந்தவனுபூதி - ஆண்டுண்டாகாநின்றவநுபவம், இடர்தீர்ந்ததாகும் - ஜனன மரணத் துன்பம் நீங்கியதாகும், தெரிவுற - நன்றாக, ஆங்கு - அவ்விடத்தில், நீ அது பற்றிநிற்பாய் - நீ அவ்வநுபவத்தைப் பிரிதலின்றி யிருப்பாயாகில், நின்றநிலையாம் - உன்னுடைய எதார்த்த நிலையாகிய, சுழுத்தியை - நனவிற் சுழுப்தி யாநந்தத்தை, சேருவாய் அடைவாய். (க)

## சொரூபானுசந்தானம்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

காண்பானுங் காண்பனவுமாகிக்
கலங்கார் மெய்ஞ்ஞான
மேண்பாவனை கட்கெட்டாதாயிருந்து
நிறைந்த பொருளாகும்

மாண்பாய்க்காணும்பொருள்விட்டு
மற்றோர்பொருளைநாடுமுனம்
வீண்பாவனைதீர்மெய்யறிவா
மென்னவாறிச்சுகிப்போமே.

(அம்.) கலங்காமெய்ஞ்ஞானம் - காலத்திரயத்தி லுங் கலங்குதலில்லாத யதார்த்த ஞானம் (யாதோ அதுவே), காண்பானும் காண்பனவுமாகி - பெத்த திசையினால் ஞாதுரு வாகவும் ஞேய மாகவும் (நிக ழும்), ஏண்-(இவ்வாறாகியபிரதீதிகளை யதார்த்தமா கக்கருதி தேகோகவறிவில்)மாட்சிமையுடைய(ஜீவ ர்களது), பாவனைகட்கு - சகுண பாவனைகளுக்கு, எட்டாதாய் இருந்தும் - அடைதற்கரிதாயிருந்தும், நிறைந்த பொருளாகும்-யாவர்பாலும் அநுகூலமாய் நிகழும் பரிபூரண வஸ்துவுமாகும்(ஆதலின்),மாண் பாய் - (பொருளல்லவற்றைப் பொருளென்றுணருந் தன்மையில்) மாட்சிமையாக, காணும் - பார்க்கப் பட்ட, பொருள் (நாமரூபசகித) திரவியத்தை, விட் டு - நீங்கி, மற்றோர் பொருளை - வேறோர் (நாமரூப சகித) திரவியத்தை, நாடுமுனம்-பற்றுவதற்குமுன்,

வீண்பாவனை நீர் மெய்யறிவாம் - திரிபுடி ரூபத் துவைதமிறந்ததாத்தபோதமாம், என -என்பதாக (சற்குருசந்நிதான வீக்ஷணியத்தினு லிவ்வுளவுகளை யறிந்து), ஆறி - (அந்தக்கரண விருத்தியை ஆண்டு நிறுத்திப் பழகும் பரியாக ஸ்திதியில் உண்டாகும் ஆநந்தபோதத்தில்) விஸ்ராந்தியடைந்து, சுகிப் போம் - நிரந்தரம் தூங்காமற்றூங்கும் நிலையைப் பெற்றிருப்போம். (உ)

## கைவல்லியம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஞானங்காரணமறிபொருள்காரிய
நாமரூபப்பேர்க
ளானதெப்படியழிந்ததெப்படியென
வாய்குதல்பலனன்றே
மானமைந்தனே தீக்கசொப்பனசகம்
வந்ததும்பாராமற்
போனதுந்நினையாமலுன்போதமாய்ப்
பூர்ணமாயிருப்பாயே.

(அ - ம்.) ஞானங்காரணம் - மத்தியகதஸொரூப மாய் நிகழ்வது எவ்வறிவோ அவ்வறிவே (சர்வ ஆ ரோப பரிணாமங்களுக்கும்) பற்றுக்கோடாம் (ஆத லின்), அறிபொருள் காரியம் - (அந்தக்கரணவிருத் தியை யிந்திரியவழித்தாய்விடா தகமுகமாய் நிறுத் துந் தருணத்தில்) ஆண்டு நிகழும் நாம ரூப சம்ஸ் காரங்கள் காரியரூபமாம், நாமரூபப்பேர்கள் - அத்த கையகாரியசகித நாமரூபப்பதார்த்தங்களின் பேதப் பகுதிகள், ஆனது எப்படி - ஈண்டானதிற மெங்ங னம், அழிந்தது எப்படி-இஃது அத்தியந்த நிவர்த்தி யெய்தினதெங்ஙனம், என ஆய்குதல் - என்பதாக விசாரித்தல், பலன அன்று - (அச்சமயம்) பயனன் றும், (மற்றெவ்வாறிருக்கிற் பயனெனின்) மான மைந்தனே - சாதனசகித் மாட்சிமையுடைய ஞான புத்திரனே? தீர்க்கசொப்பனசகம் - பிரவாகரூபமா யெழுங்கனவெனுஞ் சங்கற்பம், வந்தஸம்பாராமல் - உண்டானதையும் நோக்காமல், போனதும் நினை யாமல் - நீங்கிய சங்கற்பத்தையும் யூகஞ்செய்யாது, உன்போதமாய் - ஆண்டெஞ்சிநின்ற சுபாவவறி

வாய் நிலைத்து, பூர்ணமாயிருப்பாய் - திரிபுடி ரூபத்துவைத மிறந்திருக்கக்கடவாய். (௩)

## ஞானவாசிட்டம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தெரிபொருடரிசனஞ்சேர்
கூட்டத்திற்சேர்ந்தவின்பம்
விரிபரமார்த்தமாகு
மதற்குமேலினிவேறில்லைப்
புரிதருபிரமநோக்கா
மதனினுற்பொன்றுஞ்சித்தம்
வரிசையாஞ்சித்தநாசம்
வஞ்சமிலின்பந்தானே.

(அ-ம்.) தெரிபொருள்-சங்கற்பவெழுச்சியும், தரிசனம் - அவ்வெழுச்சியின் வசத்தாயாகாத காட்சியும், சேர் கூட்டத்தில் - கூடியகூட்டுறவில், சேர்ந்த வின்பம் - (அவ்விரண்டு நீங்க) உண்டாகு மாநந்த போதம், விரிபரமார்த்தமாகும் - சுருதியாதிகளில்

விரிவா யெடுத்துரைக்கும் மகாவாக்கியார்த்தப்பொருள்களின் அத்தியந்த வநுபவமாகும், அதற்குமேல்-அத்தகையபேற்றிற்குமேலாக, இனி வேறில்லை மற்றோர்வஸ்துவில்லையாகும் (ஆதலின்), புரிதரு விரும்பத்தக்க, பிரயோக்கா மதனிஞல் நாமரூபநாட்டந் தவிர்ந்த திருஷ்டியை யுடைத்தாய்ப் பழகும் பழக்க மேலீட்டி லுளவாகும் அகண்டாகார விருத்தி ஞானத்திஞல், சித்தம் பொன்றும் - மனமானதுகெடும், வரிசையாம் - ஒழுங்காகிய முத்தர்களின் சார்தகபரிபாக மேலீட்டிஞலுண்டாகும், சித்தநாசம் - மனோநாசமானது (அத்தியந்த நிவர்த்தியைப் பெற்று), வஞ்சமி லின்பந்தானே - அஃதே சகஜாநந்த வாரூடத்தன்மையுமாம். (௬)

## திருவருட்பயன் (குறள்.)

இன்புறுவார் துன்பா ரிருளினெழுஞ்சுடரின்
பின்புகுவார் முன்புகுவாரின்.

(அ ம்) பின்புகுவார் - சங்கற்ப வாகாரந் தவிர்ந்த பின்னும், முன்புகுவாரின் - உத்தரசங்கற்பவெழுச்

சிக்கு முன்னுமுள்ள இடையில் மனதைநிறுத்திப் பழகுபவர்கள், துன்புஆர் இருளின் அந்தக்கரணத்தினுள் நின்றந்த அவித்தியோபாதி சூனியத்தில், எழுஞ்சுடரின் - உண்டாகாநின்ற அகண்டாகார விருத்திஞானத்தில், இன்பு உறுவார்-(பழகும் பழக்கமிகுதியால் அவ்விருத்தி நிலை பெற்றவிடத்தில்) ஆநந்தப்பிராப்தி யடைவார். (ரு)

ஞானவாசிட்டம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சடமசடமெனுநோக்கமிரண்டினூடே
தணியாகிநின்றபரதத்துவத்தை
யிடவியபோதாரண்ணியமுதலாம்வேத
மிராமனேபல்காலுமியம்புமன்றே
படருறுகாண்பனகாட்சிமேவும்போதிற்
பரம்பொருளின்பற்றுகிபயின்றவின்பந்
திடவனுபூதியின்வடிவாமாதலாலே
திகழ்பிரமசாரமெனச்செப்புந்தானே.

(அ-ம்.) இராமனே - ஸ்ரீராமா!, சடம் அசடம் - சங்கற்பவாகாரம் சங்கற்பவெழுச்சி, எனும்-என்று சொல்லப்படும், நோக்கம் இரண்டின் ஊடே - திரிசியமிரண்டிற்கும் (ஆதாரமாகிய) நடுவே, தனியாகி நின்ற - கேவலத்தன்மையாய் விளங்காநின்ற, பர தத்துவத்தை - மேன்மையாகிய ப்ரஹ்மஸொரூபநிலையை, இடவிய - விகசிதமா யெடுத்துரைக்கின்ற, போதாரண்யமுதலாம் வேதம் - பிரகதாரண்யமுதலிய பிரபல சுருதிகள், பல்காலும் - சதாகாலமும், இயம்பும் அன்றே - கோஷியாநிற்குமல்லவா, படர் உறு - (தைலதாரைபோல்) அடர்ந்துண்டாகின்ற, காண்பனகாக்ஷி - சங்கற்பமும் அச்சங்கற்ப வாகாரமாகாததிருஷ்டியும், பரம்பொருளின்பற்றாகி-(இவ்விரண்டும்) ஸொரூபத்தி லேகாக்கிரதையடைந்து, மேவும்போதில் - பொருந்தும் அமைதியாகிய பரிபாக ஸ்திதியில், பயின்ற இன்பம் - (அவ்விடத்தில்) பிறிதலின்றிய சமாதியா லுண்டாகாநின்ற நனவிற் சுழுப்தியாநந்தம், திட அநுபூதியின்வடிவாம்-அகம் புறமற்று விளங்குவதாகிய துரிய ஸொரூபத்தின்

வடிவமாகும், ஆதலால் ஆதலினால், திகழ் பிரமசார மென செப்பும் - (அதுவே)பிரகாசிக்கின்ற ப்ரஹ்ம ரசமென்று சொல்லப்படும் (திரிபுடி ரூபத்துவைத மிறந்த கிருதகிருத்திய நிலையெனப்படும்) (சு).

## ஞானவாசிட்டம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சொரூபம்விட்டகலன்மோகமாம்வேறு
சொல்லிடமுன்புபின்பில்லை
யொருபொருணினைவொழித்துமேலப்
லொருபொருணினைவறிலந்த. [பா
விருபொருணடுவுணினைவறவிருக்கு
மிதுசொரூபத்தியல்பிதுதான்
மருவுகற்பனைமாண்டசைவில்கற்போலாய்
வருஞ்சுழுத்திதீர்வடிவாம்.

(அ-ம்) சொரூபம்விட்டகலல் - ஆத்மசொரூபத் திற்கு வெதிரேகமா யெழாநின்ற தெப்போதமோ அப்போதமே, மோகமாம் - அஞ்ஞான மென்று

சொல்லப்படும், வேறு சொல்லிட - வேறே (அஞ் ஞானமுண்டென்று) சொல்ல, முன்பு பின்பில்லை - அத்தகைய போதவெழுச்சிக்குமுன்னும் அவ்வெழுச்சி நசித்திட்டபின்னும் இல்லையாம் (ஆதலின்), ஒரு பொருள் நினைவை யொழித்து - ஓர் நாமரூப மாய் பரிணமிக்கும் பரிணாமம் நீங்கி, மேலப்பா லொருபொருணினைவுறில் - அதற்குமேலோர்நாம ரூப பரிணாமத்தை பொருந்துமிடத்தில், அந்த விரு பொருள்நடுவுள் - அவ்விருவிதபரிணாமத்திற்குமிடை யில், நினைவற விருக்குமிது - சங்கற்ப பரிணாமமில் லாத இந்த ஞானம், சொரூபத்தியல்பு - ஸொரூபத் தின் தன்மையாம், இதுதான் - இச்சொரூப ஞானம், மருவு கற்பனையாண்டு - பொருந்திய கற்பனாரகித மாய், அசைவில் கற்போலாய் சலனமில்லாத பாடா ணத்திற் கொப்பாகி, வருநனை - வருகின்ற சகலாவஸ் தையிலுள்ள (ஜீவவறிவும்), சுழுத்தி கேவலாவஸ் தையிலுள்ள (அஞ்ஞானமும்), தீர்வடிவாம் - தீர்ந்த ஸொரூபமாம். (எ)

## முத்திமுடிவு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஒருபொருணினைவுபோய்ப்பின்
னொருபொருணினையுமுன்னாய்
மருவிடைவெளியினிலையுன்
மனமிலையாகையாலே
சொரூபநீதானாய்த்தோன்றுந்
துலைமனங்கொண்டங்குன்னி
லொருதிரிபுடியுமுண்டா
யொழியுமச்சொரூபமென்றும்.

(அ-ம்.) ஒரு பொருள் நினைவுபோய் - ஒவ்வோர் பதார்த்தங்களின் மயமாய்ப் பரிணமிக்குஞ் சங்கற்பம் நீங்கி, பின்-அதன்பின்னும், ஒருபொருள் - மற்றோர் பதார்த்தமாக, நினையுமுன் ஆய் - பரிணமிக்குமுன்னுமாய், மருவு பொருந்தாநின்ற, இடைவெளியில் - மத்தியகதமாய்விளங்கும் ஸ்திதியில், உள் - உன்னுடைய, மனம்-சங்கற்பமானது, இலையாகையால்-இல்லையாதலின், சொரூபம் நீதானாய் தோன்

றும் ஆண்டு நிகழும் உள்ளக்குளிர்ச்சி சகித சூனிய விளக்கத்தி லுன்போத மெழாவண்ணம் உள்ளது விளங்குகிற பரியந்தம்அறிவினது வீரப்பாட்டினுற் பிரிதலின்றியிருப்பாயாகில் ப்ரஹ்மாகாரவிருத்தி யுதயமாகி ஆநந்தம் ஜனித்து அம்மயமாயே விளங் குவை, துலை மனம்கொண்டு - (ப்ரஹ்மாகார விரு த்தி ஞானத்தினுல்)நாசத்தையடையும் அசுத்தமன தைக்கொண்டு, உன்னில் மேற்கூறிய லக்ஷியத்தை நினைப்பாயாகில், ஒரு திரிபுடியுமுண்டாய் - இழிவி னுலொப்பற்ற ஞாதுரு ஞான ஞேயங்களுண்டாகி, என்றும் - எக்காலமும், சொரூபம் - சதோதயமாய் விளங்குஞ் சொரூபாநுபவமானது, ஒழியும்-தோன் றுமனிற்கும். (அ)



ஸ்ரீஸற்குரவேநம:

# நிஷ்டாநுபூதி ஸாரஸம்ஸத்திரட்டு.

## காப்பு.

அத்தி முகனடி, நித்த நினைபவர்
சித்தி திருவொடு, முத்தி பெறுவரே.

## அந்தரார்த்தப்பொழிப்புரை.

அகங்காராதிகள் அடங்கிய விடத்தில் நிதரிசனமாகும் ப்ரஹ்மாகாரவிருத்தியுற்பத்தி ஸ்தானத்தில் சதா அந்தக்கரண விருத்தியை நிறுத்திப் பழகுபவர் நனவிற் சுழுப்தியாநந்தமும் துரியாநுபவமும், சகஜாநந்த வடைவின் ஆரூடத்தன்மையாம், விதேக கைவல்லியப் பேறும் பெறுவர்.

## நூல்.

நித்தனை யுமையா ளடிபணிந் தெனக்கு
நிட்டைசா தனைநிகழ்த் தெனவே,

யத்தனு மகிழுந்தே நீவினை விடுத
லாருயிர்த்தொகைகண்மெய்யுணர்வான்
முத்திஸய யடையுங் காரண மாமான்
மொய்குழற்செய்யவாய்ப் பசுந்தோள்
வித்தகி சாவ தானமாய்க் கேட்டி
யென்றிறை விளம்பிடு மன்றே. (க)

இது வெளிப்படை

* ஒருமொழி யாலே சுருதியா கமநூ
லுயர்புரா ணமுமெலா மொழியு
மொருமொழி யாலே சரியைநற் கிரியா
யோகபா வனையெலா மொழியு
மொருமொழி யாலே யண்டபூதங்க
ளொடுங்கிடுந் தன்னிலே தோன்று
மொருமொழி சும்மா விருத்தலா மதனு
லொப்பிலாச் சிவபத மடைவார்.

(அந்தரார்த்தப்பொழிப்புரை.) மஹாவாக்கி யத்தை யிடையறாது சிந்தித்தால் சாஸ்திரவாசனை

* 'ஒருமொழி' என்பதை ப்ரணவம் என்றும் மௌனம் என்றும் பொருள் கொள்வர், இப்பிர ணவ மௌனங்களுக்குப் பரிபூரணசிதாகாசமாகிய

யெல்லாம் நீங்கும்; சாஸ்திரவாசனையற்று சிந்தை ரூபமாய்த் தைலதாரைபோல் இருக்கில் சரியைத் தொழிலும் கிரியைத்தொழிலு மற்று, ஹ-யோக பாவனை யென்கிற நினைவு முண்டாகாது சுவாசந் தானே யடங்கும் சுவாசமடங்கினால், தேஹபாவந் தோன்றாமல், மனம் உதித்தவிடத்தி லொடுங்கி அகண்டாகாரவிருத்தி யுதயமாகி, ஆநந்தம் ஜனிக்கும், ஆநந்தம் ஜனிக்கில் வாசனையுஞ் சங்கற்பமும் அத்தியந்த நாசமெய்தும்; அஃதே விதேக கைவல்லி யஸித்தியை யுமடைவிக்கும். (அகண்டாகாரவிருத்தி

---

நாதரூப ப்ரஹ்மத்தையே பொருளாக வுணர்த்துதலின், அத்தகைய ப்ரஹ்மஸ்வரூபம் திரிகரணங்களு மிறந்த (நிச்சலமான) ஸ்தானத்தில் சாக்ஷாத் கரிக்கப் படுதலானும், அச்சாக்ஷத்கார நிலையை கேவலம் மஹாவாக்கிய இலக்ஷியார்த்தத்தினாலேயே உணரப் படு மாதலால் ஈண்டு, "ஒருமொழி" என்பதை "மஹாவாக்கியம்" எனப் பொருட்கோடல் சிறப்புடைத்தாம்.

யுதயமுதிர்ச்சியால் ஆநந்தம் ஜனித்தலும் வாசனை, சங்கற்பம் க்ஷயமடைதலும் ஏககாலமெனப் பொருட்கோடற்பாற்று.) (உ)

வேறு.

* சரியையின் ஞெழிலினுஞ்சற் † கிரி
யையினும் ‡ யோகம்

---

* விசாரத்துவாரா மனதை இந்திரிய வழி செல்லாது தடுத்து, தேகத்திற் குள்ளிருக்கும் ஆகாசத்தைப் பாவித்தலே சரியை.

† பாவித்த ஆகாசத்திலேயே மனதை பேதத்திற்கு பாதகமும் அபேதத்திற்கு சாதகமுமாகிய யுக்தியுடன் பரைவாக்கா லிடையறாது மஹா வாக்கியத்தை ஜபித்துக்கொண் டிருத்தலே கிரியை.

‡ அப்படி யிடையறாது ஜபிக்க ஜபிக்க வாக்கியம் நின்று அதன்பின் ஆகாசம் தைலதாரை போல் நிலைபெறும், மனமும் அசைவின்றி யவ்வாகாசத்தில் ஏகாக்கிரதத் தன்மையா யிருக்கும், அப்படி யிருத்தலினால் சுவாசம் தடைப்பட்டு நிற்கும்; அஃதே யோகம்.

புரிதரு முயற்சி யானும் பொருந்தொணு
 தென்பர் மேலோ
ருரியதே சிகனு ரைக்கு மொருமொழி
 யுண்மை யாலே
யரியமெய்ஞ் ஞான வீடிங் கடைவது
 திண்ண மாமே.

(அ - பொ - ரை.) அறிதற்கரிய வுண்மைஞான மாகிய ஜீவன்முத்தியை சரியைத் தொழிலாலும், நல்லகிரியைத் தொழிலாலும், அல்லது ஹடயோகத்தானும், அடைய முடியாதென்று ஆப்தர்களால் கூறலுறும். வேதாத்யயனம் செய்துள்ளவராயும் ஆத்மஞானத்தை யடைந்தவராயுமுள்ள ஞானசாரியரா லுரைக்கப்படும்ஒப்பற்ற மகாவாக்கியமு மதை யநுஷ்டிக்கும் உளவையும் பெற்றால், ஜீவன் முத்தியை யடைவது நிச்சயமாம். (௩)

வேறு.

கட்டறத் துறந்தே யுயிர்பொருட்சார்பைக்
 கருதிடும் வாசனை யனைத்து

மொட்டற விடுத்து ஞானநூ லினைத்து
மோர்ந்திடி * லென்பய னுதவு
மெட்டுதற் கரிய சற்குரு வருளா
லியம்புமோர் மொழியினைப் பெற்றே
நிட்டைசா தித்தே சகலகே வலங்க
ணீங்கிடிற் பிறப்பிறப் பறுமே.

(அ-பொ-ரை.) புறத்தின்கண் சூழ்ந்திரா நின்ற பாசமாகிய கட்டுநீங்க, உயிர்ச்சார்பாகிய பெண்டு பிள்ளை முதலியனவும், பொருட்சார் பாகிய திரவியம் கிருகம் முதலியன யாவையும் ஒருங்கேவிடுத்து, மீண்டும் அதன்கண் வாசனையுமெழா வண்ணம் நின்று, புறத்துற வாஸ்ரமத்தை யடைந்து தக்கார் பால் பிரபல சுருதிகளை யுபக்கிரம வுபசம்ஹார முத

* "வாயினுற் பலநூல் படித்துணர்ந்துநல் வழி பிறர்க் குரைசெய்து, நீ யுலோக வாசாரமோரணுத் துணை யானுநீங்கிலை நெஞ்சே, தூயதா மிவண்பிறர் கொளக் குங்குமஞ் சுமந்துசெல்கர முன்னிற், காய மானுடத் தின்றதற் கன்றியுட் களவுமின்மையினு லே" என்பதனுலுமுணர்க.

விய ஷட்விதலிங்க தாற்பரியத்துடன் விசாரஞ் செய்து ஆன்மாவி னிருப்பை நன்குணர்ந்தவராயி னும், சற்குரு அருட் பிரசாதத்தைப் பெற்று அந் நெறிக்கண் நில்லாராயின் என்ன பலனைத்தரும்? மனோ வாக்குக் காயங்களிறந்த விடத்தில் விளங்கா நின்ற அகண்டாகாரவிருத்தி ஞானத்தை யடைந் துள்ள சற்குருவின் கிருபா வீக்ஷணியத் துவாரா பெற்ற வருட்பிரசாதமாகிய ஒப்பற்ற மகாவாக்கிய உபதேசவுளவில் மனதை நிறுத்தி, இடையறாச் சமாதியைப்பழகி அதனாலுண்டாகாநின்ற ப்ரஹ்மா கார விருத்தியால் சங்கற்ப எழுச்சியும் அதனது ஆகாரமுமாகிய சகல கேவலங்கள் நாசத்தையடை யும்; அன்றே, ஜனனமரணப் பிரவாகரூபத்துன்பம் நீங்கி பரமாநந்தப் பிராப்தியுண்டாகும். (ச)

வித்தக மாகப் பலகலை பயின்று
மேவுநற் பயன்களை யறிந்துந்
தத்துவ முழுதுங் கசடற வுணர்ந்துந்
தன்னிலை யறிவதற் கரிதாஞ்

உ

சுத்தமெய்ஞ் ஞான தேசிகன் மகிழ்ந்தே
 சொல்லாமற் சொல்லுமோர்மொழியா
முத்திரை மோன நிலையினு லன்றி
 முத்தியி னிலைகிடை யாதே.

(அ - பொ - ரை) இலக்கண விலக்கிய தர்க்க சாஸ்திரங்களை யுணர்ந்து, அதன் துவாரா அரிய பிர பல சுருதிகளனைத்தையுங் கசடறக் கற்று, அதன் சாராம்சங்களை நன்கறிந்து, அதனுல் பதார்த்த பரி சீலனஞ் செய்துள்ளவராயினுந் தனது எதார்த்த ஸொரூபத்தை யறிதற்குரிய தன்மை யன்னோர்க்கு உண்டாகாவாம். அவித்தியாரகிதமாகிய வுண்மை ஞானத்தை யுணர்ந்துள்ள சற்குருவானவர் சீடனது பக்குவமறிந்து (பஹாவாக்கிய அநுசந்தானத் துவா ரா பாவனுதீதநிஷ்டை அபரோட்சமாகும் பொரு ட்டு) அநுக்கிரகிக்கப்படுவதான அந்நெறிக்கண் சதாகாலமும் தைலதாரைபோல் சித்த விருத்தியை நிறுத்திப் பழகுமவர்க்கு அல்லாமல் ஏனையோர்கட்கு அத்தியந்த துக்கநிவர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியு முண்டாகாவாம். (ரு)

வேறு.

முத்தி ரைகளோர் மூன்று மொழிந்திடிற்
சுத்த சாம்பவி சொல்லும் பைரவி
மெய்த்து கேசரி யென்று விளங்கிடு
மித்தை யார்க்கு மியம்பவொண் ணாதரோ.

(அ - போ - ரை.) கூடஸ்த ப்ரஹ்ம ஐக்கியநிலையைப் பெறுதற்கு முக்கிய சாதனமாகிய ஞான முத்திரைகள் மூன்றுவகைப்படும் அவைகளைச் சொல்லுமிடத்து சுத்தமாகிய சாம்பவி, மதிக்கத் தக்க வைரவி, மெய்ம்மை யுடைத்தாகிய கேசரி யென்னும் பெயரினைப்பெற்று பிரகாசியாநிற்கும். இவற்றை அபக்குவர்களுக்குப் போதிக்கக்கூடாது.

முத்திரைகளின் விவரம் வருமாறு:—

நாசியின் துவாதசாந்தத்தினது அந்தத்தில் நிகழும் விசுத்த சக்கிரத்தில் திருஷ்டியை நிறுத்தலே சாம்பவி முத்திரையென்றும், புருவமத்தியமான வியோமசக்கிரத்தில் திருஷ்டியை நிறுத்தலே வைரவி முத்திரையென்றும் கபால ரந்திரத்தில் நாக்கு விபரீதமாகப் பிரவேசிக்க புருவமததியில் திருஷ்டி

யை நிறுத்தலே கேசரி முத்திரை யென்றும் ஒரு சாரார் கூறுவர். நாசியின் துவாதசாந்த மெனச் சொலப்படும் தசேந்திரிய நிக்கிரகத்துவாரா ஞாதுரு ஞேயங்களை நாடாது ஞானமயமாய் அந்தக் கரண விருத்தியை நிறுத்திப் பழகும் பரிபாகஸ்திதியில்விளங்கும் சூனிய வியாபக விளக்கத்தையே சாம்பவி முத்திரை எனவும், புருவ மத்தியென்று சொலப்படு மிரண்டு சங்கற்பங்களுக்கிடை வெளியில் சித்த விருத்தியை நிறுத்தியிருத்தலாந் தன்மையாதோ வதையே வைரவி முத்திரை யெனவும், சங்கற்ப வுற்பத்தி ஸ்தானத்தில் சாதக பாதக யுக்தியுடன், மகாவாக்கியத்தை பரைவாக்கொடு சிந்தனை செய்யும் விருத்தியானது ஸொரூபத்தோ டேகாக்கிரதையடைந்து சகல கேவலத்துக்கு மத்தியகதமான ஸ்திதியைப் பெற்றிருத்தலையே கேசரி முத்திரை எனவும் ஈண்டு கிளத்துவாம். (சு)

வேறு.

இந்தநன் னிலையி லிருந்துசா தித்தோ
ரெவரென வுமையவள் வினவக்

சுந்தர வாமதேவமா முனிவர்
சுகர்முதன் முனிவரொன் றறிதி
கந்தடு கரியின் கைபிணைப் புறங்காண்
கவானுடை மலைதரு மபிலை
நிந்தையி னிட்டைக் குரியவா தனமு
நிகழ்த்துவ னன்புட னீகேள். (எ)

இது வெளிப்படை.

உத்தர திசைபார்த் திருப்பதாங் கலைபி
னுரிவையோ டுழுவையி னதளுஞ்
சித்திராதனம்வெண் டுகில்குசையைந்துந்
திண்புவி மிசைவிரிப் பனவாம்
பத்திரம் வீரங் குக்குட மரிய
பங்கயங் கோமுக மைந்தும்
வித்தக மான வங்கவா தனமாம்
விமலைநீ யறிகென விளம்பும்.

(அ - பொ - ரை.) உமையவளே! ஜிஞ்ஞாசுக்கள் சமாதிநிஷ்டையைப் புரியும்போது பார்த்துக் கொண்டிருப்பது வடதிசை முகமாகும், பூமியின்

மீது ஆதனமாய் வதிக்கத்தக்கது மான்றோல், புலித்தோல், இரத்தினக்கம்பளம், வெள்ளை வஸ்திரம், தருப்பை இவ்வைந்துமாம். அன்றோர் அங்காசனமாய்க் கொள்வது பத்திரம், வீரம், குக்குடம், அருமையானபதுமம், கோமுகம் இவ்வைந்து மென்று நீ யறியக்கடவை யென சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளும். (அ)

இயம்புமா தனங்க டம்மிலொன் றுறவே
 யிடைகளஞ் சிரங்கழு னோராய்
வயம்பெறத் தம்ப மெனநிறீஇ யிருந்தே
 மனமது வடிவினை யுருமை
யயம்பெற வுன்னு துன்னியெப் போது
 நடுநிலை தன்னைநீங் காமற்
றயங்கிய சுத்த மசுத்தமல் லாத
 தனிநிலை பொருந்துதல் சமாதி.

(அ - பொ - ரை.) சொல்லப்பட்ட " ஆசனங்கள் " என, பன்மையாகச் சொன்னமையால் எத்தகையா யிருந்தால் மனம் ஸொரூபத்தில் லயப்படுமோ அஃதையே ஆதனமெனப் பொருட்கோடல்

வேண்டும். அத்தகைய வாதனத்திலிருந்து இடை, கண்டம், சிரம், கண் இவைகளைச் சுருதிகளிற் கூறிய வண்ணம் நேரொக்குமாறு ஸ்தம்பம் போனிறுத்தி மனதை விஷயாகாரத்தில் செல்லவொட்டாது விசார பூர்வகமாய்த் தடுத்து, தேகத்திற்குள்ளிருக்கும் ஆகாசத்தில் நிறுத்தி, சற்குருவாற் பெற்ற மகாவாக்கியத்தைப் டரைவாக்கால் சிந்தித்துக்கொண்டு, சதாகாலமும் ஆகாசநாட்டமும் பிறிதலின்றிப் பழகினல் பழக்கத்தினிறுதியில் சிந்தனையும் ஆகாசநாட்டமும் இறந்து அகண்டாகார விருத்தியுதயமாகி, சங்கற்ப ஆகாரமும் சங்கற்ப வெழுச்சியும் நாசத்தையடைந்து ஸொரூபத்தில் மனம் ஏகாக்கிரதத்தன்மையை யடையும், அஃதையே சமாதியென்ப ரறிவுடையோர். (கூ)

வேறு.

விண்ணை மூடக் கவுசனையை விரிக்கு
மொருவன் விரகதெனப்
பண்ணும் யோகத்துறநினைவோன் பவனற்
றடுக்கு மதுவிடுத்தே

பெண்ணுங் கருத்தை முன்னடக்க வியங்
  கும் வளியும் பின்னடங்குங்
கண்ணை மறைக்க வான்மறையுங் கணக்
  காம் படிநீ கண்டுகொள்ளே.

(அ - பொ - ரை.) ரேசக பூரக கும்பக வாயிலாய் சுவாசத்தை யடக்கி யதனல் உள்ளம் விஸ்ராந்தி யடையலாமென்று பழகும் ஹடயோகம் ஆகாயத்தை மறைக்க வஸ்திரத்தினல் பந்தல்போடுந் தன்மையை யொக்கும். ஏனெனில், அப்பந்தலைவிட்டு நீங்கின வக்கணமே ஆகாசந்தோன்றும், அதுவல்லாமல் அப்பந்தலி லிருக்கு காலத்திலும், பரிபூரண ஆகாசதிருஷ்டியின்றி விச்சின்ன திருஷ்டியுண்டு; அதுபோல், யோகி பகிர்முகப்பட்ட காலத்து விசேஷ துக்க சம்ஸ்காரத்துடன் வெளிப்படும் அகமுகப்பட்டகாலத்து சாமான்னிய சம்ஸ்காரத்துடன் அடங்கியுமிருப்பதே யன்றி சுவாச பந்தனத்தா லுண்டாகும் விஸ்ராந்தி யதார்த்த விஸ்ராந்தி யன்று. (எப்படி யெனில் சுமை யெடுத்தவன் அதை

தரையி லிறக்கினதாலுண்டாகுஞ் சுகம் யதார்த்தம் அல்லாதது போல்) இத்தகைய ஹடயோகத்தை விடுத்து ராஜயோகத் துவாரா விசார பூர்வகமாய் சங்கற்ப விகற்ப ரூப மாகிய மனத்தையுதித்தவிடத்தி லொடுக்கி நின்றால், சுவாசம் தானேதடைப்படும்; அஃதெவ்வாறெனின், கண்ணைமூடிய அக்கணமே பூதாகாசம் மறைதல் போலும், இதை யூகித்து அறிந்து கொள்வாயாக. (௧௦)

அலையு மனத்தை யகத்தடக்கு மவனே
சரியை கடந்தோனு
மலைய மனத்தை யகத்தடக்கு மவனே
கிரியை முடிந்தோனு
மலைய மனத்தை யகத்தடக்கு மவனே
யோக தற்பரனு
மலையு மனத்தை யகத்தடக்கு மவனே
ஞானி யதிசூரன்.

(அ - பொ - ரை) சற்குரு வீக்ஷணியத்துவாரா பெற்றஅருட் பார்வையைக்கொண்டு இந்திரியவழிச்

செல்லும் மனதைசெல்லவொட்டாது தடுத்துதேக த்திற்குள்ளிருக்கும் ஆகாசத்தில் நிறுத்துவதே சரி யையை சம்பூர்ணமாய் முடித்தலாகும். அப்படி யாகாசத்தில் நிறுத்தின மனம் தைலதாரைபோல் நிலைபெறுமாகில்அஃதே எதார்த்த கிரியையை முடி த்தலாகும். அங்ஙனம் தைலதாரைபோல் நிலைபெ றின், உஸ்வாச நிஸ்வாசங்க ளுண்டான விடத்தி லேயே வொடுங்கும் இவைகளையே ஆன்றோர்கள் எதார்த்தமாகிய யோகத்தை முடித்தலாகும் ததா கார நிலையை யடையுந் தன்மை யெனவுரைப்பர். (வேதத்தின்அத்தியந்த வுட்கருத்தும்அஃதேயாம்) அப்படி சுவாச மடங்கினல் ப்ரஹ்மாகாரவிருத்தி யுதயமாகும் இப்பெற்றியான் சங்கற்ப நாச வாசனு க்ஷயத்தின்அத்தியந்தஅடைவும்பெற்று பரமாநந்தப் பிராப்தியின் * ஆவிற்பாவமும் உண்டாகும். இதையே ஜீவன் முத்தி ஸ்திதியென்பர். (கக)

---

* ஆவிற்பாவம்—பெருக்கு.

அடக்கிக்கருத்தி னலைவறுப்போனவனே
சகல தியாகியா
மடக்கிக்கருத்தி னலைவறுப்போனவனே
பொன்ருப் பொருளுடையோ
னடக்கிக் கருத்தி னலைவறுப்போ னவனே
பேரின்ப வநுபவியா
மடக்கிக் கருத்தி னலைவறுப்போ னவன்
வீட்டின்ப மடைபவனே.

(அ - பொ - ரை.) சற்குரு கிருபாவீக்ஷண்ணியத் துவாரா விசாரபூர்வகமாய் இந்திரியவழி செல்லும் மனதை யடக்கி இருதயாம் பரத்தில் நிறுத்தி அக் கணத்தி லவ்விடத்தி லுண்டாகாநின்ற மனோராஜ் ஜியம் சுழுப்தி முதலிய பிரதிபந்தங்களுக்கிடந்தரா வண்ணந் திட வைராக்கியத்தோடு அவ்வாகாஸநாட் டத்தைப் பிரிதலின்றி யிருப்பவன் யாவனோ அன் னோனே துறவி என்னும் சப்தார்த்தத்திற்கு உரித் தானவனுகிய சர்வசங்கபரித்தியாகியாமென்று கண் ணுடையோராற் கழறலுறும். அப்படி அவ்வாகாஸத்

திற் பிறிதலின்றி யிருக்கின் அகண்டாகார விருத்தி ஞான முதயமாகும். அஃதே ஜனன மரணமாகிய நிலையாமையை நீக்கி நாசரகிதமாயுஞ் சதோதயமாயும் விளங்கும் எதார்த்த செல்வமென்பர். அப்படி உண்டாகு மகண்டகார விருத்தி யநுபவத்தில் இடையறாது சமாதியைப் பழகுவாராயின் அப்பழக்கத்தின் இறுதியில் அத்தியந்த துக்க நிவர்த்தியும் பரமாநந்தப்பிராப்தியு முண்டாகும். உண்டானல் பகிர்முகப் படுங்காலத்து பாகிய திரிசியங்கள் தோன்றும். அவைகளையும் பரமாநந்தமாகவே பார்த்துப் பழகவரும். அப்படி பழகப் பழக பாஹியம், ஆந்தரம் என்கின்ற பாகுபாடுகளற்று பழக்கமு மின்றி சுபாவஸ்திதியாதோ அஃதாகவே நிலைபெறும். இத்தகைய ஸ்திதியையே * விதேக கைவல்லிய மென மறைகள் புகலாநிற்கும். (சஉ)

---

* வரிட்ட திசையடைந்துள்ள ஞான வான்கள் தங்கள் சரீரம் அஞ்ஞர்கள் கட்புலன்களுக்கு ஸ்புடமாய் தோன்றுகின்ற காலத்திலேயே தங்களுக்கு

வெறிகொள் குரங்கு மயக்குஞ்சொல்
விளம்பி யருந்தி னலதுவு
நெறிதான் மயங்கிச் சுழல்வதுபோ
னிமிடந் தானு நிலாமனத்தைக்
குறிபில் சமாதி யெனுங்கயிற்றாற் குறுகப்
பிணிப்போ ரெவரவர்தா
மறிவோ டறியா மைகளிறந்த வரிய
முத்தி தனையடைவார்.

அச்சரீரம் தோன்றுதனவாகி தமது நிஜவடிவாகவே அமர்ந்திருக்குமாதலின் இத்தகைய அநுபவப் பேற்றினையே விதேக கைவல்லியமெனப் பொருட்கோடல் சிறப்பு, அஃதொழித்து ஞானவான்களின் சரீரம் விபாகத்தன்மை யடைதலை விதேக கைவல்லியமெனல் அசங்கதமாம். ஏனெனில் சரீரவிபாகத் தன்மையானது அஞ்ஞர்களுக்கும் ஞானிகளுக்கும் ஒருபடித்தாய் நிகழ்தலின் அதிவியாப்தி குற்றம் சம்பவிக்கும்.

(அ - பொ - ரை.) பயித்தியகுணம் மேலிட்ட குரங்கானது மதுவையு முண்டிருக்கு மாயின், அத்தகைய குரங்கின் சுபாவ மெப்படியோ அதுபோல வோர்கணமேனும் நிலைபெறா து விஷயங்களையே தாவி, ராகத்துவேஷப் படுகுழியில்விழுந்து, தனது எதார்த்த சுபாவந்தெரியாது மயங்கியிருக்கும் மனதை சற்குரு வீக்ஷண்ணியத்தாற்பெற்ற அருட்பார்வை யென்னும் ஞானதந்திர மாகிய வைராக்கியத்தாலடக்கி சங்கற்ப ஆகாரந்தவிர்ந்த பின்னும் மறு சங்கற்ப முதிப்பதற்கு முன்னு முள்ள * சுபாவ நிலையில் நிறுத்திப் பழகுபவர்களே அறிவறியாமை யென்கின்ற சகல கேவலங்களினின்று நீங்கி அருமையாகிய ஜீவன் முத்தி சுகத்தை யடைவர். (கங)

---

* சுபாவநிலை கோசரிக்க வாற்றலில்லையேல் மஹாவாக்கியத்தைப் பரை நினைவுடன் சிந்தித்து அச்சிந்தனை யுதிக்குமிடத்தையே யூகித்துப் பழகினும் சுபாவஸ்திதி தடஸ்தப்படும்.

வேறு.

* பங்கயா தனத்திற் படியவே யிருந்து
பரபசற் குருவினைத் தொழுதே
யிங்கிரு விழியும் விசும்புற நிறுவி
யெழுங்கருத் தினையக மாக்கி
யங்குறு நிலையா லடங்கிடா மனத்தி
னலைவறுத் தறிவறி யாமை
துங்கமா யொழியச் சாதனை புரிந்தே
தூங்காமற் றூங்குகமாதோ.

(அ - பொ - ரை.) மனதை யிந்திரியவழிச் செல்லாது தடுத்து நாபிக்கமலத்திற் பொருந்தும்படி

---

* இடது தொடையின் மீது வலது பாதமும், வலது தொடையின் மீது இடது பாதமும் வைத்து கைகளை பின்புறமாகமாறி வலதுகையினால் இடது தொடையின்மேலிருக்கும் வலது காற்பெருவிரலையும், இடது கையினால் வலது தொடையின்மேலிருக்கும் இடது காற்பெருவிரலையும் பிடித்துக்கொண்டு, ஹிருதயத்துக்குச் சமீபத்தில் நான் கங்குலமிட மிருக்கும் வண்ணம் மார்பில் மூகவாய்க்கட்

நிறுத்தி, மஹாவாக்கியத்தைப் பரைவாக்கால் சிந்தித்து, அவ்வண்ணஞ் சிந்திக்குங்கால், சிந்தனையில் மனதை நிறுத்தாது அச்சிந்தனை யுதிக்கு மிடமாகிய தகராகாசத்தையே யிடையறாது நோக்கிநின்றால் சங்கற்ப ஆகாரமும் சங்கற்ப எழுச்சியும் உதித்த

---

டையை நிறுத்தி, மூக்கினுனியைப் பார்த்துக் கொண்டிருத்தல் பங்கயாதனமெனப்படும் இஃது யோகிகளுக்கு வியாதியைப் போக்கடிக்கும். இப் பங்கயாதனத்தை பதுமாதனம் என்றும், பத்தபத் மாசனமென்றும், சுபாசன மென்றுங் கூறப்படும். மேற்படியாதனங் கேவலம் பகிர்முக நாட்ட முடையார்க்கேயன்றி அந்தர்முக நாட்ட முடையார்க்கு சிறப்புடைத் தன்றாதலானும், எத்தகைய ஆதனத் திருந்தால் மனம் எளிதில் லயப்படுமோ அதனையே ஆதன மெனல் கண்ணுடையோர்களின் அத்தியந்த வுட்கருத்தாதலானும், பங்கயாதனம், பங்கு - கூறுபாடு (பரிச்சின்னம்) அயம் - சர்வம், ஆ - பசு - (ஜீவன்), தனம் - (இவைகளுக்குப் பற்றுக்கோடா

விடத்தி லொடுங்கும். அப்படி யொடுங்கின விடத்து மனம் அகமுகவப்பியாசத்தில் தைலதாரை போல் நிலை பெறும்; பெறின், அம்மனம் ஸொரூபத்தி லேகாக்கிரதை யடைந்து அகண்டாகார விருத்தி யுதயமாகி உபசாந்த நிலையைப்பெறும். அவ்வுப

---

கிய) இடம் பரிச்சின்னமாய் விளங்கும் சர்வ ஜீவ ராசிகளுமுண்டா யொடுங்கும் ஸ்தானமெனப் பொருளமைதலி னித்தகைய ஸ்தானம் நாபிக் கமலத்தில் விளங்கும் தகராகாச மாதலினானும்; நாபி - (சர்வ அனர்த்தங்களையும் உண்டுபண்ணுவதற் கேது வாகிய) சங்கற்பம், கமலம் - (அச்சங்கற்ப வுற்பத்திக்குப் பற்றுக்கோடாகிய) சச்சிதாநந்த வடிவமெனப் பொருளமைதலானும், நாபிக்கமலத்தில் விளங்கும் தகராகாசத்தில் அந்தக்கரண விருத்தியை நிறுத்திப் பழகப் பழக, அப்பழக்கத்தின் பரிபாக ஸ்திதியில் அஞ்ஞான நிவர்த்தியும் பரமாநந்தத்தின் ஆவிர்ப்பாவமு முண்டாகின்றமையானும் அப்பங்கயாதனத்தை, ஈண்டு நாபிக் கமலமெனப் பொருள் கொண்டாம்.

சாந்த நிலையி லிடையறுப் பழக்கஞ் செய்யில் சங் கற்பமும் வாசனையும் அத்தியந்த க்ஷயத்தை யடை யும். அடையவே தடையற்ற வாநந்தம் ஜனிக்கும். அவ்வாநந்தத்தி லிடையறுப் பரமாநந்த நித்திரை யைச் செய்யக்கடவாயாக. (கச)

* ஆதனத் திருந்தே சாதனை புரிந்தா
லடங்கிடாப் பொறிபுல னடங்கு
மாதனத் திருந்தே சாதனை புரிந்தா
லடங்கிடு மனோவிட யங்க
ளாதனத் திருந்தே சாதனை புரிந்தா
லறிவறி யாமைக ளொழியு
மாதனத் திருந்தே சாதனை புரிந்தா
லகண்டவீ டடைவது நிசமே.

(அ - பொ - ரை.) விசாரத்துவாரா மனதை நா பிக்கமலத்தில் விளங்கும் தகராகாசத்தில் பொருந்

---

* ஆதனத்தின் கண்ணேயே இருந்து சாதனத் தைச் செய்யின் பொறி புலன்க ளடங்கு தெனவும்

தும்படி நிறுத்திப்பழகினால் சப்தாதிகளிறக்கும். இறக்கில் ஆகாசபாவனை யெனும் நினைவு நீங்கி அகண்டாகார விருத்தி ஞான முதயமாகும். அதி லிடையறு துபரிசயிக்கில்ராகத்துவேஷாதிகளென்

---

மனோவிஷயங்க ளடங்குமெனவும், அறிவறியா மைக ளொழியுமெனவும், அகண்டாகாரவிருத்தி ஞான வநுபவத்தி னுருட்டத்தன்மையை யடைதல் திண்ணமெனவும் இச்செய்யுளிற் கூறப்படுதலால், பாஹிய ஆதனமாகப் பொருட்படுத்திக்கொளின் ஆதனங்களில்மாத்திரம் பழகித் தேர்ச்சியுடையார்க் கெல்லாம் மேற்சொல்லிய வநுபவம் வரக்காணகி லம். ஈண்டு 'ஆதனம்' என்னும் பதத்தை ஆ- ஜீவன், தனம் - அச்சீவனுக் கதிஷ்டானமாகிய கூடஸ்தவறிவு பிராப்தமாகுமிடம், அதாவது:— சங்கற்ப ஆகாரம் தவிர்ந்த பின்னரும் மறுசங்கற்ப மூண்டாவதற்கு முன்னருமாகிய இடம், எனப்பொ ருள்கொண்டு அந்தக்கரண விருத்தியை ஆண்டு நிறுத்திப் பழகல்வேண்டும். எவ்வாறு அவ்விடத் தில் பழகுதலெனில் சங்கற்பவுற்பத்தி ஸ்தானமா

னும் * பஞ்சகிலேசம் நீங்கி சாந்தமே மேலிட்டு ஆநந்தம் ஜனிக்கும். அவ்வாநந்தத்தி லிடையறூப் பழக்கஞ்செய்யச்செய்ய அறிவறியாமையென்கின்ற சகல கேவலங்கள் அத்தியந்த க்ஷயத்தையடையும். அடையவே சகஜாநுபவஞ் சித்திக்கும். அதிலிடையறாது நிற்க அகம் புற மின்மையாகிய விதேக கைவல்விய ஸ்திதியை யடைவது திண்ணம். (கரு)

---

கிய நாபிக்கமலத்தின்கண் திகழும் தகராகாசத்தில் மனத்தைநிறுத்திப் பழகுதலினாலேயே பொறி, புலன், கரணங்களடங்கி ப்ரஹ்மாகார விருத்தி யுதயமாகி ஆத்மஸொரூபத்தி னவிர்ப்பாவமே மிஞ்சிநிற்கும். ஆதலால் நாபிக்கமலத்தில் திகழும் தகராகாசத்தில் மனத்தைநிறுத்திப் பழகுதலையே 'ஆதனம்' எனலுசிதம். சுகாசாரவிர்த்தியை யுண்டுபண்ணும் இடமே தகராகாசமென ஈண்டு பொருட் கோடற்பாற்று.

---

* அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபினிவேசம் என்பன :—அநாத்மாவாகிய தேகங்

வேறு.

உலையாப் பொறியைம் புலனடக்கி யொன்று
    மனத்தி லுன்னாதே
தலையாகியபே ரானந்தந் தலைப்பட்
    டதனிற் றன்மூழ்கி
யலையா யோக மம்புவிடு
    சோமரைமாத் திரையேனு

---

களில் ஆத்ம புத்தியும், அநித்திய மாகிய ஆகாயாதி களில் நித்திய புத்தியும், துக்கவடிவ தநாதிகளில் சுகபுத்தியும், அசுசியான சரீரமுதலியவற்றில் சுசி புத்தியும் அவித்தையாம்.

புத்தி யான்மாக்களின் ஒற்றுமை யுணர்ச்சி அஸ்மிதையாம்.

அநுகூல பதார்த்தத்தின் ஞானத்தா லுண்டாகும் புத்தி விருத்தி யிராகமாம்.

பிரதிகூல பதார்த்தத்தின் ஞானத்தாலுண்டாகும் புத்தி விருத்தி துவேஷமாம்.

மரணபயத்தா லுடலைக் காப்பாற்றுவதிலுண்டாகும் ஆக்கிரஹம் அபினிவேசமாம்.

நிலையா நிற்போர் வீடடைவர்
நிலத்திற்பிறவா ரிறவாரே.

(அ·பொ-ரை.) சற்குருவினாற்பெற்ற வருட்பார்வை யென்னும் நாபிக்கமலத்தில் திகழும் தகராகாசத்தில் மனதை நிறுத்தி மகாவாக்கியத்தை யிடையறாது அதி சூக்குமமாய் ஜபித்துக்கொண் டிருக்குங்கால் மகாவாக்கிய சப்தத்தில் மனதை நிறுத்தாது, சப்தோற்பத்தி ஸ்தானத்திலேயே மனதை நிறுத்திக் கொண்டிருக்கின், பொறிபுலனடங்கும். அடங்கவே மகாவாக்கிய சிந்தனையுமற்றுவிடும் அக்கணம் ஆகாசமே தைலதாரைபோல் நிலைபெறும். அதிலிடையறாப்பிரிதலின்மையைப் பெறின் அகண்டாகார விருத்தியுதயமாகும். அஃதை யிடையறாப் பரிசயஞ்செய்யச்செய்ய அவ்விருத்தி நிலைபெற்று ஆநந்தம ஜனிக்கும். இத்தகைய ஸ்திதியில் வில்லிற்றொடுத்த அம்பை விடுகிறஅவ்வளவு காலமாயினும் தடஸ்தப்பட்டு நிற்பராயின் அத்தகைய அசம் சத்தியாகிய பூமி அநுபவத்தை யுடையவர்களுக்கு சங்கற்ப ஆகாரம், எழுச்சி யிவைகளுண்டாகாவாம்.

ஆகையால் அவர் விதேக கைவல்லிய ஸ்திதியையு மடைவது திண்ணம். (கசு)

நிட்டை நிலையீ தென்றுரைப்பர் நிகழும் வாயு தாரணையை
நிட்டை யதுதா னலதென்றே நிலவு மேலோர் புகலுவார்
நிட்டை யாதல் கருத்தடங்க நிறுத்த லதுவே சிவயோக
நிட்டை விடாது சாதிப்போர் நித்த மெய்வீ டுறுவாரே.

(அ - பொ - ரை.) ஹடயோகிகளிற் சிலர், பிராணவாயுவை ரேசக பூரக கும்பகஞ் செய்து ஆண்டு மனதை லயஞ்செய்து இருப்பதுயாதோ அதையே சமாதி யென்பர். ஞானநிலையில் சதோதயமாய் மனங்கரைந்து விளங்காநின்ற ஆப்தர்கள், சமாதி நிலை அஃதல்ல வென்று சொல்லுவர். ஆனல் எதைச் சமாதியெனக் கூறுவர்களெனில், பிரதம சங்கற்பவாகாரந் தவிர்ந்த பின்னும் உத்தர சங்கற்ப

வெழுச்சிக்கு முன்னுமுள்ள மத்தியகத ஸ்தானத்தில் மனதை நிறுத்தி எத்தகைய விருத்திகளு மெழாமல் திட வைராக்கியத்துட னிருந்து பழகி யந்நிலையில் பிரிதலின்றி யிருத்தலாகிய அநுபவம் யாதோ வஃதே யாமென்பர். அத்தகைய சமாதியை, திரிபுடி ரகிதம் சுபாவமா யுண்டாகிற வரையிலிடையருப்பழக்கஞ் செய்பவர் சகஜநிலை வாய்த்து விதேக கைவல்லிய ஸ்திதியையும் அடைவரென்பது திண்ணம். (௧௭)

வேறு.

நிட்டை சாதித்தா னீங்குமைம்
 பொறியொடு புலனு
நிட்டை சாதித்தா னெஞ்சமு
 முளத்திடை யொடுங்கு
நிட்டை சாதித்தா னினைப்பொடு
 கேவல மொழியு
நிட்டை சாதித்தா னிமலவீ
 டடைவது நிசமே.

(அ - பொ - ரை.) சற்குருவாற் பெறப்பட்ட அருட்பார்வை யாகிய தகராகாசத்தில் விசாரத்து வாரா மனதை யிந்திரியவழி செல்லாது நிறுத்திப் பழகினால் பொறிபுலன்களற்று மனம் அவ்வாகாஸத்தில் தைலதாரை போல் நிலைபெறும் அதிற் பிரிதலின்றி யிருக்கின், மனம் ஸொரூபத்தில் ஏகாக்கிரதையடையும். அவ்விடத்தி லுண்டாகும் அகண்டாகாரவிருத்தியில் ஆநந்தம் ஜனிக்கிறவரையில் பிரிதலின்றி யிருக்கில் சங்கற்ப எழுச்சி யாகிய கேவலமும், சங்கற்ப ஆகாரமாகிய சகலமும் அவ்விருத்திஞான வுதய முதிர்ச்சியானாசமடைந்து நனவிற் சுழுப்தியாநந்தம் ஜனிக்கும். அவ்வாநந்தத்திலிடையறாப் பரிசயஞ் செய்பவர் சகஜாநுபவத்தையும் அதன் முதிர்ச்சியில் விதேக கைவல்லிய ஸ்திதியையும் அடைதல் திண்ணம். (கஅ)

வேறு.

நீங்காக்கருத்தை யகத்திருத்திநிகழ்சாம்
பவியாற் ககனமுற

நீங்கா நிட்டை சாதித்தா னீங்கும்
பொறியைம் புலன்கரண
நீங்கா நிட்டை சாதித்தா னினைப்பு
மறப்பு மறநீங்கு
நீங்கா நிட்டை சாதித்தா னித்த
முத்திப் பேறடைவார்.

(அ - பொ - ரை.) சற்குருவினுற் பெற்ற அருட் பிரசாத வலிமையினுல் ஏகாந்த ஸ்தலத்தை யடைந்து சுருதிகளிற்கூறிய நெறிப் பிரகாரஞ் சரீரத்தை செவ்வனே சித்திர தீபம்போல் நிறுத்தி கண்களை மூடிக்கொண்டு மனதை இந்திரியவழிச் செல்லாதுத் தடுத்து மகாவாக்கிய சிந்தனையை பிரத்தியேகமாகக் கொடுத்து அம்மகாவாக்கிய சிந்தனை யுதிக்கின்ற விடமாகிய ஆகாஸத்தில் பொருந்தும்படி யிடைவிடாது அப்பியாசஞ்செய்ய வதனுல் தைலதாரைபோல் அவ்வாகாசத்தில் அம்மனம்நிலைபெறுமாகில் சப்த ஸ்பரிசாதிக ளிறந்து ஸொரூபத்தில் ஏகாக்கிரதை யடையும்,அடையவே அகண்டாகார

விருத்தி யுதயமாகும். அவ்விருத்தி தைலதாரை போல் நிலைபெறுகிறவரை யிடையறு வசமுதநாட்டம் பிரிதலின்றி யிருத்தல்வேண்டும். அப்படி யிருக்கில் (சங்கற்ப ஆகாரம்) * சகலாவஸ்தை யென்கின்ற சாக்கிர சொப்பனமும், (சங்கற்பவெழுச்சி) மறைப்பு என்னும் † கேவலாவஸ்தையாகிய சுழுப்தியும் நீங்கி ஆநந்தம் ஜனிக்கும். அவ்வாநந்தத்தி லிடையறுச்சமாதி நிலையைப் பொருந்தி யிருக்கில் சதோதயமாய் விளங்காநின்ற துரியப் பேற்றை யடைவர். (சக)

---

* அகத்திின்கண் நாமரூப பரிணாம மடைதலும் பஞ்சேந்திரிய வழிசென்று பாகிய பதார்த்தங்களின் பரிணாமத்தை யடைதலு மெனப் பொருட்கோடல் வேண்டும்.

† ஸொரூபத்தில் நின்று பிரதமத்தில் உண்டாகும் சங்கற்ப சிற்றசைவி னதீத பரிணாம வவசரத்தில் நிகழும் சூனிய பரிணாமாகார சங்கற்ப மெனப் பொருட்கோடல் வேண்டும்.

வே று.

* உத்தர முகமா யாதனத் திருந்தே
யுயர்குரு பதமலர் தொழுதே
முத்திரை யெனுஞ்சாம் பவியினைப் பொருந் [தி
மோனமா மந்நிலே வழாமற்
சித்திர தீபம் போலசை வறவே
சிந்தையி னசை வறுப் பவனே
யத்தன தடியை யடைவனென் றுரைக்கு
மண்ணலா கமமெலா மெடுத்தே.

(அ - பொ - ை.) விசாரத்துவாரா மனதை யிந்திரிய வழி செல்லாமற் றடுத்து உண்முகமாக தகரா

---

* ஆன்மகோடிகளுய்யுமாறு நிஷ்டை நிலையை உமாதேவி முன்னிலையாக அநுக்கிரகித்த பரமசிவம் வீற்றிருக்குங் கைலயங்கிரி வடதிசையிலுள்ள தாதலாலும், சனகர், சனற்குமாரர், சனந்தனர், சநாதரர்களாகிய நால்வருக்கும் சிவபெருமான் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தங்கொண்டு கல்லாலின்கீழ், தாம் தென்முக நோக்கியமர்ந்து அந்நால்வரையும் வடதிசைநோக்க

கா சத்தில் பொருந்தும்படி நிறுத்தி, மகாவாக்கிய சிந்தனையை யிடையறாது செய்துகொண்டிருத்தல் வேண்டும். அப்படியிருக்குங்கால் சிந்தனையில் மனதை நிறுத்தாமல் சிந்தனையுதிக்குமிடத்தையே நாடி

---

விருத்தி யுபதேசவுளவினை அவர்களுக்குணர்த்தினமையாலும், சாதகர்கள் வடதிசைநோக்கியிருத்தல் சாம்பிரதாயமாதலாலும், வடதிசை நோக்கி சிவபெருமானைத்தியானித்தலா லாயபயன் தியானமுதிர்ச்சியால் சிவபெருமானின் திருவருளைப் பெற்று தனதிஷ்டப் பேற்றையடைதலாலும், சனகாதியர் நால்வரும் பரமாசாரியராகிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி முகத்தையே மூன்றரைகோடி கற்பகாலம் பார்த்திருந்து அவரவர்கள் அந்தக்கரணங்களிலிருந்த சம்சயங்களெல்லாம் நீங்க அகத்தின்கண் திருவருளுதயமாகி துக்கநிவர்த்தியும் பரமாநந்தப் பிராப்தி யடைந்தனரென்பதாலும், அங்ஙனமே ஈண்டும் ஆநந்தாவிர்ப்பாவத்தைத் தரத்தக்க துரியசிவம் எழுந்தருளியிருப்பதும்பரை, பைசந்தி, மத்திமை, வைகரி யென்

நிற்றல் வேண்டும். அப்படி நிற்கில், வாக்கிய சிந் தனையுமிறந்து ஸொரூபத்தில் மனம் நிலைபெறும். பெறின், எதார்த்த வாநந்தம் ஜனித்து அவ்வாநந் தம் நிலைபெறுகிறபரியந்தம், அகமுகமாகிய சமாதி

னும் நான்கு வாக்குகளு மெழாவண்ணம் ஏகாக்கிர தத்தன்மை யடைந்து அகண்டாகாரவிருத்தி யுதய மாகு மிடத்தையே யூகித்துநின்று, அதனது அதி கரிப்பால் அஞ்ஞானநிவர்த்தியாகி, ப்ரஹ்மாகார விருத்தி யநு வம் பெறுதற் கிடமாகிய(சங்கற்பவா காரம் தவிர்ந்த பின்னரும்,மறுசங்கற்பமுதிப்பதற்கு முன்னருமாகிய இவ் விரண்டிற்கு மிடையாயுள்ள) மத்தியகத ஸ்தானத்தில் மனதை நிறுத்தலே மேற் காட்டிய வநுபவங்களைத்தருவது மாதலாலும், உத் தரமுகம் என்பது வடதிசை யென்பதாக பதத்தின் பாஹியார்த்தத்தை நாடாதொழிந்து, ஈண்டு உண் முகமாக தகராகாசத்தில் பொருந்தும்படி நிறுத்தி என ஆந்தரார்த்தப்பொருள் கொண்டாம்.

நிலையிற் பிரிதலின்றி திடவைராக்கியத் துடனிருத்தல் வேண்டும். இருக்கில் சங்கற்ப நாசம் வாசனக்ஷயமுண்டாகி கூடஸ்தப்பிரஹ்மாக்கியநிலையை யடைவார்களென்று ஈஸ்வரனுற் சொல்லப்பட்ட ஆகமங்கள் கோஷியாநிற்கும். (உ0)

வேறு.

இருந்தான் சமாதி போலென்றே யிந்த
வுலகோ ரியம்பவுங் கேட்
டிருந்துஞ் சமாதி தனிலுழையா தென்னே
வென்போ லிருந்தானே
யிருந்தான் சமாதி தன்னிலையி லிருந்தே
யிலாமை நனைநீக்கி
யிருந்தா னவனே யிருந்தானே யின்ப
மனவி லின்பத்தே.

(அ - பொ - ரை.) தொழிலறுதியுடையானை யிவ்வுலகின்கண்ணுள்ளார் நோக்கி யிவன் சமாதிநிஷ்டையை யடைந்துள்ளவன்போ லிருக்கின்றனை

னென சமாதியின் பெருமையைப் புகழ்ந்து பகர் வதைக்கேட்டிருந்தும், பரமாசாரியர்பாலடுத்து அச் சமாதியின் உளவுகளை நன்குணர்ந்து, அந்தக்கரண விருத்தியை நிரந்தரம் நிறுத்தி சாதகஞ்செய்து துக்கநிவர்த்தியையும் பரமாநந்தப் பிராப்தியின் ஆவிர்ப்பாவத்தையு மடைந்துகிருதகிருத்தியத் தன் மை பெறாது, பகிர்முகப் பிரவிருத்தியில் தலைப் பட்டு சாத்திரபடனம் ஓதல், ஓதுவித்தல் முதலிய சம்பந்தத்தினாலேயே திருப்தி யடைந்திருப்பானா யின், அன்னோனுக்கிடுக்கண் வருங்கால் இலவங் காத்த கிள்ளையைப்போல் சோர்வடைவனாதலின் இத்தகைய நாடகத்தொழிலை, சாதக புருடனானவன் விடுத்து சாத்தியத்தன்மை யடையுமளவும் இலைமறை காய்போல் பிரபஞ்சத்தினிடத் தின்றா னெனப் பிறரறியா வண்ணமிருந்து பரமாசாரிய ரால்காட்டிய (சங்கற்ப ஆகாரந்தவிர்ந்த பின்னரும் மறுசங்கற்ப முதிப்பதற்கு முன்னருமாகிய) இடை வெளியில் சித்தவிருத்தியை நிரந்தரம்நிறுத்திப் பழ கும் பரிபாகஸ்திதியிலுளவாகும் ப்ரஹ்மாகார விரு த்தி யுதயத்தால் சகல கேவலத்தாக்கற்று ஆண்டு

நிகழும் நனவிற் சுழுப்திநிலையில் இடையறாச் சமாதியை (நிர்விகற்பம்) யடைந்து அதனதீத பரிணமஸ்திதியைப் பெற்று சகஜாநந்த வநுபவியா யிருப்பன் என்பதாம். (உக)

வேறு.

அருந்துபோ னகமும் பாதியா நீரு
  மதனினும் பாதிய தாகப்
பொருந்துநா ளொன்றுக் கொருபொழு
  தருந்தல்புரிகமற்றெவ்விடத்தெனுந்தா
னிருந்திடி னும்பி னெழுகினும் புவிமீ
  தேகினு மாதர்க டம்மைப்
பரிந்துகூடினுமெய்ஞ் ஞானமுத்திரையிற்
  படிவது யோகிதன் பரிசே.

(அ - பொ - ரை.) ஞான சாதகர்கள் உதராக்கினியைத் தணிக்கும் பொருட்டு அரை வயிறு போஜனமும் கால் வயிறு ஜலமும் நாளொன்றுக்கு பகலில் உச்சிகாலத்தி லோர்பொழு தருந்தக்கடவர், அக்ஷீணப்பிரயு மத்தகைய புருடர்கள் சாதகஞ் செய்

யுங்கால் ஆண்டு, அந்தக்கரண விருத்தி நிலைபெ ருது எத்தகைய சம்ஸ்காரங்கள் வரினும், அவை களின் வசப்படினும், நாடரூபத்தடிப் பெய்தினும், இந்திரியவழிசெல்லினும், விஷய போகங்களை யநு பவிக்கினு மச்சமயங்களி லெல்லாம் சற்குருநாதன் காட்டிய ஞானமுத்திரையென்னு முளவில் நிரந் தரம் சித்தவிருத்தியைப் பிரிதலின்றி யிருக்குமாறு பொருத்திக் கொள்வதே ஞானயோகிகளின் சுபா வத்தன்மையாம். (உஉ)

இத்திற மான யோகசா தனையி
விருந்துசா திப்பவர் தமக்குச்
சுத்தமா நாதத் தொனிகளும் பலவாத்
தோன்றிடு மணிகடன் மேக
மத்தளம் பேரி யாழொலி சிலம்பு
வளையளி தாளமென் றுமையாட்
கத்தனு மொழிந்தா னன்றியு முரவோ
ராய்ந்தெடுத் துரைத்தன ரன்றே.

(அ பொ-ரை.) சற்குருநாதன்பாற்பெற்றமோன முத்திரையில் சித்த விருத்தியை நிரந்தரம் தைல

தாரைபோல் நிறுத்திப் பழகுங்கால் சிந்தனையிறந்து சிந்தனாதீதமாய் நிலைக்கும் அவசரத்தில் ஸொரூபம் விளங்காமையும் பகிர்முகத் தோற்ற மின்மையுமாகிய விடைவெளியில் பிரணவ ஸப்தமுண்டாகும். ஆண்டு சித்த விருத்தி யெவ்வண்ணம் பரிணமித்து யூகிக்குமோ அவ்வண்ணமாக மணி, கடல், மேக முழக்கம், மத்தளம், பேரி, யாழ், சிலம்பு, சங்கு, தாளம் முதலான பலவகை ஓசைகளாக நிகழுமெனவிமையவல்லிக் கிறையோ னியம்பின தன்றியும் மகருஷிகளு மிச்சூழ்ச்சியை யுணர்ந்தெடுத் துரைத் திருக்கின்றனர்கள். (உங)

ஒத்தவந் நாதந் தோன்றிய பொழுதே
யொலியினு லுயர்ந்தெழு படம்போற்
றத்துவஞ் சகல கேவல நீங்கித்
தனையறி பவர்க்கிலை மூட
மித்திற மலாது சகலத்து மெய்தா
திரும்பர கேவலத் தடையா
மத்தியத் தந்த மூடமே யுற்றால்
வகையதற் குரைக்குது மன்றே.

(அ - பொ ரை.) பரமாசாரியர்பகர்ந்த லக்ஷயார்த்தத்தில் சித்தவிருத்தியைநிறுத்திப் பழகும் பரிபாகஸ்திதியில் ஸொரூப விளக்க மின்மையும் பகிர்முகநாட்ட மின்மையுமாகிய விடையிற்றோன்றும் பிரணவ சத்தத்தின்மயமாகாது அச்சத்தத்தி னதிஷ்டான வடிவாயூகித்து நிற்குந்திடப்பேற்றில், ஆண்டு ப்ரஹ்மாகார விருத்தி யுதயமாகி சகல கேவலங்கள் நீங்கி துரியாநுபவத்தை யடைபவர்க்கு அஞ்ஞானமத்தியந்த நிவர்த்தியாகும். இவ்வாறன்றி, அச்சப்தமயமாகிச் சகல கேவலத்தின் வயப்பட் டிடைவெளியில் நிகழும் பிரணவ சப்தத்தையே யநுபவமெனப் பொருட்கொண்டு திருப்தி யடைதலாகிய ரசாஸ்வாதமென்னும் பிரதிபந்தம் நிகழு மாயின் அப்பிரதிபந்தத்தை யொழிக்குஞ் சூட்சியைக்கூறுதும். (உ௪)

துன்னிய வந்த மூடநீங் கிடமெய்த்
தூயசற் குருவினைத் தொழுதே
மன்னுகா ரணமா மனுவினைப் பெற்றே
முனம்விட யத்துறு திருந்தே

யந்நிலைப் பதிறு யிரந்தரஞ் செபிக்க
வகன்றிடு மகன்றிடா துறமேற்
பின்னுமச் செபத்தை யொருபதாண்டளா
வெட்புடன் செபிக்கநீங் கிடுமே. [வும்

(அ·பொ-ரை.) நெருங்கியஅவ்வஞ்ஞானம் நீங்குதற்கு பரிசுத்தம் பொருந்திய வெதார்த்த ப்ரணவசப்தத்தை யெவ்விளக்கம் விளக்குகின்றதோ வவ்விளக்கமயமாய் நிலை பெற்றிருத்தல் வேண்டும். அன்றே லச்சமயம் மஹாவாக்கியத்தைச் சிந்தித்து மனதை யச்சிந்தனையில் விடாது அஃதுதிக்குமிடத்தினிறுத்தி தசேந்திரியங்களும் ஜீவபோதமும் நாசமடையும் பரியந்தம் பழகல்வேண்டும். அவ்வாறு பழகும்போ தின்றியமையாத பிராரத்துவ வசத்தாய் பகிர்முகப்படுங்கால் ஆண்டும், ஜீவபோத நிகழுமாயின் அஃதெழாது அகவிளக்கத்தின் கண்ணேயே விருத்தியை நிறுத்தி பதார்த்தங்களைப் பற்றிப்பழகும் பரிபாகஸ்திதியில் அப்பழக்கமு மற்று ஆநந்தமே மேவிட்டு நிற்கும். அவ்வாநந்தத்தில் நிரந்தர சமாதி ஸ்திதியைப் பெற்றிருக்கில் திரிபுடி ரூபத்

அவைத மிறந்து அஞ்ஞான மத்தியந்த நிவர்த்தி
யைப்பெறும். (உரு)

இந்தமெய்ச் செபமுங் குருபதத் தன்பு
மிடைவிடா தேயுஞற் றுவரேல்
வந்திடுஞ் சனனந் தன்னிலே யுறுவர்
மன்னுமெய்ஞ் ஞானநிட் டையினை
யுந்துமம் மூட மிலாதவர் தம்மை
யுத்தம பக்குவ ரெனலா
முந்துசற் குரவ னல்குமுத் திரையான்
மோனவீ டுறுவர்களன்றே. (உசா)

இயம்புநன்னிலையினிட்டைசாதிப்போர்க்
கினனொளி கோடிக ளொன்றாய்
வயங்குவ போல வகக்கணிற் றோன்று
மற்றதும் பொருளல வென்றே
தயங்குறவெந்தை யுமைக்குரைத்திடவே
தலைவிகேட் டதனைநீ தெளிய
நயம்பெறப் புகறி யென்னவே வினவ
நாதனுந் தெளிவுற நவிலும். (உஎ]

மேலிரண்டும் வெளிப்படை.

இலங்கிய மோன முத்திரை யதனி
 லிருந்திடும் பொழுதிலைம் புலனி
னலந்திகழ் மூன்று புலனொடுங் கிடுமா
 னவிலவை யெவையெவை யென்னிற்
றுலங்கிய ரூப பிரதநற் கந்த
 மென்றுசொற் றிடுவர்மற் றிரண்டு
புலன்களிற் பரிசந் தரிசனந் தோன்றிற்
 போயிடு மென்பர்புண் ணியரே.

(அ - பொ - ரை.) பிரதமசங்கற்பம் நீங்கியபின்னும் உத்தரசங்கற்பம் வருதற்கு முன்னுமாய் நிகழ்வதும் பிரகதாரணியமுதலிய பிரபல சுருதிகளெவற்றினும் விகசிதமாய் பிரதிபாதித்து விளங்குவதுமாகிய மத்தியகத ஸ்திதியிலேயே அந்தக்கரணவிருத்தியை நிறுத்திப்பழகும் பரிபாகதசையில் சப்த ஸ்பரிச ரூப ரச கந்த மென்னு மைந்தனுள் மூன்றொடுங்கிடும். அவை யெவை யெவைக ளெனில், பிரகாசிக்கின்ற ரூபக்காட்சிக்கேதுவாகிய பரிச்சின்னப்பிராணியும், ரசனையுணர்விற் கேதுவாகிய வப்பரிச்சின்ன பதார்த்தங்களைப் பற்றுதற்குக் கர்த்தாவாகிய சங்

கற்ப ஸ்புரிப்பும், கந்தவுணர்விற்கேதுவாகிய வச் சங்கற்ப வாகாரமு மென்று (அந்தர் முகாநுஷ்டா னத்திற் றலைப்பட்டுச் சாதகஞ்செய்யு மாப்தர்களா லும், சாத்தியத்தன்மை யடைந்த வாப்தர்களாலும்) கூறப்படும். எஞ்சிநின்ற சப்தஸ்பரிசமென்னுமிரண் டினும், சங்கற்பவாகாரந் தவிர்ந்தவிடத்தில் நிகழு மனோ விளக்கமாகிய வகண்ட சூனிய மென்னும் பரிச வுணர்வு, ப்ரஹ்மாகாரவிருத்தி யுதயத்தா னீங்கி ஆண்டே சகல வநர்த்தங்களுக்கும் பற்றுக் கோடாய் நிகழ்வனவாகிய வாசனை யென்னுஞ் சுரோத்திரிய சப்தக்காட்சியும் நீங்கிவிடுமென்று ப்ரஹ்ம நிஷ்டர்கள் கூறுவர். (உ.அ)

வேறு

பேசரிய வநுபோக மாகுங் காலைப்
பிறங்குசத்தத் தக்காங்க டோன்றுமாயி
னீசமாம் பொறிபுலன்க ளவையுந்தோன்று
நிலவுபொழு தகமுகம தாக வுய்த்தே
பாசமிறே சிகன்முன்னம்பகர்ந்த வாறே
பதுமவா தனமும்பார் வையுநீங் காம

லாசிலந் நிலையிலுற வஞ்செழுத்து மில்லென்
றறையக்கேட்டவைபோமாறியம்புகென்றாள்

(அ° - பொ - ரை.) அகமுகமாய் விருத்தியை நிறுத்தி சாதகஞ்செய்யும் பரிபாக தசையில் மனோ வாக்குக் காயங்களின் செயலிறந்து ப்ரஹ்மாகார விருத்தி ஞான சகித சமாதி ஸ்திதி சித்திப்பதற்கு முன் நிகழும் பிரணவ சப்தத்தின் வசத்தாய் சங் கற்பவெழுச்சி யுண்டாகுமாயின்,மாமிச பிண்டமெ னுந் தேகோக வுபாதி சகித பொறிகளு மவைக் குரியவிடயங்களுந் தடஸ்தப்படும்: ஆதலின், அப் பிரணவ சப்த முண்டாகு ஞான்றே யதன் வசத்தா காது, அச்சப்தத்திற்கதிஷ்டான நோக்குடைத்தாய் நிற்றல் வேண்டும். அஃதின்றேல், சங்கற்ப வாசனு க்ஷயங்களி னத்தியந்த நிவர்த்தியைப்பெற்று, சதா நந்த சொரூபியாய் விளங்கும் ஞானசிரியர் முன்ன ரநுக்கிரகித்த வண்ணமே சங்கற்பவுற்பத்தி ஸ்தா னத்தைத் தைலதாரை போனேக்கி நிற்குந்தன்மை யையும் உள்ளது (ப்ரஹ்மாகாரவிருத்தி) விளங்கு இற பரியந்தம் பிரிதலின்றிப் பழகுவாயாகில், அப்

பழக்கத்தின் முதிர்ச்சியா லஞ்ஞானம் நீங்கி ப்ரஹ்ம மாகாரவிருத்தி யநுபவமுண்டாகும். ஆண்டுண்டாகும் நிர்விகற்ப சமாதியால் சகஜாநந்த வடைவுண்டாகி அவ்வடைவின் பரிபாக ஸ்திதியில் சங்கற்ப வெழுச்சி, ஆகாரமென்னும் நாமரூபங்களி னத்தியந்த நிவர்த்தியைப் பெற்று, சத்து சித்து ஆநந்த மென்னு மநுபவப் பெருக்காகிய ஸ்புரிப்பும் ஈண்டு நிகழுமெதன பரமசிவனுற் கிளத்தக்கேட்ட தேவியார், அவைகளொடுங்குந் தன்மையைச் சொல்வீராக வென்றார். (உக)

வேறு.

நகரமொடு மகரமது சடந்தருங்கா ரணமா
நாடுமவை நீங்கியிடும் வகையைநவிலுதுங்கேள்
வகரத்தி னகரமுதல் யகரத்திற் றனே
மகரமுநீங் கிடுமெரிய சிகரமனுத் தன்னல்
யகரலயம் வகரமுந்தான் சிகரத்தி லொடுக்க
மாகுமிறைநீங்கவுயிர் முத்தியெய்துமென்றே
தகரநறுங் கரியகுழ லகமாதுக்கிறைவன் [தே.
றனதுதிருவுளமகிழ்ந்து சாற்றினனன்குணர்ந்

(அ - பொ - ரை.) நாம ரூப மிரண்டுந் துன்பப் பகுதிகளை யுண்டுபண்ணுவதற்கேதுவாகியும், சச்சிதாநந்த மூன்றும் கூடஸ்த ப்ரஹ்ம ஐக்கியத்தன்மையை யுண்டு பண்ணுவதற் கேதுவாகியும் நிகழ்வன. இவைகளின் லயக்கிரமங்களை யூகித்தறியுந் தன்மைகளைச் சொல்லுதுங்கேட்பாயாக. அந்தக்கரண விருத்தியை யிந்திரியவழிவிடாதுசங்கற்போற்பத்தி ஸ்தானத்தின் கண்ணேயே நிறுத்தி தைலதாரை போற் பழகும் பரிபாக ஸ்திதியிலுண்டாகும் (ஆநந்தத்தின் லேசமாகிய) உள்ளக்குளிர்ச்சி யநுபவத்தில்சங்கற்ப வெழுச்சியானது சொரூபத்தி லேகாக்கிரதை யடைந்து ஆண்டு சூனிய விளக்கமே மிஞ்சி நிற்கும் அவ்விளக்கத்தினை யெவ்விளக்கம் விளக்குகின்றதோ வவ்விளக்கமயமாயூகித்து நிற்குமத்தருவாயில் ஆகாச பலம்போல் ப்ரஹ்மாகாரவிருத்தி ஞானமுதயமாகி அஞ்ஞானந்தகாரம் நீங்கும். இப்பெற்றியான், ஈண்டநுபவமாய் நிகழ்வது சுத்த ஜீவ (கூடஸ்த) அநுபவமாதலின், அவ்வநுபவத்தில் கிரந்தர சமாதி ஸ்திதியைப் பெற்றிருக்கின் துரியாநுபவம் (சகஜாநந்தம்) விளங்கி மேற்கூறிய சுத்த ஜீவ

வநுபவ மாகிய திரிபுடிரூபத் துவைதமு நீங்கும், இந்நிகழ்ச்சியான் சகஜாநந்த வநுபவமென்னுஞ் சுத்த ஸ்புரிப்பாகிய மாயாமலமுநீங்கி, கூடஸ்த ப்ரஹ்மாக்கிய நிலையாகிய விதேகமுத்தி யநுபவத்தையடையுமென்று, மயிர்ச்சாந்தணிந்த வாசனை பொருந்திய கறுத்த கூந்தலையுடைய மலைமாதுக்கு பரமசிவனார்தமது திருவுளங்களிகூர்ந்து செவ்வனே யறிந்து அநுக்கிரகஞ்செய்தனர். (௩௰)

வேறு,

ஆதனத் திருந்தே சாதனை செய்யும்போ
    தலைதரு மனமடங் காமற்
போதுமே யெனினுங் கேவல மயக்கம்
    புரியுமே யெனினுமங் கெழுந்து
நீதியி னையீ ரடியுலா வந்தே
    நிலவுமா தனத்தினிற் பொருந்தி
யோதுசா தனையி லுறுதியோ டிருப்ப
    தியோகியர்க் கியல்பதா மன்றே. (௩௧)

வெளிப்படை.

வேறு.

இந்நிலையா லியபரம
கேவலத்தி னூடு
மெழுநிதித்தி யாசனத்தி
லிராமலிருந் திடுவோ
னந்நிலையே யுடலினொடு
சீவன்முத்தி யடைவ
னதுவுமெவ் விதமென்னி
லறைகுதுநீ கேளாய்
துன்னியதோ யத்தினொடு
தோயமுறல் போலுஞ்
சுவைதருகீ ரத்தினொடு
கீரமும் போற்கலந்தே
யெந்நிலையுந் தோன்றாம
லிருந்திடவிவ் வுலகி
லிறப்பினொடு பிறப்புமறுத்
திணையிலின்பத் தொளிர்வான்.

(அ - பொ - ரை.) சற்குரு நாதன்பாற் பெற்ற அருட் பிரசாதமாகிய வுளவின்கண் அந்தக்கரண .

விருத்தியை நிறுத்திப்பழகும்பரிபாக திசையிலுண்டாகாநின்ற ப்ரஹ்மாகார விருத்தியில் திரிபுடிரூபத் துவைதம் நாசத்தையடைகிறபரியந்தம், இடையருச்சமாதிஸ்திதியைப் பெற்றிருக்கின்ற புருடனெவனோ வப்புருடன் அச்சரீர மிருக்கு ஞான்றே அப்பிரஹ்மாகார விருத்தியின் பெருக்காகிய துரியாநுபவத்தையும் சகஜாநந்தப் பேற்றினையுமடைவன். அஃதையே ஜீவன் முத்தி யென்பர். அவ்வித முத்தியினேர்மை யெவ்வாறெனில் அஃதை ஈண்டொருவாறெடுத்துக் கூறுகின்றனம், நீ கேட்பாயாக. கங்கை, யமுனை, சரஸ்வதி, கோதாவரி, கிருஷ்ணை, துங்கபத்ரை, காவேரி, தாம்ரபர்ணி முதலாகிய வநேக நதிகளின் ப்ரவாக ரூபமாகிய ஜலங்களெல்லாம் சாகரத்திற்கலந் தெவ்வாறொன்றுபட்டு விளங்குமோ வதுபோலவும், மதுரமாகிய வநேக ஆவின் பால்களெல்லா மொருங்குசேர்ந்தவிடத்திலொன்றுபட்டு பேதப்பகுதிதோன்றா தேகரசமாய் விளங்குமோ வதுபோலவும், ஜீவனானவன் சற்குருவீக்ஷண்ணிய வருட்பிரசாதவலிமையால் அந்தக்கரண விருத்

தியை அகமுகநாட்டத்தில் தைலதாரைபோ னிறுத்திப் பழகும் பரிபாகதசையில் ப்ரஹ்மாகார விருத்தியுதயமாகி அஞ்ஞானம் நீங்கப்பெற்று ஆண்டுண்டாகும் பரமாநந்த ஆவிர்ப்பாவத்தினல் திரிபுடி ரூபத்துவைத மிறக்கும். இப்பெற்றியான் தேகாதி பிரபஞ்சத்தோற்றந் தோன்றாமல் ஆநந்தப் பிரவாகமேயதிகரித்து அப்பிரவாகத்தின்முதிர்ச்சியா லந்நினைவு மிறந்து கேவலம் பரம கைவல்யத் தன்மையாய் விளங்குவான். (௩உ)

அஞ்செழுத் தின்விதி யெவ்வித மென்னி
லரிய தூலமொடு சூக்கும மேவும்
பிஞ்செ ழுத்தினைப் தள்ளிமே னின்ற
பெரியெ ழுத்தினைப் பினுமுனு நிறுவி
யெஞ்ச லில்லுயிர் நடுவினி னிலவ
விசைத்தல் காரண மாகுமென் றறிதி
விஞ்சு நல்லரு ளிறையதா மிதனை
விளங்கு பக்குவர்க் கருள்வது விதியே.

(அ - பொ-ரை ) மேற்சொல்லிய காரண பஞ்சாக்ஷரத்தின் கிரமமெவ்வாறெனில் அருமையுற்ற ஸ்தூல பஞ்சாக்ஷரத்தின் பிரதமத்திலும் சூக்ஷ்மபஞ்சாக்ஷரத்தினிறுதியிலும் பொருந்தியிராநின்ற திரோபவ மலமா கிய விவ்விரண்டக்ஷரங்களையும் நீக்கி யெஞ்சி நின்ற பெருமைபொருந்திய பதி சத்தி பசு என்னும் மூன்று அக்ஷரங்களில் பதி சத்தி அக்ஷரங்களை முன்னும் பின்னுமாக நிறுத்தி, குறைவில்லாத பசு அக்ஷரத்தை யிடையில் பிரகாசிக்க விசைத்தல் காரண பஞ்சாக்ஷர மாகுமென்றறிவாய். இதற்கு மேற்பட்டு வழங்கப்படும் கைவல்ய மோக்ஷப் பேற்றினைத்தருகின்ற சத்தி அக்ஷரமும் பதி அக்ஷரமுங் கூடியதே மகா காரணமாம். இத்தகைய மகாகாரணத்தை, மல விக்ஷேப தோடங்கள் நீங்கி சாதன சதுஷ்டய சம்பன்னர்களா யுள்ளார்க்கே உபதேசிப்பது கிரமமாம். (௩௩)

வே று.

இந்தவஞ் செழுத்தி லிரண்டெழுந் தொழிப்
பதென்னையென் றுமையவள் வினவ [ப

வந்தமி லின்ப துன்பமே தனையி
லழுத்துவ திரண்டெழுத் தாமால்
சிந்தனைக் கரிய சிவமிரு பாலுஞ்
சேர்ந்துயிர் நடுவணைந் திலங்கு
மைந்தெழுத் தினையே காரண மெனலா
மநுமுத்திக் குறுதுணை யாமால்.

(அ - பொ - ரை.) இந்த பஞ்சாக்ஷரத்திலிருக்கின்ற நகர மகரங்களென்னுமிரண்டெழுத்தை நீக்குவது யாதுகாரணமென பார்வதியார் கேட்க பரமசிவனாரநுக்கிரகிக்கின்றார். முடிவில்லாத சுகதுக்கங்களாலாகிய பவரோகத்தில் பிரவாகரூபமாய் முழுகச்செய்வது அவ்விரண்டெழுத்தாகும் ஆதலின் அவைநீங்க, மனத்தால் நினைப்பதற்கரிய பதி அக்ஷரம் சத்தி அக்ஷரமாகிய விரண்டையும் முன்னும் பின்னும் நிறுவி ஜீவாக்ஷரம் மத்தியில் பொருந்தப் பிரகாசிக்கின்ற வைந்தெழுத்தினையே காரண பஞ்சாக்ஷரமென்று சொல்லப்படும். அத்தகைய பஞ்சாக்ஷரத்தை யிடையறாது எச் சமயங்களினும் அஜபையாய்த் தியானஞ்செய்யின் மலவிக்ஷேப தோ

டங்கள்நீங்கி சாதன சதுஷ்டய சம்பத்துகள் ஆகா. சபலப்போற்றோன்றி பரமானந்த சுகத்தி ஞவிர்ப் பாவத்தையுண்டுபெண்ணுவதற்குற்றதுணையாகும் ()

## வேறு.

விதிசேர் பஞ்சாக் கரந்தன்னை விளங்க
 வுரைத்தோ மேலியம்பல்
பதியின் மனுவாமதையுளத்திற்பதித்தோர்
 பரம பத மடைவர்
கதிசேர் செபமு நீங்காதோர் கருதும்
 பலனை யடைவரென
மதிசேர் சடையெம் மண்ணலுமை மகிழ
 வுரைத்தான் வாய்மலர்ந்தே. (௩௫)

சினத்தி னிடத்து முவகையினுஞ் சிநேக
 னிடத்து பகையிடத்து
மனத்தான் மொழியாற் காத்திடையுமருளு
 ஞபலி யிடத்தினுந்தா
னெனைத் துங்குழுவ விடாதகத்தி னிடையே
 யுய்ப்பா னிறைமொழுந்தை

மனத்துக் கரிய ஞமவனே யென்றான்
பரமன் மலைமகட்கே. (௩௬)

இரண்டும் வெளிப்படை.

வே று.

பதியெழுத்தை விடுத்தவர்கள்
பண்ணும்பூசை யவமாகும்
பதியெழுத்தை விடுத்தவர்கள்
பண்ணுஞ்செபமு மவமாகும்
பதியெழுத்தை விடுத்தவர்கள்
பண்ணுந்தவமும் மவமாகும்
பதியெழுத்தை விடுத்தவர்கள்
பண்ணுமறங்க ளவமாமே.

(அ - பொ - ரை.) சங்கற்ப வுற்பத்தி ஸ்தானத்தை விடுத்து கேவலம் சங்கற்ப பரிணாமமாகிய நாமரூப சகித திவ்யமங்கள வடிவினையே தேஹோபாதியில் சத்திய புத்தியோடு கூடி நின்று செய்யும் பூஜையானது மானி—யாக்கை யெடுத்தவிஞெலாம் பயன்யாதோ அஃதினை தராதென்பதாம். மங்

திராதிகளை ஜபிக்குங்கால் அம்மந்திரஜபம் யாண்டு உற்பன்ன மாகின்றதோ ஆண்டே சித்தவிருத்தியை நிறுத்தி ஜபித்தல் வேண்டும். அவ்வாறு செய்யாத ஜபம் அம்மந்திரங்களாலாய பயனைத் தராவாம். சங்கற்ப விகற்பமற்றிருத்தலாந் தன்மையெம்முயற்சியா னிகழுமோ வம்முயற்சியிற் றலைப்பட்டு அதன் பரிபாகஸ்திதியில் விளங்கும் அகண்ட சூனியத்தை யெவ்விளக்கம் விளக்கு கின்றதோ வவ்விளக்கமயமாய் சித்தவிருத்தி நிலைபெற்றிருத்தலாந் தன்மையை யூகித்துப் பழகல்வேண்டும். அவ்வாறு பழகாத நிட்டை துக்க நிவர்த்தியையும் பரமாநந்தப் பிராப்தியையு மடைவிக்காதென்பதாம் அகத்தின்கண் ப்ரஹ்மாகார விருத்தி ஞான முதயமாகி யவ்விருத்தி யநுபவத்தின் கண்ணேயே நின்று, ஆன்மகோடிகள் யாவருக்கும் உபதேசக்கிரமங்களையுணர்த்தி யன்னோர்களையுந் தானடைந்த பரமாநந்தப் பிராப்தியி னாவிர்ப்பாவ முண்டாகுமாறு செய்வித்தல் வேண்டும். அவ்வாறின்றி யகத்தின்கண் ப்ரஹ்மாகார விருத்தியநுபவத்தினைப்பெறாது கேவலம் சாஸ்த்திர ஜன்னியாஞான மட்டினின்று

ஆன்மகோடிகளுக் குபதேசிக்கத் தலைப்படில் அன்னோர்கட் கவ்வுபதேசத்தாலாய பயன் சித்தியாதன்றியுந் தன்பாலுந் துக்கநிவர்த்தி யுண்டாகா தென்பதாம். (௩௭)

வேறு.

இந்நிலையா மிறையெழுத்தை
யுளத்தடக்கு மவனே
யிவ்வுடம்பி னுடனிருந்து
மிலங்குபர கதியை

யந்நிலையே யடைவனென
வண்ணன்மலை மாதுக்
கறைந்தனனா லஃதுமோ
ராண்டுளத்து ளடக்குந்

தந்நிலைமை யுடையவர்க்குப்
பரகுரவன் மகிழ்ந்தே
சாற்றுகமா காரணத்தைத்
தமதுளத்து ளடக்கா

நன்னிலையாம் பக்குவரல்
லாதவர்க்குத் தானே
நவின்றிட வொண்ணாதெனவே
நவிலுவர் நல்லவரே.

(அ - பொ - ரை.) இத்தன்மையாகிய பதி அக்ஷரத்தை அந்தக்கரணத்தினிடமாக நிரந்தரம் பாவனையோடிருக்குமாறு தியானிக்கும் புருடனெவனோ அப்புருடன் இச்சரீரமிருக்குஞான்றே அத்தியானத்தின் முதிர்ச்சியில் பிரகாசியாநின்ற ப்ரஹ்மாகார விருத்தி யுதயமாகி பரமானந்தாவிர்ப்பாவத்தைப் பெற்று, அவ்வாநந்தாநுபவியாகவே அமர்வனென் பதாக பரமசிவனார் உமாதேவிக் கநுக்கிரகித்தனர். அத்தகைய பதி அக்ஷரத்தை அகவிந்திரிய புறவிந்திரிய வியாபாரங்களற்று சரீரப் பிரதீதியுந்தோன்றாதகண்ட சூனிய விளக்கம் நிகழ்வதெந்நிலையோ வந்நிலையை யுள்ளது விளங்குகிற பரியந்தங் காத்திருத்தலாந் தன்மையைப் பெறுதற்குரிய வாற்றலுடைய சீடனது பரிபாகமாகிய மலவிக்ஷேப தோட நீங்குகிற பரியந்தம் நாநாவித வுபாயங்களாற் பரிசோதித்

தும் அவ்வாறு பரிசீலனஞ்செய்யுங்கால் கட்கிமை போலும் ஊசி நூல்போலுமொத்து சம தமாதி குணங்க ளியல்பானேயமையப் பெற்றவர்களுக்கு பரமாசாரிய னகமகிழ்ந்து மகாகாரணத்தை யுபதேசித் தருளுவன் அக்கணமே, சூரியகிரணங்கள் படப் பனிக்கிரணங்கள் நீங்குவபோல் அநாதியாய்த் தன்பாலுள்ள வாணவ மலம் நீங்கி பரமாநந்தாவிர்ப்பாவத்திலடர்வன். இத்தகைய விலக்கண மில்லார்க்கு மேற்கூறிய மகா காரணத்தை யுபதேசித்தருளப் படாதெனெ ஆப்தர்கள் சொல்வர் (ரு௮)

இப்படி யாய வுபயநன் மனுவை
யெழிற்குரு வருளிடப்பெற்றுச்
செப்பருஞ்செபமுஞ் செபியாதுசெபிக்க
சிந்தையு மோயும தோய்ந்தா
லப்படி தானே யாதனங் கட்டி
யசைவற விருப்பதே நிட்டை
துப்புறு கரண மசையுமே யானாற்
துரிசுள வநிட்டையென் றுணரே.

(அ - பொ - ரை.) இத்தன்மைப்பட்ட விரண்டக்ஷர மென்றமையால் பரமாநந்த பிராப்தியி ஞவிர்ப் பாவத்தை நேர் சாக்ஷாத் கரிக்கத்தக்க * மகா காரணமெனப் பொருட்படும் இத்தகைய மந்திரத்தை சகஜாநந்த வடிவே யியல்பாயுடைய பரமாசாரியர்பா

* பஞ்சாக்ஷர மென்னுஞ் சப்தமானது காரண காரியவகையாய் நிகழும் சேதன சேதனப்பிரபஞ் சத்தின் அதிஷ்டான வடிவினையே யுணர்த்துத லென்பதாம்; ஈண்டதன் றன்மையைக்கூறுதும்;— ஆத்ம பஞ்சகமென்னும் சத்து சித்து ஆநந்தம் நாம ரூபமாகிய வைந்துபதம் நிகழ்வனபோல், சிகரம் வகரம் யகரம் நகரம் மகரமென வைந்து வடிவினை யுடையதாம். இவற்றுள் நகர மகரம் திரோபவாக்ஷர மென்பதுபோல் நாம ரூபமென்னு மிரண்டுஞ் சொரூப திருஷ்டியை விளங்கவொட்டாது மறைக்குந் தன்மை யாதலால் மலம் (திரோபவம்) எனப் படும்.

சத்து என்னுஞ் சப்தமானது திரிகாலா பாதித்தைக் குறிப்பதால் சிருட்டிக்கு முன்னும் சம்ஹா

லுபதேச வாயிலாய் அனுஷ்டிக்கும் சூக்ஷிகளை நன்குணர்ந்து அதன்பின் அம் மந்திரத்தினை வாக்கினுல் ஜபிக்காமல் அஜபையாய் நிரந்தரந் தைலதாரை போல் சாதக பாதக யுக்தியுடன் அநுஷ்டித்து வருவராயின் வாக்கிய சிந்தனையிறந்து மனம் ஏகாக்கிர

---

ரத்திற்குப் பின்னுமிடைநின்ற திதிக்காலத்தினும் நிர்விகாரமாய் விளங்கு மெப்பரம் பொருளோ வப்பரம் பொருளையே யுணர்த்துதலின் அஃதே பதி யெனப்படும்.

சித்து என்னுஞ் சப்தத்திற்குப் பிரகாசமென்றமைதலின், அத்தகைய பிரகாச சப்தந் தொழிலினைக் குறிப்பதால் அத்தொழிற் சத்தன்பால் நிகழ்வதாதலின் அச்சித்பிரகாசத்தினையே சத்தி யெனப்படும்.

ஆநந்தம் என்னுஞ் சப்தம் "ஆநந்தி" யென்னுங் கர்த்தாவின்றியக்கண் நிகழ்வதின்றாதலின் அத்தகைய கர்த்திருத்தவத் தன்மையை யடைந்துள்ள தெப்பொருளோ வப்பொருளில் போக்திருத்துவத்

தத்தன்மை யடையும் அவ்வாறு நிச்சலத்தையை யடைந்தால் அதனது பரிபாக தசையில் ப்ரஹ்மா கார விருத்தியுதயமாகும். ஆண்டவ்விருத்தி யநுபவம் பிரிதல் இன்றி யிருத்தலாகிய சமாதியினை

---

தன்மையும் நிகழுமாதலின் இத்தகைய தன்மைக்குரிய பெயரினை யூகிக்குங்கால் ஜீவனெனப் பொருட்படு மிவ்வொற்றுமை நயம்பற்றியே பஞ்சாக்ஷரம் கேவலம் காரண காரிய ரகித நிர்க்குண ப்ரஹ்மத்தினையே யுணர்த்துத னுதலிற்றாதலின், ஈண்டு நகர மகர அக்ஷரங்களை நீக்கி "சிவய" என்னு பக்ஷரத்தில் "ய" என்னு மக்ஷரத்தை அகமெனப் பொருட்கொண்டு 'சிவ" என்னு மக்ஷரத்தை ப்ரஹ்மமெனப் பொருட்கொண்டு (ப்ரஹ்மம் + அஹம்) ப்ரஹ்மோஹம் என்னும்பொருளேயே மஹாகாரண பஞ்சாக்ஷரமெனப்பொருட்கோடற்பாற்று, ஆதலால் இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களி னிறுதியிற் பிரதிபாதிக்கப்படும் மகாவாக்கியங்களு மிப்பஞ்சாக்ஷரத்தின் பொருளே யென்பது பெற்றாம் இத்தகைய சூக்ஷிகளை மேற்கொண்டு

பெற்றிருத்தல் யாதோவதனையே கண்ணுடையோர் நிட்டையென்பர். அவ்வாறின்றி ப்ரஹ்மாகார விருத்தி விளக்கத்தைப்பெற்ற மனம் மீண்டும்

---

நமது பூர்வாசாரியர்களாகிய ஸ்ரீசங்கரபகவத் பாதாசாரிய சுவாமி முதலியவர்களும், அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர் முதலியவர்களும் பஞ்சாக்ஷரத்தின் பெருமையையே யெடுத் துரைக்குந் தன்மையானே இவர்கள் கருத்துகளு மொன்றே யெனப்படுதலின் ஸ்ரீ சங்கர பகவத் பாதர் முதலியோர் மகாவாக்கிய சித்தாந்தத்தையும் நிலைநாட்டினர் அப்பர் முதலியோரவ்வாறு நிலைநாட்டக்கண்டில மென்பராயின் அன்னோர்கள் திருவாய்மலர்ந்தருளியிராநின்ற பாமாலைகளில் இலைமறை காய்போல் நிலைநாட்டி பரிபாகிகளுக்குத்தக்கவாறு பொருட்படுமாறு வமைத்திருப்பதினாலும் இவர்கள் கொள்கையுஞ் சமரச மென்பதே யொருதலையாம். இப்பெற்றியானே பஞ்சாக்ஷரமானது வேதங்களினிறுதியிற் பிரதிபாதிக்கும் மகாவாக்கியப் பொருளெனலே தெற்றெனை விளங்கும்.

பதார்த்தங்களி லாரூடமாய் சஞ்சரிக்குமேயானல் அஃது திரிபுடிரூபத்துவைத மிறவாத அநிட்டை என்றறிந்துகொள்ளக் கடவாய். (௩௯)

வேறு.

உற்றமெய் நிட்டை விடாதுசா தித்தோ
　ருறுவர்நன் முத்தியை யென்றும்
மற்றவம் மூட நீங்கிலார் முத்தி
　மறுபவத் துறுவரென் றுரைத்தீர்
குற்றமி னிட்டையடையுங் காரணத்தைக்
　குழகனே யுரையென வினவப்
பற்றறு பரம னுமையவண் மகிழப்
　பண்பொடு பகர்தன்மே யினனல். (௪௦)

வேறு.

ஞான நிட்ட னிருக்குமந் நாட்டினின்
மோனவார்த்தைமொழியவே கேட்டவன்
றூனு முப்பதா மாகந் தவத்தினு
லான முத்திப் பதத்தை யடைவனல்.

செப்பு நிட்டா பரர்க்குச் சிந்தையா
லொப்பின் மாட மொடுக்கமுஞ் செய்பவ
ரிப்பு விக்க ளிருபத்தெட்டாம்பவந்
தப்பி லாதமெய் முத்தியைச் சாருமால்.

ஞான நிட்டா பரர்க்கு நாடொறும்
போன மாதி பொருந்த வுதவுவோ
ரீன மில்லா விருபத்தைந் தாம்பவ
மான முத்தியை மன்னுத றிண்ணமே.

நிட்டை மேவு நிருமல யோகியர்
கட்ட வேநற் கலைக ளுதவுவோ
ரிட்டமாயிரு பத்திரண் டாம்பவத்
தெட்ட ரும்பத மெய்துவ துண்மையே.

சாத லைக்குண் முயலுந் தகைமையோர்
பாதமுச்சிப் படியப்பணிபவ
ரோது மங்க மொருப திரட்டியிற்
றீதில் வீடு பெறுவது திண்ணமே. (௬௫)

சாற்றுநிட்டையைச் சார்ந்தமெஞ்ஞானிபா
லாற்று நற்பணி யன்பொடு செய்பவ

னேற்று மீரா றியன்ற தனுவினிற்
போற்றும்வீடு பொருந்துவ துண்மையே.

ஓதுசாதனை யுற்றவர் சேவடிச்
சீத நீரொடு சேடமு மார்பவன்
மீதிலெட்டாந் தனுவிற் றிகழ்தரு
மேதின் மெய்வீ டெய்து மினிதரோ.

ஒப்பிலாதுய ருண்மைநிட் டார்தமக்
கப்போ டன்னமு மர்ச்சித் துதவியே
தப்பிலேவலுந் தாஞ்செயும் புண்ணியர்க்
கெப்பின்முத்தி யெடுக்கும்பவத்தினே.

வேறு.

இந்நிலைத்திருப்பணியெலாஞ் செய்பவர்க்கிசைய
வந்நிலைப்பர குருவருள் சுரந்தினி தாக
வுன்னுதற் கருமொரு மொழியருளினலுதவித்
தன்னிலைப்பரநிட்டையிலிருத்துவன்றனையுரல்

வேறு.

இப்படி நிட்டை தன்னிலே யிருந்து
மியல்பொடுந் தன்னறு பவத்தை

யொப்பிலாவரசற் கமைச்சுரைப்பதுபோ
லுயர்குரு பரற்குரைத் தளவின்
மெய்ப்படுகுரவன் பின்னிகழ்வதனை
விளம்பிடக்கேட்டறிகுநரே
யொப்பின்மாயோக ரலாதவர்கிரியா
காண்டியென் றுரைத்திடப்படுமால்.

உன்னரு ஞான நிட்டையை யடிக
ளுரைத்திடக் கேட்டுள மகிழ்ந்தேன்
பன்னருங்கிரியா யோகமென்றுரைக்கப்
படுவதை யெனக்குநீ விரித்தே
நன்னய மாக வுரைத்திட வேண்டு
மென்றுமை நாதனை வணங்க
வின்னமு தொழுகும் மதியணி சடையோ
னிறைவியைப்பார்த்தினி துரைப்பான்.

வேறு.

பங்கமுற மனங்கொண்டு சுவாசந்தன்னைப்
பந்தனஞ்செய் தருங்கற்பம் பலவயின்றே
யங்கமதைத் தான்சுழற்றி யபானவழிதன்னு
லயம்வாங்கி யவ்வழியா னதைமீளவிடுத்து

மிங்கிலைகள் பலவியற்ற லட்டமா யோக
மென்பரிசை சிவயோக மியற்றுவோர்க்கிலையாற்
றங்குசிவயோகத்தா லாக்கமுடனழிவுந்
தானிலாப் பரமசா யுச்சியந்தா மடைவார்.

வேறு.

புத்திகொள் கிரியா யோகசா தனையைப்
புரிந்திடு பவர்களிவ் வுலகி
லெத்தனை கால மிருப்பினு மீண்டு
மிறப்பொடு பிறப்பினை யடைவார்
சத்திய மாக வறிதிநீ யிந்தத்
தனிச்சிவ யோகசா தனையை
இத்தனை யயதிற் போதிப்ப தென்றே
யிறையவ னுலமதனக் கிசைத்தான்.

இந்தநன் னிட்டை யேழுநான் காண்டி
லியம்புத லுத்தம மாகு
முந்திய வையா றுண்டினி லாசான்
மொழிகுதன் மத்திம மாகு
மந்தமி லாறு றுண்டினிற் புகற
லறைதரு கனிட்டம தாமா

னூந்துமிப் பருவங் கடந்தவர்க் கதனை
யுரைத்திடத் தகாதென வுணரே.

வேறு.

ஞான நிட்டையை நல்குநற் றேசிகன்
மான முற்றிடு மாணிட னல்லனால்
வான முற்று வளர்கயி லைப்பரன்
றுனெ னத்தினஞ் சாற்றிட லாகுமால்.

வெளிப்படை.

நிஷ்டானுபூதி சாராம்ஸத்திரட்டு
முற்றிற்று.

---

ஓம்.

# தாலாட்டு.

ஆதிபராபரத்தை யன்புடனேதாலாட்ட
சோதியமாய்நிறைந்ததூயகுருதாள் துணையே.
காதலுடனின்பக் கணபதியைக்கைதொழுது
சேதனமாய்நிறைந்ததேவினிலைகூறுகின்றேன்.

பாதியிலே வேறாகிப் பம்புபிழை யுற்றாலும்;
பேதமென்று தள்ளாமல் பேணுதற்கு வேண்டு
கின்றேன். (௩)

வேதனைகளற்றதொரு விஸ்தார மண்டபத்தில்
சாதனங்களுலுமங்கே சதுரானமேடைகளாம். (௪)

மனமென்று சொல்கின்ற மாசற்றசட்டத்தில்
தனமெனுந்தத் துவமசியைச்சதுராணியாயமைத்து

மனனஞ்செயும் யுக்திதனை மடங்காத கட்டை
யாக்கி, அநுசுருதிவாக்யத்தைத் தூயதாய்க்கடைச்
சலிட்டு. (௬)

நிதித்தியா சனந்தன்னை நேர்த்திபுள்ள பலகை
யென, பதித்ததொயம் பிரகாச பரூபத் தொட்டி
லுக்கு. (௭)

அநுபந்தம் நாலு மதற்குள்ளகால்களதாம்
அநுமைத்திரியாதி தொடக்கற்றமேல்வளையம் ()

நால்வேத சாரமென்னும் நற்பொருளே சங்கிலி
யாம், நூல்வகைபிலோர்ந்த சித்தே நுணுகுசா
கொண்டியதாம். (௯)

தகும்பிரஜ் ஞானமென்ற தனிப்பொருளே மெத்
தையதாம், அகம் ப்ரஹ்மமென்றபத மழகுள்ள
தலையணையாம். (௪0)

சச்சிதானந்தமயந் தாமாய்நிறைந்துள்ள, நிச்சய
மென்றுசொல்லும் நிஷ்டையிலே தானிருந்தார் ()
சின்மயமாய்நிறைந்த சித்ரூபத்தொட்டிலிலே
தன்மயமாய்ப்படுத்த சற்குருவேகண்வளரீர். (௪௨)

அயமாத்மா ப்ரஹ்மமென் றமருகின்றநித்திரை
யை, சுபமாகச்செய்கின்ற சொரூபரேகண்வளரீர்.

ஆறுசமாதியென்ற வானந்தநித்திரையை
மாறாதுசெய்கின்ற சற்குருவேகண்வளரீர். (௪௪)

தானாய்நிறைந்திருக்கும் சத்ரூபமானவஸ்து
மோனமேயெப்பொழுதும் முன்னாகிக்கண்வளரீர்.

இந்தஜகமறந்தெப் பொழுதுந்தானாகி
சிந்தையொழித்துநின்ற சின்மயரேகண்வளரீர். ()
பேச்சிறந்துநின்றபே ரானந்தவாரிதியில்
* வாச்சிமுதலொன்றுமற்ற வஸ்துவேகண்வளரீர்.

---

* வாசி - வாச்சியென்றாயிற்று.

பந்தமறத் துநிற்கும் பரமாநந்தசுகத்தை
தந்துநிலக்கவைத்த தன்மையரேகண்வளரீர் (கஅ)

அஜ்ஞானக்கண்மூடி யறிவாகவேயநிறைந்த
ப்ரஜ்ஞானநிஷ்டையிலே ப்ரஹ்மமேகண்வளரீர்.

அறிபாமயக்கொழித்து அத்வைதநித்திரையை
நெறியாகச்செய்கின்ற நித்தியரேகண்வளரீர்.

பசையில்மோகமறுத்து பரமாகியெப்பொழுதும்
அசையாமலேநிலைத்தவாரியரேகண்வளரீர் (உக)

சர்வமுந்தானாகி சலியாமலேநிலைத்து
சரியாய்விளங்குகின்ற காரணரேகண்வளரீர் (உஉ)

அந்தரத்தைப்போலே யாதாரமாயடைந்தார்
பந்தமறுத்தருளும் பரமரேகண்வளரீர். (உ௩)

---

ஓம்

ஆநந்தோஹம் ஆநந்தோஹம் ஆநந்தோஹம்,

மந்த்ரு

* அசலபரோஹம் அசலபரோஹம் அசலபரோஹம்.

---

* அசலம் - நிர்விகாரமும், பரம் - மேலான ப்ர
ஹ்மமும், அஹம் - நான்,

சத்குருவின்பாதமலர் தியானம்பண்ணவே
சந்ததமும் அன்னைவாணி முன்னடக்கவே. (ஆ)

ஆலடியிலேவசித்த ஆதிவஸ்துவே
அடியார்பந்தந்தீர்க்கவேண்டியவனிதன்னிலே (ஆ)

வந்துதித்தரூபந்தன்னை சொரூபாநந்தனாய்
சிந்தையிலேனான் றெளிந்தேன் சின்மயமாக (ஆ)

பிரத்யகாத்மா ப்ரஹ்மமென்ற பேதங்களிரண்டு
ம், ஏகமென்று யுக்திசொன்ன வெந்தன் குருவே.

போற்றிசெய்துவேறுருவாய்போந்தபேதத்தை
தீர்த்தெங்கும்சித்ரூபமாய் பார்த்தபிற்பாடு (ஆ)

கடல்தனிலே காற்றினாலே கணங்களாகவே,கட
லிற்தோன்றி கடல்தனிலே லயிக்குமாப்போலே ()

ஆநந்தசாகரத்தில் அவித்தையாங்காற்று
அடித்திந்தஜகத்தையெல்லாமாக்கிமறைக்கும். ()

அவித்தையென்ற வாயுவற்று வறிவுமயமாய்
அம்புதி மாத்ரமதாகி ஆத்மரூபமாய். (ஆநந்)

அருமறைகள் முதலாதி பிரணவமந்திரம்
அநேகங்களைகற்றபோதும்ஆத்மாவைக்காணார் (ஆ)

எட்டுவித யோகந்தன்னை யிஷ்டமுடனே
திட்டமாகப்பண்ணினாலுமெட்டவேமாட்டார். ()

வெகுவிசமாகவித்தை விரும்பிக்கற்றாலும்
அகம்ப்ரஹ்மமென்று மியலறியார்வீணர் (ஆ)

வன்னியை விழுங்கினாலும் வாரிதிநீரை
வற்றவேகுடித்தபோது மித்தையப்பர். (ஆநந்)

பாவனாத்திரயங்களினால் பந்தமடைந்து
பரமார்த்தசொரூபத்தைப் பார்க்கவேமாட்டார் ()

பரிசுத்தவேதசீலன் நானேயென்றும்
பவிசுரம்பவுமடைந்து பரமமூடனாய். (ஆநந்)

மோசமலைதன்னிலேறி மோகலோகத்தில்
போகமுண்டு போகவருந் தாகத்தினாலே. (ஆநந்)

இகபரத்துலோகந்தன்னில் இச்சையைவைத்து
எண்ணறியாக்கோடிஜன்மம் எடுத்துமறியார் (ஆ)

ஆனவித்தையாரறிவாரென்றுசந்தேகித்தால்
ஆரியனருளைப்பெற்ற பேர்களறிவார். ஆநந்)

மதியில்வெகுபுக்தியற்ற மந்தனானாலும்
மடமையெல்லாநீங்கிநல்ல திடஜ்ஞானமுண்டாம்.

இந்தவகைக்கொரு யுக்தி சொல்லக்கேளும்
சந்ததமும்நினைத்தபுழு தும்பியானாற்போல் (ஆ)

ஐந்துவிதவிருத்தியா லநுஷ்டிதமான
ஆதிகாரணகுருவை யங்யமென்னுமல். (ஆநந்)
எப்பொழுதுஞ்சிந்தைசெய்தாலிந்தமனதில்
அந்தரூபமெப்படியோ யப்படியாவார். (ஆநந்)
அஸ்திபாதிப்ரியரூப மானவஸ்துவை [னே,
சைத்யம்வெண்மை நிகழ்ச்சிபோலேதவறுமற்று
சிந்தையில் வணக்கத்துடன் வந்தனஞ் செய்தால்,
எந்தபொருள் கண்டபோது மேகமாய்க்காண்பார்.
சந்ததமு மிந்தப்படியாகச்சிந்தித்து
தத்பதந்தொம்ப தந்தன்னை தானேயிழந்து. (ஆந)
தேசகாலவஸ்துபரிச் சேதமில்லாமல்
சிவாநந்தரூபமாகச் சிந்தனைசெய்தால் (ஆநந்)
பிறப்பிறப்பென்றுமற்று மன்னியேகனாய்
சிறப்புடைய ப்ரஹ்மந் தானாய்ச்சேர்ந்து. (ஆநந்)
சிதாகாசவடிவரான சின்மயாநந்தர்
சதாசொரூபாநந்த சத்தரூபராம். (ஆநந்)

முற்றும்.

---

ஓம் தத் சத்.

# திருப்போரூர்ச்

# சந்நிதிமுறை.



## குறுங்கழி நெடில் விருத்தம்.

அருட்கட றதும்பிக் கவுட்செவிச் சார
  லருவிபாய்ந் தெழிறரு மசலம்
விருப்புற மருப்பிற் கடகமொன் றெடுத்து
  வீறுகிம் புரியெனத் தரிப்போய்
சுருப்பினந் தொடருங் கதுப்பிதுர் மயக்கிற்
  றளைந்துழு தெனை யினி யளிப்பாய்
பொருப்பனபுயத்தோய் மயிற் பரியுகைத்தோய்
  போரிவா ழாறுமா முகனே. (க)

அறிவதன் னினைவிற் கலந்துறு போதி
  லம்பர முயிர்சக முளவாம்
பிறிவிலவ் வறிவந் நினை வினை யகன்றுற்
  பேதாபே தங்களொன் றின்றி
நெறியுறத் தானே தன்னிடத் திருக்கு
  நிச்சய மென்றெனக் கிசைத்தான்
பொறிமறு மார்பன் மருகவே ளெனையாள்
  போரிவா ழாறுமா முகனே. (உ)

நினைவறி வெனவிவ் விரண்டினை விரித்து
நிகழ்த்துறுஞ் சுருதியீண் டிவற்றி
னினைவிரண்டாகும் பரனினை வெனவு
மிலவுறு முயிர்நினை வெனவும்
புனைபர நினைவு சகமுயிர் நினைவு
புரிந்ததைப் பிடிக்குமென் றிசைத்தான்
புனையரும் பாரஞ் சாரிதரு நெய்தற்
போரிவா ழாறுமா முகனே (ரு)

பரனது முத்திற் குலகுபொய் சீவன்
படிற்றுளக் கிறுக்கது மெய்ம்மை
திரமுறு சாட்சி தாமெனச் சீவன்
றெரிந்திடிற் பரன்மன மிவற்காம்
விரவிய சகமப் போது பொய் யாகி
விளங்குறு மென்றெனக் கிசைத்தான்
புரமெரி செய்தோ னுவந்துபெற் றெடுத்த
போரிவா ழாறுமா முகனே. (சு)

அறிவினை நோக்கி லுயிர்வய மாகு
மகமனஞ் சகத்தையவ் வுயிர்தான்
பிறிபட நோக்கின் மனத்தினின் வயமாம்
பிறப்புமீ திதன்வயப் படாது

பொறியுறு மறிவின் மிகப்பரி சிக்கி
னினைப்பருங் கதியுமீ தென்றான்
பொறிமயி லேறுஞ் சேவக னெனையள்
போரிவா ழாறுமா முகனே. (ரு)

ஏதொரு நினைவிங் கெழுமது மனமீ
தெனதென வருமிதன் மூலந்
தீதறு மூல வகங்கர மீதியா
னென்றெழுஞ் செப்புமிங் கிவைக்கு
மூதிரு ளவித்தை மூலமீ தகன்றான்
மொய்யறி வெனவெனக் கிசைத்தான்
போதக மார்க்கும் புகன்றமெய்க் குரவன்
போரிவா ழாறுமா முகனே. (சு)

சச்சிதா நந்த மெனும்பெயர் மூன்றிற்
றழுவுமா வரணமூன் றிவைதா
நிச்சய வறிவாற் சமாதிஞா னத்தா
னிகழ்வுறு சகசஞா னத்தா
லச்சமின் றகலு மிவற்றினை யறியென்
றருட்கட னிறைத்தெனை யளித்தான்
பொய்ச்சழக் ககன்ற மனத்தினர் நினைக்கும்
போரிவா ழாறுமா முகனே. (எ)

சுருதியின் றுணிவா னிவைவுகொண் டுலகந்
துச்சமென் றுணர்தனிச் சயமாங்
கருதுற வினைவை யடக்கிஇவ் வுலகங்
கானலென் றுணர்ந்திடல் சமாதி
யிருவகை யாய்முன் னுரைத்தவை யின்றி
யிலங்கறி வுருவமா யிருத்தல்
பொருவறு சகச ஞானமென் றிசைத்தான்
போரிவா ழாறுமா முகனே (அ)

நிச்சய ஞானஞ் சமாதிஞா னங்க
ணிராசையார் மனத்தினிற் கலங்கா
தெச்சமென் றிருக்கு மாசையார் மனத்தி
லிரண்டுஞா னங்களுங் கலங்கு
நச்சுதல் வெகுளி யின்றிய சகச
ஞானிக ணசையுளர் போலப்
பொய்ச்சகத் துறினுங் கலங்குறு ரென்முன்
போரிவா ழாறுமா முகனே. (கூ)

சித்தொரு நான்கிற் பிரமங்கூடத்தன்
செப்புமா யாரகி தங்கண்
மத்தமி லீச னுயிர்கடா மாயா
கதிதங்கள் வழுத்துமிவ் வீசன்

சத்தெனுந் தன்னை மறப்பிலா மையினாற்
றருகதி தேடிலன் சீவன்
பொய்த்தலில் வீடு தேடுமென் றிசைத்தான்
போரிவா ழாறுமா முகனே. (௧0)

ஒருரு நாம மியானென தசுத்த
முயர்ந்துள சுத்தவா தனேக
ளாதிய திரோத மனுக்கிரகித்தா
லாக்கைவாக் கியக்கவா தனேக
ளோதமில் காட்சி காண்பவ னென்ற
விவற்றுளோர் வகுப்பினுன் மனத்தின்
போதமி னினைவைப் பகுத்தடக் கென்றான்
போரிவா ழாறுமா முகனே. (௧௧)

கயிலைவா ழரசு தந்தகற் பகமக்
கனவர சுறைகொடிக் கனிநா
லியல்புறு கற்புக் கன்னிமா ரிருவ
ரிருமருங் குறைவட மேரு
வயிலுடன் மயிலுங் கோழியு மாடு
மழகுடன் படைத்தமெய்க் கடவுள்
புயலினஞ் சுரந்து பொழிதரு நீதிப்
போரிவா ழாறுமா முகனே. (௧௨)

தடவரை. ப் பிறந்த ° தியராச் சென்று
தண்கடற் பட முடி மீது
சுடர்விரி யுதய கதிர்மணி விளக்குஞ்
சுந்தரப் போரிவே லிறைபே
மடமையின் றடியே னுனதரு ளமிர்த
வாரியின் மூழ்கிட நினையாய்
குடமுனி சிவந்த சடைமுடி யிவர்ந்த
குரவணி சரணவா ரிசனே. (௧௫)

## நேரிசை வெண்பா.

அன்ன மளிக்குமூ ரண்டினரைக் காக்குமூர்
சொன்ன மழைபோற் சொரியுமூ-ருன்னினர்க்குந்
தீதுபிணி தீர்க்குமூர் செவ்வே ளிருக்குமூ
ரோது திருப்போரு ரெம்மூர்.

முற்றுப்பெற்றது.



## சந்நியாசிகளின்

# பத்து நாமங்கள்.



ஈஸ்வரர், விஷ்ணு. பிரஹ்மா, வசிட்டர், சக்தி, (சக்தி=வசிட்டர் குமாரர்) பராசரர், வியாசர், சுகர், கௌடபாதர், கோவிந்தபாதர், சங்கரபகவற்பாதர் என்பவர் ஆசிரியர்.

தீர்த்தம், ஆசிரமம், வனம், ஆரண்யம், கிரி, பர்வதம், சாகரம், சரஸ்வதீ, பாரதீ, புரீ என்பன பத்து நாமங்களாம்

தத்துவமசியாதி இலக்கணம் வாய்ந்த திரிவேணி சங்கமத்தின் கண்ணே, தத்துவார்த்தனையால் ஸ்நானஞ் செய்தல், தீர்த்தமெனச்செப்பப்பெறும்.

ஆழ்ந்து மிகுந்து பரந்த ஆசிரமத்தின் கண்ணே, ஆசாபாசம் அனைத்தும் விட்டிருப்பதோடு, விருக்ஷ நீழலை விடாதிருத்தலே, ஆசிரயமென அறையப் படும்.

தேவ இருஷிகள் நீங்காதுநெருங்கிய நிர்மல ஸ்தானமாகிய வனத்தின்கண்ணே வாசஞ்செய்வதுடன், ஆசைக் கட்டை அடியோடறுத் திருத்தலே வனமென வழங்கப்பெறும்.

ஆநந்த நந்தனவநமாய் ஆரண்யத்தின் கண்ணே, இவ்விசுவம் யாவற்றையும் விடுத்துச்சென்று நிரந்தரம் நிலைபெற்றிருத்தல், ஆரண்யமென அறையப்பெறும்.

கம்பீரமாகிய அசலப் பிரஹ்மத்தை யகமெனச் சாக்ஷாத்கரிக்க வேண்டுமென்று உத்தேசித்து, ஸ்ரீமத்பகவத் கீதாமிருதத்தைப் பாராயணஞ் செய்வதின்கண்ணே தற்பரனாய், உயர்ந்த கிரியின் உந்நதஸ்தானத்தே வாசஞ்செய்தல், கிரியெனக் கீர்த்திக்கப்பெறும்.

சாரா சாரங்களைப்பிரித்தறிந்து, மகா மாட்சிமை தங்கிய அகண்டப் பிரஹ்மாகார விருத்தியைத்தரித்து, பருவதத்தடியில் பரமாநந்தத்தோடு வசித்தல், பர்வதமெனப்பகரப்பெறும்

கம்பீரமாகிய ப்ரஹ்மாநந்தசாகரத்தில் நிலைபெற்றிருக்கும் ஞான இரத்தினத்தை நன்கு கவர்ந்து,

சாஸ்திர மரியாதையைக் கடவாது பற்றியிருத்தல், சரகரமெனச் சாற்றப்பெறும்.

அசாரமாய சம்சார சாகரத்தின்கண்ணே, ஒப்பற்ற ஒரு பரமேஸ்வரரைத் தனது வடிவமாய் நன்கு தியானித்துச் சுரஞானத்தோடு நித்தியம் இரமித்திருத்தல், சரஸ்வதியெனச் சாற்றப்பெறும்.

வித்தையின் பாரத்தால் மிகவும் நிறைந்து, சர்வ பாரத்தையும் தணரவிடுத்து, துக்க பாரத்தை யறியாதிருத்தல், பாரதீயெனப் பகரப் பெறும்.

ஞானதத்துவத்தாற் சம்பூரணத்தை அடைந்து, பூரணதத்துவ பதத்தில் நிலைபெற்று, பரப்பிரஹ்மத்தின் கண்ணே பரமானந்தமாய் நிரந்தரம் இரமித்திருத்தல், புரீயெனப்புகலப்படும்.

முற்றுப்பெற்றது.



# மடமும் வேதமும்.

---

கிழக்குத்திசை, கோவர்த்தனமடம், இருக்கு வேதம், பிரஞ்ஞானம் பிரஹ்மம் மகாவாக்கியம்,வனமும், ஆரண்யமும் நாமங்களாம், அஸ்டார்ஞ, காசிப கோத்திரம், போகவார சம்பிரதாயம், பிரகாச பிரஹ்மசாரி, ஸ்ரீ பதுமபாதர் ஆசிரியர், புருஷோத்தம க்ஷேத்திரம், பூர்வ ஆம்நாயம், மகோகதி தீர்த்தம், வக்கிர துண்டர் கணேசர், ஜகந்நாததேவதை, மகாதேவர் லோககாதர், தேவி விமலாம்பிகை, பைரவர் காலபைரவர்.

தெற்குத்திசை, சிருங்கேரிமடம், யஜுர் வேதம், அகம்பிரஹ்மாஸ்மி மகாவாக்கியம், புரீ, சரஸ்வதி, பாரதி என்பன நாமங்கள், அஷ்டார்ஞ, பார்க்கவ கோத்திரம், பூரிவாரசம்பிரதாயம், சைதன்ய பிரஹ்மசாரி, ஸ்ரீ சுரேஸ்வரர் ஆசிரியர், இராமேஸ்வர க்ஷேத்திரம், தக்ஷிணம்நாயம், துங்கபத்திரை தீர்த்தம், கணேசர் விக்நராஜர், தேவதை ஆதிவராகம், மகாதேவர் வித்யாசங்கரர், (மல்லிகேஸ்வரர்) (இருஷ்ய சிருங்கர்) தேவி சாரதாம்பிகை, (தேவி காமாக்ஷி) பைரவர் உன்மத்த பைரவர்.

மேற்குத்திசை, சாரதாமடம், சாமவேதம், தத்துவமசி மகாவாக்கியம், தீர்த்தம், ஆசிரமம் என்பன நாமங்கள், அஷ்டார்ணு, அகஸ்திய கோத்திரம், கீடவார சம்பிரதாயம், ஸ்வரூப பிரஹ்மசாரி, அஸ்தாமலகர் ஆசிரியர், துவாராவதி க்ஷேத்திரம், பச்சிம ஆம்நாயம், கோமதி (கோமுகி) தீர்த்தம், கிருஷ்ணபிங்காக்ஷர் கணேசர், வாசுதேவர் தேவதை, மகாதேவர் சித்தேஸ்வரர், தேவி பத்திரகாளி, பைரவர் படுக பைரவர்.

வடக்குத்திசை, ஜோதிஷ்மடம், அதர்வண வேதம், அயமாத்மாப் பிரஹ்மம், மகாவாக்கியம், கிரி, (பர்வதம்,) சாகரம் என்பன நாமங்களாம், அஷ்டார்ணு, ஆத்திரேய கோத்திரம், ஆநந்தவார சம்பிரதாயம், ஆநந்தப் பிரஹ்மசாரி, தோடகர் ஆசிரியர், பதரிகாச்சிரமம் க்ஷேத்திரம், உத்தர ஆம்நாயம், அலகநந்தை தீர்த்தம், கஜாநநர் கணேசர், நாராயணதேவதை, மகாதேவர் கேதார நாதர், புண்ணியகிரி தேவி, பைரவர் ஆநந்தபைரவர்.

முற்றுப்பெற்றது.

---

ஓம்

தத்ஸத்.

# ஸ்ரீ சங்கரபகவத்பாதாசாரியர்

# அஷ்டோத்தரசத நாமாவளி.

---

ஸ்ரீ சங்கராசார்யவர்யாய நம: க
,, பிரஹ்மாநந்தப்ரதாயகாய நம:
,, அஜ்ஞானதிமிராதித்யாய நம:
,, ஸுஜ்ஞானாம்புதிசந்த்ரமஸே நம:
,, வர்ணாச்ரமப்ரதிஷ்டாத்ரே நம: ரு
,, முக்திப்ரதாயகாய நம:
,, சிஷ்யோபதேசநிரதாய நம:
,, பக்தாபீஷ்டப்ரதாயகாய நம:
,, ஸூக்ஷ்மதத்வரஹஸ்யஜ்ஞாய நம:
,, கார்யாகார்யப்ரபோதகாய நம: ௧௦
,, ஜ்ஞானமுத்ராஞ்சிதகராய நம:
,, சிஷ்யஹ்ருத்தாபஹாரகாய நம:
,, பாரிவ்ராஜகாச்ரமோத்தர்த்ரே நம:
,, சர்வதந்த்ரசுவதந்த்ரதியே நம:
,, அத்வைதஸ்தாபனாசார்யாய நம: கரு
,, சாக்ஷாத்சங்கரரூபப்ருதே நம:
,, ஷண்மதஸ்தாபனாசார்யாய நம:

ஸ்ரீ த்ரயீமார்கப்ரகாசகாய நம:
,, வேதவேதாந்ததத்வஜ்ஞாய நம:
,, துர்வாதிமதகண்டநாய நம: ௨௦
,, வைராக்யநிரதாய நம:
,, சாந்தாய நம:
,, ஸம்ஸாரார்ணவதாரகாய நம:
,, ப்ரஸந்நவதநாம்போஜாய நம:
,, பரமார்த்தப்ரகாசகாய நம: ௨௫
,, புராணஸ்ம்ருதிஸாரஜ்ஞாய நம:
,, நித்யத்ருப்தாய நம:
,, மஹதே நம:
,, முநயே நம:
,, நித்யாநந்தாய நம: ௩௦
,, நிராதங்காய நம:
,, நிஸ்ஸங்காய நம:
,, நிர்மலாத்மகாய நம:
,, நிர்மமாய நம:
,, நிரஹங்காராய நம: ௩௫
,, விச்வவந்த்யபதாம்புஜாய நம:
,, ஸத்யவ்ரதாய நம:
,, ஸத்பாவாய நம:

ஸ்ரீ ஸங்க்யாதீதகுணோஜ்வலாய நம:
,, அநகாய நம:
,, ஸாரஹ்ருதயாய நம:
,, ஸுதியே நம:
,, ஸாரஸ்வதப்ரதாய நம:
,, ஸத்யாத்மனே நம:
,, புண்யசீலாய நம:
,, ஸாங்க்யயோகவிசக்ஷணாய நம:
,, தபோராசயே நம:
,, மஹாதேஜஸே நம:
,, குணத்ரயவிபாகவிதே நம:
,, கலிக்நாய நம:
,, காலகர்மஜ்ஞாய நம:
,, தமோகுணநிவாரகாய நம:
,, பகவதே நம:
,, பாரதீஜேத்ரே நம:
,, சாரதாஹ்வானபண்டிதாய நம:
,, தர்மாதர்மவிபாவஜ்ஞாய நம:
,, லக்ஷ்யாலக்ஷ்யபேதப்ரதர்சகாய நம:
,, நாதபிந்துகலாபிஜ்ஞாய நம:
,, யோகிஹ்ருத்பத்மபாஸ்கராய நம:

ஸ்ரீ அதீந்திரியஜ்ஞானநிதயே நம: ௯௦
,, நித்யாநித்யவிவேகவதே நம:
,, சிதாநந்தாய நம:
,, சின்மயாத்மனே நம:
,, பரகாயப்ரவேசக்ருதே நம:
,, அமானுஷசரித்ராட்யாய நம: ௯௫
,, க்ஷேமதாயினே நம:
,, க்ஷமாகராய நம:
,, பவ்யாய நம:
,, பத்ரப்ரதாய நம:
,, பூரிமஹிம்னே நம: ௱௦
,, விச்வரஞ்சகாய நம:
,, ஸ்வப்ரகாசாய நம:
,, ஸதாதாரய நம:
,, விச்வபந்தவே நம:
,, சுபோதயாய நம: ௱௫
,, விசாலகீர்த்தயே நம:
,, வாகீசாய நம:
,, ஸர்வலோகஹிதோத்ஸுகாய நம:
,, கைலாஸயாத்ரா ஸம்ப்ராப்த சந்த்ர
மௌலிப்ர பூஜகாய நம:

ஸ்ரீ காஞ்ச்யாம் ஸ்ரீசக்ர ராஜாக்ய யந்த்ர
ஸ்தாபன தீக்ஷிதாய நம: ௮௦
,, ஸ்ரீ சக்ராத்மக தாடங்க தோஷிதாம்பா
மனோரதாய நம:
,, ஸ்ரீ ப்ரஹ்மஸூத்ரோபநிஷத் பாஷ்
யாதி க்ரந்தகல்பகாய நம:
,, சதுர்திக்சதுராம்நாய ப்ரதிஷ்
டாத்ரே நம:
,, மஹாமதயே நம:
,, த்விஸப்ததி மதோச்சேத்ரே நம: ௮௫
,, ஸர்வதிக்விஜயப்ரபவே நம:
,, காஷாயவஸனோபேதாய நம:
,, பஸ்மோத்தூளிதவிக்ரஹாய நம:
,, ஞானாத்ம கைகதண்டாய நம:
,, கமண்டலு லஸத்கராய நம: ௯௦
,, குருபூமண்டலாசார்யாய நம:
,, பகவத்பாதஸம்ஞகாய நம:
,, வ்யாஸஸந்தர்சன ப்ரீதாய நம:
,, ரிஷ்யசிருங்க புரேச்வராய நம:
,, ஸௌந்தர்ய லஹரீமுக்யபஹு-
ஸ்தோத்ர விதாய நம: ௯௫

ஸ்ரீ சதுஷ்ஷஷ்டிகளாபிஜ்ஞாய நமஃ
" ப்ரஹ்மராக்ஷஸ தோஷகாய நமஃ
" ஸ்ரீமன்மண்டனமிச்ராக்ய ஸ்வயம்பு
ஜயசந்நுதாய நமஃ
" தோடகாசார்ய ஸம்பூஜ்யாய நமஃ
ஸ்ரீ பத்மபாதார்ச்சிதாங்க்ரிகாய நமஃ க௦௦
" ஹஸ்தாமலகயோகீந்த்ர பிரஹ்ம
ஜ்ஞானப்ரதாயகாய நமஃ
" சுரேச்வராக்ய ஸச்சிஷ்ய ஸ்ந்யாஸாச்
ரம தாயகாய நமஃ
" ந்ருஸிம்ஹபக்த ஸத்ரத்நகர்பஹேரம்ப
பூஜகாய நமஃ
" வ்யாக்யான ஸிம்ஹாஸநாதீசாய நமஃ
" ஜகத்பூஜ்யாய நமஃ க௦ரு
" ஜகத்குரவே நமஃ
" ஸ்ரீமத் சங்கராசார்யஸர்வலோக
குரவே நமஃ
" பராய நமஃ க௦அ

இதி ஸ்ரீமத் க்ருஷ்ணேந்த்ரவிரசிதா ஸ்ரீ சங்கராசார்யாஷ்டோத்தர சதநாமாவலீ ஸமாப்தா.

ஓம் தத் சத்.

# ஸ்ரீ வித்தியாரண்யாஷ்டோத்தர சதநாமாவலி.

ஸ்ரீ வித்தியாரண்ய மஹாயோகிநே நம: க
,, மஹாவித்தியாப்ரகாசகாய நம:
,, ஸ்ரீவித்யாநகரோத்தர்த்ரே நம:
,, வித்யாரத்நமஹோததே நம:
,, ராமாயணமஹாஸப்தகோடிமந்தர பிர
காசகாய நம: ரு
,, ஸ்ரீ தேவீகருணாபூர்ணாய நம:
,, பரிபூர்ணமநோரதாய நம:
,, விருபாக்ஷமஹாக்ஷேத்ர ஸ்வர்ண
வ்ருஷ்டி ப்ரகல்பகாய நம:
,, வேதத்ரயோல்லஸத்பாஷ்ய கர்த்
தாய நம:
,, தத்வார்த்தகோவிதாய நம: க0
,, பகவத்பாதநிர்ணீத ஸித்தாந்தஸ்தாப
னப்ரபவே நம:
,, வர்ணாச்ரமவ்யவஸ்தாதாயை நம:
,, நிகமாகமஸாரவிதே நம:

ஸ்ரீ ஸ்ரீமத்கர்ணாடராஜ்யஸ்ரீசம்பத் ஸிம்ஹாஸநப்ரதாய நமஃ
,, ஸ்ரீமத்புக்கமஹீபாலராஜ்யபட்டாபிஷேக க்ருதே நமஃ கரு
,, ஆசார்யக்ருதபாஷ்யாதிக்கிரந்த வ்ருத்தி ப்ரகல்பகாய நமஃ
,, ஸகலோபநிஷத்பாஷ்யதீபிகாதி ப்ரகாசக்ருதே நமஃ
,, ஸர்வசாஸ்த்ரார்த்த தத்வஜ்ஞாய நமஃ
,, மந்த்ரசாஸ்த்ராப்திமந்தராய நமஃ
,, வித்வந்மணிசிரச்லாக்யபஹுக்ரந்த விதாயகாய நமஃ உO
,, ஸாரஸ்வதஸமுத்தர்த்தாய நமஃ
,, ஸாராஸாரவிசக்ஷணாய நமஃ
,, ச்ரௌத ஸ்மார்த்த ஸதாசார ஸம்ஸ்தாபந துரந்தராய நமஃ
,, வேதசாஸ்த்ர பஹிர்பூத துர்மதாம்போதி சோஷகாய நமஃ
,, துர்வாதிகர்வ தாவாக்நயே நமஃ உக
,, ப்ரதிபக்ஷ கேஸரிணே நமஃ

ஸ்ரீ யசோஜைவார்ருகஜ்யோத்ஸ்நாபிர
காசிததிகந்தராய நம:
,, அஷ்டாங்கயோகநிஷ்டாதாயை நம:
,, ஸாங்க்யயோக விசாரதாயை நம:
,, ராஜாதிராஜ ஸங்தோஹ பூஜ்யமான
பதாம்புஜாய நம: ௩௦
,, மஹாவைபவஸம்பந்நாய நம:
,, ஔதார்ய ஸ்ரீனிவாஸபுவே நம:
,, த்ரியங்காங்தோளிகாமுக்யஸமஸ்தபிரு
தாஞ்சிதாய நம:
,, மஹாபோகினே நம:
,, மஹாயோகினே நம: ௩௫
,, வைராக்கியபிரதமாச்ரயாய நம:
,, ஸ்ரீமாந்பரமஹம்ஸாதிஸத்குரவே நம:
,, கருணாநிதயே நம:
,, தப: பிரபாவநிர்தூத துர்வாரகலிவைப
வாய நம:
,, நிரந்தரசிவத்யானசோஷிதாபலகல்ம
ஷாய நம: ௪௦
,, நிர்ஜிதாராதிஷட்வர்காய நம:
,, தாரித்ரோந்மூலநக்ஷமாய நம:

ஶ்ரீ ஜிதேந்த்ரியாய நமஃ
,, ஸத்பவாநிதே நமஃ
,, ஸத்யஸந்தாய நமஃ ௯௫
,, த்ருடவிரதாய நமஃ
,, சாந்தாத்மாய நமஃ
,, ஸுசரித்ராட்யாய நமஃ
,, ஸர்வபூதஹிதோத்ஸுகாய நமஃ
,, க்ருதக்ருத்யாய நமஃ ௱ௐ
,, தர்மஶீலாய நமஃ
,, தாந்தாய நமஃ
,, லோபவிவர்ஜிதாய நமஃ
,, மஹாபுத்யாய நமஃ
,, மஹாவீர்யாய நமஃ ௱௫
,, மஹாதேஜாய நமஃ
,, மஹாமநாய நமஃ
,, தபோராசயே நமஃ
,, ஜ்ஞானராசயே நமஃ
,, கல்யாணகுணவாரிதயே நமஃ ௲௦
,, நீதிசாஸ்த்ரஸமுத்தர்த்தாய நமஃ
,, ப்ராஜ்ஞமௌலிசிரோமணயே நமஃ
,, சுத்தஸத்வமயாய நமஃ

ஸ்ரீ தீராய நம:
,, தேசகாலவிபாகவிதே நம: ௬௫
,, அதீந்த்ரியாய நம:
,, ஜ்ஞானநிதயே நம:
,, பூதபாவ்யர்த்தகோவிதாய நம:
,, குணத்ரயவிபாகஜ்ஞாய நம:
,, ஸந்யாஸாச்ரமதீக்ஷிதாய நம: ௭0
,, ஜ்ஞாநாத்மைககதண்டாட்யாய நம:
,, கௌஸும்பவஸநோஜ்வலாய நம:
,, ருத்ராக்ஷமாலிகாதாரிணே நம:
,, பஸ்மோத்தூளிததேஹாய நம:
,, ஹஸ்தமாலாலஸத்தஸ்தாய நம: ௭௫
,, த்ரிபுண்ட்ராங்கிதமஸ்தகாய நம:
,, தராசுரதபஸ்ஸம்பத்பலாய நம:
,, சுபமஹோதயாய நம:
,, சந்த்ரமௌலீச்வர ஸ்ரீமத்பாதபத்மார்ச்ச நோத்ஸுகாய நம:
,, ஸ்ரீமத்சங்கரயோகீந்த்ரசரண ஸக்த மாநஸாய நம: ௮0
,, ரத்நகர்ப்பகணேசானப்ரபூஜன பராயணாய நம:

ஸ்ரீ சாரதாம்பா திவ்யபீடஸபர்யாதத்பராச
யாய நம:
,, அவ்யாஜகருணாமூர்த்திகே நம:
,, பிரஜ்ஞாநிர்ஜிதகீஷ்பதயே நம:
,, ஸுஜ்ஞானஸத்க்ருதாய நம: ௮௫
,, ஜகல்லோகாநந்தவிதாயகாய நம:
,, வாணீ விலாஸபவநாய நம:
,, ப்ரஹ்மாநந்தைகலோலுபாய நம:
,, நிர்மலாய நம:
,, நிரஹங்காராய நம: ௯௦
,, நிராலஸ்யாய நம:
,, நிராகுலாய நம:
,, நிச்சிந்தாய நம:
,, நித்யஸந்துஷ்டாய நம:
,, நியதாத்மாய நம: ௯௫
,, நிராமயாய நம:
,, குருபூமண்டலாசார்யாய நம:
,, குருபீடப்ரதிஷ்டிதாய நம:
,, ஸர்வதந்த்ரஸ்வதந்த்ராய நம:
,, மந்த்ரயந்த்ரவிசக்ஷணாய நம: ௧௦௦
,, சிஷ்டேஷ்டபலதாதாய நம:

ஸ்ரீ துஷ்டநிக்ரஹதீக்ஷிதாய நம:
,, ப்ரதிஜ்ஞார்த்த நிர்வோடாய நம:
,, நிக்ரஹாநுக்ரஹப்ரபவே நம:
,, ஜகத்பூஜ்யாய நம: ௧0௫
,, ஸதாநந்தாய நம:
,, ஸாக்ஷாத்சங்கரரூபப்ருதே நம:
,, மஹாலக்ஷ்மீமஹாமந்த்ரபுரச சர்யா பராயணாய நம: ௧0௮



வித்யாரண்ய மஹாயோகிநாம் நாமஷ்டோத்தரம் சதம், ய: படேத்ஸத்தம் ஸம்பத்ஸாரஸ்வதஸித்திர்பவேத்.

ஸ்ரீ க்ருஷ்ணேந்த்ரவிரசித

ஸ்ரீ வித்தியாரண்யாஷ்டோத்தர

சதநாமாவலி

சம்பூர்ணம்.



மஹான்

# கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகளின்

சீடர்



## E. சமரபுரி முதலியார்.

SRI BHARATHI PRESS, CHOOLAI. MADRAS

ஓம்.

ஸத் குரவே நம:

# ஞானவாதக ரொழுக்கம்

## பிரஹ்மாணுவிளக்கம்



ஏ. சமரபுரிமுதலியார் அவர்கள்

இயற்றிய

ஞான அப்பியாச முறைகள்.



S. தேவராஜ முதலியாரால்

சென்னை

ஸ்ரீ வேதவல்லி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.



ஓம்

# ஞானசாதக ரொழுக்கம்.

அநாதிமலத்தா லழுங்குமாருயிர்
அரண்டும் புரண்டு மிரண்டேநாள் அதற்சேனிந்த
வாடலும்பாடலும், அதிலுமொருநாள் (பிறப்பு)
ஆயிற்று மற்றொருநாள் (இறப்பு) சாவெனன மதி
அரியரர்தம்முள் அபேதமென்றறி
அவாவற்றிருத்தலே அந்தக்கரணசுத்தி
அந்தக்கரணசுத்தியே அறிவையறிதற்சாதனம்
அடங்காமனமே அரும்பிணியாகும்
அடங்கும் மனமே அல்ல லகற்றும்
அகத்தின்குறி முகத்திற்காட்டும்
அண்டத்தினுளவெலாம் பிண்டத்தினுமுள
அல்லும் பகலும் அறிவாயிரு
அண்ணலைக் காணி னவ னிவ னாமே
அணுவையறிதலே ஆநந்தமயமாம்
அசைவற்றிருத்தலே அமலயோகம்
அருட்செல்வத்தை அடைவது நன்று

அறிஞர்கொள்வது அகமுகப்பூசையே

அறிவேசிவமென்பது அறிஞர்கொள்கை

அகம்பிரஹ்மாஸ்மி. அயமாத்மா ப்ரஹ்மம்.

அஜபாமந்திரம் அநுஷ்டானதந்திரம்

அமுதமிறக்கி அன்புடன்புசி

அண்டமென்பது குண்டலிமுனையே

அறிவாயிருத்தலே குறியற்றசாதனம்

அவனருளாலே அவன்றாள்வணங்கு

அந்தமிலாசமுத்திக் குபாயமேதென்றறி

அஞ்சக்கரத்தை நெஞ்சுணிறுத்து

அஞ்ஞானஞ் சுருங்க லதுவேமுத்தி

அந்திக்குமந்திர மறிந்தபின் தந்தைக்குமுன் மகன்
தானே பிறப்பான்

அஹிம்சைபரம தருமம் அன்புமலரா
லருச்சனைசெய்

அஞ்சக்கரத்தி னரும்பொருடன்னின்
நெஞ்சக்கருத்தினிலையறி

ஆசையறுதலே ஆநந்தநிலை

ஆசையற்றவிடமே ஆசாரமானவிடம்

ஆலயமேகாயம் அறிவே சிவலிங்கம்

ஆமைபோலைந்தடக்கல் அமலயோகமாம்

ஆசனமூர்த்தங்களற வகண்டாகாரபூசைசெய்
ஆதியுமந்தமுமில்லா அரும்பொருள்
சோதியை நானெனச் சொல்லுவான் சாது
ஆசையே துக்கம் நிராசையே தெய்வம்
இந்திரியநிக்கிரக மிதமெலாந்தரும்
இருவினையில்லெனி லில்லைபிறப்பே
இந்திரியம்விட்டோ னீசனைக்காணுன்
ஈறிலாதவன் ஈசனொருவனே
ஈமென்று கேட்டதுவு மென்னுள்ளே நின்றதுவும்
ஓமென்று சொன்னதுவு முற்றுமறி
உண்முகாட்ட முண்மைவிளங்கும்
உன்னிலேஉன்னி யுத்தமனைக்காண்
உன்னிலுன்னுமென்ற வுறுதிமொழியொன்றைத்
தன்னிலுன்னி நன்னெறியைச்சார்
உழைப்பின்வாரா வுறுதிகளுளவோ
உற்றுற்றுப் பார்க்க வொளிதருமாநந்தமதை
நெற்றிக்கு நேர்கண்டு நீ நிலைத்திரு
எங்கும் பிரஹ்மம் பொங்கிநிற்கும் [க் தம்
ஓமொழிப் பொருளை நோக்கினுணருணராமை போர
ஓங்காரமாய் நின்றவொருவத்துவிலே
பாங்காய் முளைத்த பயனையறி

கடவுள்சக்தியே கற்பிதவுலகம்
கரண வொழிவைக் காண்டல் நன்று
கன்மநெறியைக் கட்டாயஞ் செய்தொழி
கற்றதனாற்றொல்வினை கட்டறுகாண்
கர்ம்மிகள் நடுநிலைக் காணார்தம்முள்
கழப்பின்வாராக் கையறவுளவோ
கடலிலொளித்திருந்த கனலெழுந்து வந்தாற்போல்
உடலிலொளித்திருந்தசிவமொளிசெயக்காண்
கருணைத்திருவடியிற் கலந்துநில் [தே
காலசாதத்தைத்தள்ளாதேகாட்டுச்சாவடியிற்றங்கா
காமக்கடல் கடக்க வோபக்கனலுள்ளேபார்
இட்டவழி யெட்டிப்பிடிகொஞ்சமாயினுங்கூட்டிமு
குண்டலி யெழுப்பின் விண்டெழுஞ் சோதி [டி
குலவியசிவபதங் குறுகாதவமே
கெடுவதொழித்து கேள்விமுயல்
சங்கரனன் பர்மாணைசற்று நண்ணார்பாதகம்
சகலகேவலங்களைச் சாராதகற்றலே நடுநிலை
சமதிருஷ்டியே சச்சிதானந்தமாம்
சங்கு (இடம் சந்திரன்) சக்கிரமே (வலம்-சூரியன்)
சங்கரனைக்காட்டும்
சத்தத்தினுள்ளே சித்தத்தைக்கட்டு

சங்கற்பவிரிவேசகம். சத்தத்தினுள்ளே
  சதாசிவங்காண்
சத்தம்பிறந்தவிடத்தே சகலகலையும்பிறக்கும்
சத்தப்பிறந்தவிடந் தன்மயமாய்நின்றவிடஞ்
  சித்தம் பிறந்தவிடம் தேர்ந்தறிகாண்
சாதனசதுஷ்டய மடையின் சம்பன்னனவன்
சாதிசங்கற்பந் தனைவிடற் சமாதி
சாத்திரங்கற்றார் வீடுற்றார்சாற்று
சாதியிரண்டெனற் சிவசத்தியாகும் (சிவம் ஆண்,
  விந்து; சத்தி பெண், நாதம்)
சாவகாசமிருந்தாற் சாதுக்களைத்தரிசனைசெய்
சாந்திகோலைச் சதுராய்ப்பிடி
சிவாயமென்றவக்ஷரம் சிவனிருக்கு யக்ஷரம்
  உபாயமென்றறிந்தோர்க்கு வுள்ளிருக்குயக்ஷரம்
சித்தத்தினுள்ளே சிவலிங்கங்காண்
சிவமுஞ்சத்தியுந் தெளிவிலொன்றே
சிந்தையடக்கினவரே சீவன்முத்தர்
சிந்தனைபுறமே செல்லிற் றுயரமாம்
சிவன்வேறென்றெண்ணிச் சிந்தைகலங்காதே
  சிவமென்ற நீயே சிவம்
சிவாயநமவென சிந்தனைசெய். சித்தமே சத்தசிவம்

சிவபெருமானைச் செம்பொனம்பலவனை
நினைமின் மனனே நினைமின்மனனே
சிவத்தைப்பேணிற்றவத்திற்கழகு
சீவகாருண்ணியஞ் சிறந்தபுட்பம்
சும்மாயிருக்கச் சுகமுதயமாகும்
சும்மாவிருவென்ற சூத்திரத்தை நன்கறிந்தால்
அம்மாபொருளிதென அடைய விழுங்குவான்
செல்வமென்பது சிந்தையுண்ணிறைவே
செஞ்சரணத்தானைச் செவ்வனே சிந்தனைச்செய்
செம்மதிப்பாலுண்டு சீராயிருக்க
எட்டாத பேரின்ப மெளிதில் விழுங்கும்
சோகம்பாவனை செகுசாய்செய்
ஞானிக்கில்லை யின்பமுந் துன்பமும்
ஞானிக்குப்பிறவி நண்ணுதென்பது திண்ணம்
ஞானபூமியை நண்ணனலமே
ஞானியின் பெருமைபோல் ஞாலத்திலில்லை
ஞானகுருவை நன்றுய்ப்பணி
தன்னையறிதலே சாத்திரத்தின் பலன்
தற்போதம்போனவிடந் தற்பரமாகும்
தவத்துக்கொருவர் வித்தைக்கிருவர்
தன்னைமறப்பது தவத்திற்கழகு

தன்னிற்றன்னை யறிந்தவன் றலைவனாவன்
தனித்தவிடத்திற் சமாதிசெய்
தனித்தவிடத்திற் றறிபோலிருப்பதே சமாதி
தனித்திரு-பசித்திரு - விழித்திரு சுகித்திரு
தானுயிருத்தலே தன்னையறிதலாம்
தாயுடன்சென்றுநீ தாதையைக்கூடிப்பின்
தாயை மறத்தல்தானே நிஷ்டை
திருவடிஞானஞ் சிவமாக்குவிக்கும்
துட்டர்க்கு ஞானங் கிட்டாது திண்ணம்
துறவிபோனடிப்பவர் தூர்த்தராவர்
தூங்காமற்றூங்கலே துக்கநிவர்த்தி
தொண்ணூற்றறுவரையுந் துரிசறச்சுடு
நல்லாரைச்சேர்ந்தொழுகி நல்லறிவைநாடு
நடுவைநாடி நன்றாயிரு
நன்மைக்கடைப்பிடித்து நன்றாய்வாழ்
நாதவிந்துவே நற்றாய்தந்தையர்
நாட்டமிரண்டு நடுநாசியில்வை
நாதாந்தயோகமே நஞ்சுண்டகண்டன்
நாராயணாய நமவோமெனநாடு
நானோ நீயோ நன்றும் பரமனா
தானோ வென்றுணர்ந்து தவத்தைமுடி

நாட்டுக்கா லிரண்டும் விட்டு நடுவுக்காலூடேபோய்
ஆட்டுக்கா லிரண்டி னுள்ளே யமர்ந்திரு
நிர்க்குணபூசையே நிஷ்காமபூசை
நிஷ்காமபூசையே நிஜபூசையாகும்
நினைவொன்று நினையாமனிற்பதகம்
நித்திரையு ம்நினைப்பும் நீத்தலேவருணிலை
நின்றநிலைபேராமல் நினைவிலொன் றும்வாராமல்
சென்றநிலை முத்தியென்று சேர்
நேசமோபெர்பரத்து னிற்பதுஞான நிட்டை
பறைபரும்முத்திக்கு பாரமார்த்தயுக்த்தர்
பகிர்முகவாட்டம் பங்கப்படுத்தும்
பற்றற்றான்பற்றினைப் பற்றலே பரமவின்பம்
பகவற்கீதை பாராயணஞ்செய்
பலவிடத்தே மனதைப்பாய விடாது
நிலவரையினூடே போய் நேர்படு
பரப்பற்றிருப்பதே பரமானந்தம்
பகிர்முகப்பூசை பரமார்த்தமன்று
பாவனைபுரிந்தாற் பலமொழியாது
பாவனாதீதம் பதிந்தால்வீடே
பாவனைபழுத்தா லொழித்துவிடு

பாவனுந் தம்படியாவிடத்
தேகபாவனை யெஞ்ஞான்றுஞ்செய்
பாசஞானம் பரனையறியா
பிறவியறுதலே அருமையாம் பொருள்
பிறந்தவர்பெறும் பயன்பேரின்பவீடே
புணர்ந்தபாவமெலாம்பரிபூரண
முணர்ந்த ஞானியின் விழிபடவோடுமே
பொய்மையைத்தள்ளி மெய்மையைத் தழுவு
பொன்னொடு வெள்ளிபொருந்தின்
பொன்னவன்றுளதுவே போற்று
போகமாதரைப் போற்றுதலொழிந்து
வகநாத னிணை யடி யிறைஞ்சுமின்
மறைப்பொருள் காணின் மனத்துடிப்படங்கும்
மக்கட்பிறப்பாய் வருதலரிது
மண் பெண் ணாசை மறத்தல் மாண்பே
மன் மனமாட்டை மடக்கிமேய்
மலையிலக்கே மாமொழியாகும்
மதி ரவி கூடின் மனமடங்கும்
மனதையடக்க மனந்துணையாகும்
மந்திரமாவது தந்திரமாகும்
மன் மனத்துள்ளே மனோலயமாகும்

மாதர்போகம் மாளாத்துயரம்
மும்மலமொழிப்பதே முத்திக்கிடமாம்
முத்திக்கேது பத்தியாகும்
முன்னேயோகம் முயலல்வேண்டும்
மும்மலமொழித்தலே முப்புரமழித்தல்
முத்தியிலும் மும்முதலு முண்டெனல்வீணே
மெய்ஞ்ஞானமின்றி வீடதுபெறார்
வாக்கிறந்துநின்ற மவுனமது கிட்டினாற்
றாக்கிறந்த தற்சுட்டு சார்தற்கிடமாம்
விருப்புவெறுப்பற்றால் வேதனைமாற்றும்
விந்தைக்கட்டின் சிந்தையடங்கும்
விக்கிரகாராதனை முற்றிலும் வீணே
வெட்டவெளியே வேதாந்தமென்பர்
வேதமுடியறிந்த வேதியரைக்கூட
பேதநிலை யெல்லாம் பிரி

ஞானசாதகரொழுக்கம் முக்கியமானவை

முற்றிற்று.



ஓம்.

# பிரஹ்மா ஞானவிளக்கம்.



ஓம் * அ † உ ‡ ம - ஓம். அ - ஆண், சிவாம்சமாகிய வெண்ணிறமுள்ள விந்துவும்; உ - பெண், சத்தியாம்சமாகிய இரத்தநிறமுள்ள நாதமும்; ம - மகவு, அக்கினி யாம்சமாகிய சோதி சொரூப முள்ள குழவியுமாகிய விம் மூன்றுஞ் சேர்ந்து, ஓங்காரமும் அ - உ - ம எனும் பிரணவமாகி ஓங்குதலாயிற்று.

அப்பிரணவத்திலிருந்து நகரமாகிய நிலமும், மகரமாகிய நீருங், சிகரமாகிய தீயும்,

* அ என்பது உதட்டினிதழைத் திறப்பதாகும்.

† உ என்பது உதட்டினிதழைக் குவிப்பதாகும்.

‡ ம என்பது மேற் படியிதழை மூடித்திறப்பதாகும்.

இவைகளைத்தான் முறையே ரேசகம் பூரகம் கும்பகமென்பர் பெரியார்.

வகரமாகிய காற்றும், யகரமாகிய ஆகாசமும் சேர்ந்து ந ம சி வ ய வென்றுற்பத்தியாயின.

ஓம் = ஸ்தூல தேகத்தின் அரிய பெரியநாடி, ஆத்ம ஸொரூபம்; ந-ம = பெண் - நிலம், நீர், செய்புனல், சுரோணிதம், மாயாசொரூபம்; சிவ - ஆண், தீ, காற்று, வெண்புனல், விந்து, சிவசொரூபம்; ய = ஆன்மா, ஆகாயம், வெட்ட வெளி சொரூபம். இதற்கிணங்க,

திருமந்திரம்.

தரணி சலங்கனற் காற்றத்த வான
மரணிய பானு வருந்திங்க ளங்கி
மூரணிய தாரகை முன்னிய வொன்பான்
பிரணவ மாகும் பெருநெறி தானே.

இந்த பஞ்சாக்ஷரமானது ஸ்தூலதேகத்தில் சூக்குமமாய் சர்வசக்திகளையும் தம்முள் அடக்கி வைத்துக் கொண்டு பிரகாசிக்கின்றனவாதலால் முதலில் ஓம் என்றும், பின்

னர் ந ம சி-வ என்றும் பிறகு ய என்னும் இவ்விராஜ * மந்திரத்தை வாக்கினால் † ஜபிக்கக்கூடாமையினால் அதனதன் ஸொரூபங்களைக்கரநியாசம் (கைக்கிரியை) எனும் ‡ தந்திரத்தினால் தரிசிக்கவேண்டும்.

## தேவாரம்.

கொங்கலர் வன்மதன் வாளியைந்தகத்
தங்குள பூதமு மஞ்சவைம் பொழில்
தங்கரவின்பட மஞ்சுந்தம்முடை
யங்கையிலைவிர லஞ்செழுத்துமே.

அக்ஷரமென்பது எழுத்துமன்று எண்ணுமன்று சொரூபமாம். இந்த பஞ்சஸொரூபத்தைத் தரிசிக்க ஞானகர்ம்மா வேறுபட்டிருக்கின்றது. இதற்கு ஒரு மொழியு மெனலாம்.

---

* மந்திரம்-நிலை பெற்ற மனத்தின் இடம்.

† ஜபித்தல் - ஸ்தூலத்திலிருந்து மேற்சொன்ன பஞ்ச சொரூபங்களை வெளிப்படுத்துதலே யாம்.

‡ தந்திரம் நிலை பெற்ற தம் இடம்.

இவ்வொரு மொழியினால் ஓங்காரத்துடன் கூடிய பஞ்சபூதங்களை அல்லது பஞ்சசொரூபங்களைத்தரிசித்து ஆறு ஆதாரங்களையுங் கடந்து, துவாதசாந்தப் பெருவெளியையடைந்தாங்கு சதாவசைந்துக் கொண்டிருக்குந் தீபச்சுடர் முனையைத் திடப் பார்வையினா லசையாது நிறுத்தி நிற்பதுவே தவமாகும்.

திருமந்திரம்.

விளக்கினை யேற்றி வெளியை யறிமின்
விளக்கினின் முன்னே வேதனை மாறும்
விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள்
விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே.

கரந்துங் கரந்திலன் கண்ணுக்குத் தோன்றான்
பரந்த சடையன் பசும்பொன் னிறத்தன்
அருந்தவர்க் கல்லா லணுகலு மாகான்
விரைந்து தொழப்படும் வெண்மதி யானே.

இத்தவத்தின் முதிர்ச்சியடைந்த ஞான சாதகருக்கு உலகமானது அநித்தியமாகவும்

தன்னெதார்த்த சொரூபமே எங்கணும் நித்தியமாக விளங்கவுங்காண்பர்.

## ஞானவாசிட்டம்

மெல்லிதாகிக் குளப்படியாய்
விவேகப்புந்திக் காமூலகு
மல்லவாகிக் கரைகாணு
வாழமாகு மதியில்லோர்க்
கெல்லையிலதா லறிபொருளா
லெண்ணப்படாதாய்ச்சாந்தமுமாய்ச்
சொல்லுமெல்லாமாய் நினைவு
தோன்றாச்சற் சிற்சுகமுண்டாம்.

அன்றியுந்தேகத்தில் சூக்குமமாய்ப் பிரகாசியாநின்ற ஓங்காரநாடியின் நடுபாகத்தில் இடைகலையாகிய அபானனாடியும் பிங்கலையாகிய பிராணனாடியும் கீழும் மேலுமாகச் சஞ்சரித்துக்கொண்டு சீதளத் தன்மையையும் வெப்பத்தன்மையையும் தருகின்றன. இவ்விரண்டு நாடிகளையும் பிரணவத்தினுச்சியா

கிய சுழிமுனையில் சேர்த்துவிட்டால் மேற்கூறிய சுடரானது பிரகாசிக்கும்.

ஞானவாசிட்டம்.

ஓதுமளவிலறிந்திருந்து
முயிர் நோக்கென நீயுரைசெய்த
தேதுபகலென்றலும் புசுண்ட
னிசைக்கு நீவிங்கெதிர்காணும்
பூதவுடலா மனைநடுவே
பொருந்துமிதய புண்டரிகச்
சீதமலரினுள்ளிரண்டு
செறியும் பிராண னபானனென.

விராவிவருபுறநின்றுமபான னென்னும்
வியன்மதியமேனியெல்லாங் குளிரவிக்கும்
பிராணனெனுஞ் சூரியன்முன் கனலாயுள்ளே
பேசிய விவ்வுடற்பாகம் பிறக்கபண்ணு
மிராதுழலுமபான னெனு
மதியினுட் சேரியற்கலைகள்
பிராணனெனு மிரவியாலே
யுராவி விழுங்கப்பட்ட தெங்கேயந்த
வுயர்பதமுற்றுற் பின்னையொருநோயுண்டோ.

## சிவயோகம்.

சிவோஹம், ஸோஹம், ஓம் இவை ஒரு பொருட்கிளவி. யோகமென்பது விந்துவாகிய சிவத்தையும், நாதமாகிய சத்தியையும் புருவ நடுவில் திடப்பார்வையினு லொருங்கு சேர்த்து ஓங்காரமாகிய பொருளை, அஃதாவது குண்டலியை யெழுப்பி, ரேசகம் பூரகம் கும்பகங்களாகச் செய்வதாகும்.

### திருமந்திரம்

விந்துவு நாதமு மேருவி லோங்கிடிற்
சந்தியி லான சமாதியிற் கூடிடும்
அந்த மிலாத வறிவி னருட்பொருள்
சுந்தரச் சோதியுந் தோன்றிடுந் தானே.

ரேசகம்:—சூரியனையும் சந்திரனையும் ஒன்றுகக் கலக்கவைத்தல், அஃதே அமாவாசை, அமரபக்ஷம், அல்லது சூனியம், கிருஷ்ண பக்ஷம், தேய்பிறை.

### ஒளவைக்குறள்.

தோற்றுங் கதிரவ னுண்மதி புக்கிடில்
சாற்று மமாவாசை தான்.

உதிக்கு மதியமுங் கண்டங் குறங்கில்
மதிக்கு மமாவாசை யாம்.

பூரகம்:—மேற்கூறிய விரண்டையும் பூரிக்கச்செய்தல்! அஃதே பூர்வபக்ஷம், சுக்கில பக்ஷம் அல்லது வளர்பிறை என்பன.

கும்பகம்:— பிராணவாயுவையும் அபான வாயுவையும் பிரணவத்தின் உந்திக்கமலத்தி லடைத்து விடுதல். அஃதே பௌர்ணமி.

ஔவைக்குறள்.

ஏறு மதிய மிரங்கி லுறங்கிடும்
கூறுமப் பூரணை கொள்.

மதிக்குட் கதிரவன் வந்தங் கொடுங்கில்
உதிக்குமாம் பூரணைச் சொல்.

அமாவாசை பூரணை யாகு மவர்க்குச்
சமனு முயிருடம்பு தான்

ஸ்தூலதேகத்தில் பிரகாசியா நின்ற பிராணன், அபானன் எனும் இரண்டு வாயுக்கள் மேலுங் கீழுமாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றன. சூரியன் கிழக்கேஉதித்து சுடர் குறைந்து மேற்கே அஸ்தமித்தலையும், சந்தி

ரன்மேற்கே உதித்து கிழக்கே பெருகித்தேய் தலையுமே கீழும் மேலுமாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றனவென்பன.

இவைகளை மேற்கூறப்பட்ட பகிர்முகரேசக பூரக கும்பகங்கள் செய்து வாணளை வீணாக்காமல் உண்முகரேசகம், உட்பூரகம், உட்கும்பகங்கள் செய்ய வேண்டும். இதனால்.

ஔவைக்குறள்.

அண்டத்திலு மிந்த வாறென் றறிந்திடு
பிண்டத்திலு மதுவே பேசு.

இதை மேற்கூறப்பட்ட பகிர்முக ரேசக பூரக கும்பகங்களினால் உண்முக ரேசக பூரக கும்பகங்கள் செய்ய வேண்டும். பகிர் முக ரேசகம் பூரக கும்பகங்கள் பழகினாலொழிய உண்முக ரேசக உட்பூரக உட்கும்பகங்கள் செய்ய சாத்தியப்படா.

பகிர்முக ரேசக் பூரக கும்பகங் களுக்கு முறையே ஐம்-கிலிம்-சௌம்-மந்திர ரூபக மாக மறைத்துக் கூறப்பட்டிருக்கின்றன

இந்த யோகத்தை யப்பியசிக்குங்கால் பிராணவத்தின் உச்சியாகிய தலையைக் கோணாமல் புருவ மையத்தின் மேற்பாகத்தில் நேர்நிறுத்துவதே தாராசு முனையாம்.

## ஔவைக்குறள்

இரேசக பூரக கும்பக மாற்றில்
தராசுபோ னிற்குந் தலை.
இரேசிப்பது போலப் பூரித்து நிற்கில்
தராசுமுனை நாக்கதுவே யாம்.

ரேசகம் 32 - மாத்திரையளவாகவும், பூரகம் 16 - மாத்திரை யளவாகவும் கும்பகம் 64-மாத்திரையளவாகவும் செய்துப் பழகல் வேண்டும். கண்ணிமைப் பொழுதும் கைந்நொடிப் பொழுதும் மாத்திரைகளாவாம்.

## ஔவைக்குறள்

இரேசக முப்பத் திரண்டது மாத்திரை
பூரகம் பத்தாறு புகும்.
கும்பக நாலோ டறுபது மாத்திரை
தம்பித் திடுவது தான்.

முன்ன மிரேசி முயலுபின் பூரகம்
பின்னது கும்பம் பிடி.

உள் ரேசகம் உட்பூரகம் உட்கும்பகங் களுக்கு மாத்திரையளவே கிடையா.

மூக்குமுனை யென்பது வேலாயுதத்தைப் போல் பிரகாசிக்கின்ற பிரணவத்தின் மேன் முனையாகுமென மேதாவிகள் அறைவர்.

உந்திக்கமலமாவது மேற்கூறிய பிரணவத்தின் மத்தியபாகம். இதனையே ஹிருதயக் குகையென வியம்பின ரிமையோர்.

மூலாதாரமென்பது மேற்படி பிரணவத்தின் கீழ்பாகமெனக் கிளர்த்தினர்.

இம்மூன்றையும் அடி நடு முடியென வரைந்தனர் ஆன்றோர். இவ்வஸ்துக்கள் வெண்ணமாகப் பாராது நம்,மூக்கு முனையைப் பார்ப்பதனாலும் நம் உந்திக்கமலத்தை யுற்று நோக்குதலாலும், நம் நாபிக்கமலத்தை நாடுவதாலும் யாதுபயனைத்தரும்? தாராது. இப்பிரணவத்தின் முனையைப்பார்ப்பதன் பொருட்டே முன்னோர்கள் புருவ மையத்தை இலக்ஷி

யார்த்தமாகக் குறிப்பித்தார்கள். சுழிமுனை. பிரணவத்தினுச்சி.

திருமந்திரம்

* நெற்றிக்கு நேரே புருவத்திடை வெளி
யுற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரம னிருந்திடஞ்
சிற்றம் பலமென்று சேர்ந்துகொண் டேனே.

இதுவரையிற் கூறிய சாதனைகளை விடா முயற்சியாய் முதன் முதல் அப்பியசிக்கும் முறை யாதலால் முற்கூறலாயிற்று. இம் முதற் சாதனையை அப்பியசித்தபின்னர் தான் ஞானத்தை யடையமுடியும்.

பராங்கி முத்திரையினால் நாதத்தை யெழுப்பி யதன் முடியாகிய பன்னிரண்டங்குல வளவில் (அஃதாவது சாதகன் சிரசினுச்சியிலிருந்து பன்னிரண்டங்குல வுயரம்) மனதை நிறுத்தியதால் யெழும்பின அநாதத்

* எல்லாமாந்தர்க்கும் புருவத்தி னிடையே மூளையினகத்தே நடுவில் இவ்வருட்கண் அமர்ந்திருக்கின்றதென்பது திரண்ட பொருள்.

தொனி முடிவு பெறும். அத்துவாதசாந்தப் பெருவெளியில் மனம் அதனுடன் லயிக்கச் செய்து தினந்தோறும் பழகிவரின் சாதகர்க் கோரின்பமான வுணர்ச்சி யுண்டாகும். இச் சாதனை நிலைக்குத்தான் பராங்கி முத்திரை யென்று பெரியார் பகர்ந்தனர்.

## தாயுமானவர்

× × 'சத்தமற மோனநிலை பெற்றவர்களுய் வர்காண் சனகாதி துணிவிதன்றோ' × × × × என்று கூறியிருப்பதையுங்காண்க.

## திருமந்திரம்

சத்தமுஞ் சத்த மனமு மனக்கருத்
தொத்தறி கின்ற விடமு மறிகிலர்
மெய்த்தறி கின்ற விடமறி வாளர்க்கு
அத்த னிருப்பிட மவ்விடந் தானே

நாத முடிவிலே நல்லா னிருப்பது
நாத முடிவிலே நல்யோக மிருப்பது
நாத முடிவிலே நாட்ட மிருப்பது
நாத முடிவிலே நஞ்சுண்ட கண்டனே.

இடப்புரிச்சங்கு வலம்புரிச்சங்கு என்றி ரண்டு வகைப்படும். அவை யிரண்டு செவிக ளையுங்குறிக்கும். அவைகளி லொன்றாகிய வலம்புரிச்சங்கைத்தான் சாதகர் ஊதவே ண்டும். (ஊதல்=பழகல்.) அஃதெங்ஙனம் எனில், மனதை இந்திரியவழி பலவிடத் துஞ் செல்லவிடாத் தடுத்து வலதுசெவியி லேயே திடமாக நிறுத்தின் சில நிமிடங்க ளுக்குப்பின் னொருவிதமான சத்த மெழும் பும் அச் சமயத்தில் உடனே மேற் கூறிய விடத்தில் மனதை நிறுத்தலே யோகமாம்.

இப்பாவஸ்துவைக் காணும் பொருட்டே தான் முன்யோகத்தை யப்பியசித்து அதன் வாயிலாய் முடிவில் ஞானமடைய வேண்டும்.

தாயுமானவர் பாடல்

யோகியர்க்கே ஞான மொழுங்காம்பே ரன்பான
தாகியருட்யோகமுன்னே சார்ந்தோர் பராபரமே.

ஆகினும் தவத்தையும் யோகத்தையும் சாதகர் செய்தலினாலேயே திருப்தியடைந்து களிப்புற்று அம்மட்டில் நின்று விட்டால்

ஞானம் சித்தியாகாது. சரியை கிரியை யோகம் இம்மூன்றுஞ் ஞானமடையசாதனங்களே தவிரவேறன்று.

## பிரபுலிங்கலீலை.

உரைசெயிற் பரமஞான
மொன்றுமே முத்திக்கேது
சரியை நற்கிரியை யோகந்
தாமொரு மூன்றுஞான
மருவுதற்கேது வென்று
மறைபுகன் றுரைக்குமிந்தக்
கருவியைப் பொருளென்றெண்ணிக்
களிப்பவர் கயவரன்றே.

## திருமந்திரம்.

எண்ணாயிரத்தாண்டு யோக மிருக்கினுங்
கண்ணாரமுதனைக் கண்டறிவா ரில்லை
உண்ணாடி யுள்ளே யொளிபெற நோக்கிற்
கண்ணாடி போலே கலந்திருந்தானே.

## ஞானம்

ஞானமெனபதியாது? சத்து, சித்து இவ்விரண்டு மொன்று சேர ஆனந்தம் ஜனித்த

சச்சிதானந்தம் எனப் பெயர் பெற்ற நிலையே யாகும்.

அச்சச்சிதானந்த நிலையிலிருந்து பழகிவருஞ் சாதகர் எவ்விடத்தும் எப்பொருளினிடத்தும் பிரஹ்மம் பிரகாசிப்பதை தரிசிப்பர். இப்பிரஹ்ம வஸ்துவைத்தான் அணுவென்று அறிஞரறைவர். அவ்வணு வொன்றை யாயிரங் கூறிட்டு அதிலொரு கூறுக்குச் சமானமாகவும் பிரகாசத்திற் கெல்லாம் அதீதப் பிரகாசமாகவும் நம்முடலி லிருந்து பிரகாசித்துக் கொண்டிருக்கும் வஸ்து எதுவோ அஃதே பரமாணுவாகும்.

## திருமந்திரம்

அணுவி லணுவினை யாதிப் பிரானை
அணுவி லணுவினை யாயிரங் கூறிட்
டணுவி லணுவை யணுகவல் லார்கட்
கணுவி லணுவை யணுகலு மாமே

அணுவு ளவனு மவனு ளணுவும்
கணுவற நின்ற கலப்ப துணரார்

யிணையிலி யீச னவனெங்கு மாகித்
தணிவற நின்றான் சராசரந் தானே.

ஞானவாசிட்டம்

என்னதுடலிற்சிற்கதிரா யிலங்குதெய்வமானெ
ன்ன, வுன்னுமனங்கண்வாக்குக்களுடைய சத்தித்
திரளெல்லாம், பின்னமின்றிநாயகனைப் பிரியாமக
ளிர்போனளுங், துன்றுமென்றேயனவரதந்தொடர்
பாவனை செய்திடல்வேண்டும்.

இச்சிற் கதிரினிடத்துஉலகமும், உலகத்தி
னிடத்து பிரஹ்மமும் ஒன்றிற் கொன்று பிரி
யாது நிலை பெற்றிருக்கும். இது பற்றியே
ஞானிகள் உலகத்தை பிரஹ்ம மயமென்று
சொல்லுவார்கள்.

ஞானவாசிட்டம்

செவ்விதாங் கல்லில் வனசமுஞ்
சங்கமுத் திகிரியுமெனுங் கீற்று
வவ்வுகின்றதோர்சுழுத்தியாமவத்தையாய்
மறுவுறுமதுபோலத்
தவ்வில் சித்தினுளுலகங்கண்முழுவதும்
தங்குமால் வேறன்றி

வெவ்விடத்திலியாதெப்படி யிருந்ததவ்
விடத்தினப்படி யென்ப.

இப்பிரஹ்மத்தை தரிசிக்குங்கால் தன்னை
யும் உலகத்தையும் மறைத்ததுவாக நிற்கும்.

## தாயுமானவர் ஆனந்தக்களிப்பு

பேசா விடும்பைகள் பேசிச்-சுத்தப்
பேயங்க மாகிப் பிதற்றித் திரிந்தேன்
ஆசா பிசாசைத் துரத்தி - ஐய
னடியிணைக் கீழே யடக்கிக்கொண்டாண்டி
சங்கர சங்கர சம்பு.

## மத்தியகதம்

இந்நிலையையே பிரஹ்ம ஐக்கியமென்றும், மத்தியகதம் என்றும், நடுவு நிலை யென்றும், சகல கேவலங்க ளென்றும், சாந்தி தாந்தி யென்றும், சும்மாயிருத்தல் என்றும், பிரஹ் மாநு சந்தானமென்றும், இராப்பகலற்றவிட மென்றும்,ஞாஞுஞ் ஞானரகிதநிலையென்றும், பாவா பாவ ரகிதஸ்தானமென்றும்,நினைவிற ந்து நின்றவிட மென்றும், நனவிற் சுழுத்தி

யென்றும், நினைப்பும் மறப்பு மற்ற மத்திய
கதமாயிருத்தலின் அதிற்றான் தனது நிஜவடி
வம் விளங்கும்.

## ஞானவாசிட்டம்

சொரூபம் விட்டகலின் மோகமாம் வேறு
சொல்லிட முன்புபின் பில்லை
யொருபொரு ணினைவை யொழிந்துமே லப்பா
லொருபொரு ணினைவுறி னந்த
விருபொரு ளையு ணினைவற விருக்கு
மிதுசொரு பத்தியல் பிதுதான்
மருவுகற் பனைமாண் டசைவில்கற் பேனாய்
வருஞாச் சுழுத்தி தீர்வடிவாம்.

## வள்ளலார்

ஒருபொருளை நீத்தங் கொருபொருளைப் பற்றி
யிருபொருளும் போக்கி யிடையே-யொருபொருளு
மற்றநிலையேதோ வஃ துன்னிலை யென்றான்
குற்றமற்ற ஞான குரு.

## திருமந்திரம்

நடுவுநின் றார்க்கன்றி ஞானமு மில்லை
நடுவுநின் றார்க்கு நரகமு மில்லை

நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர்
நடுவுநின் றார்வழி நானுநின் றேனே.

நாம ரூப வடிவப்பிரபஞ்சம் நமது சங்கற்பத்தை விட்டிருக்கின்ற விடமே மத்தியகதமென்கிற நனவிற் சுழுத்தி நிலையாகும். சங்கற்ப முள்ளபோது உலகந்தோன்றி அஃதின்றியபோது உலகந்தோன்றாது பிரஹ்மம் தோன்றும். சகலம் = நினைப்பு, சாக்கிரம், சொப்பனம். கேவலம் = மறப்பு, சுழுப்தி.) சங்கற்பத்தைவிட வுலகமில்லை, நம்மைவிட்டுச் சங்கற்பமுமில்லை. நாமே யாவுமாயும் அல்லவாயும் இருக்கின்றோமென்பதும் இதனால் ஏற்பட்டது. சங்கற்பம் நம்மிடத்திலிருந்தெழுகின்றதனால் அதை விட்டிருத்தற்கு மார்க்கமுமில்லை. சங்கற்ப மெழுமிடத்தையே உற்றுற்றூன்றிப் பார்த்தங்கேயே அதைவதைத்தால் சங்கற்பமெழாது. சங்கற்ப மென்பதே நினைப்பு. நினைப்பு மெழுமிடத்து மறப்பெழா. நினைப்பு மறப்பற்ற நிலையானதே மத்தியகத மென்றறி. அந்நிலையில் சங்கற்ப விகற்பங்களற்று நானாகவே

விளங்கும். ஆங்கு கர்த்தவ்வியமுந் தோன்று. அப்படி அந்த மத்திய கதத்தி லிருப்புழி சுட்டிறந்த சுகாதீத வடிவாய் விளங்கி வாழ்வாய்.

அவிரோதவுந்தியார்

பதைத் தெழாதுள்ளம் பதைப்பாய் பதைக்கில்
வதைப்பாயங்கங்கே யென்றுந்தீபற
மாயுமனப்பே யென்றுந்தீபற.

ஞானவாசிட்டம்

எந்தவெந்தவாதனைகளிதயத் தெழுந்தவவையெல்லா
மந்தவந்த விடத்தழிக்கினதுவே மாயைக் கழிவாகு
முந்துபோகமோகமென மொழியுமிருவாதனைவிட்டு
வந்தபாவாபாவமறமாற்றி விகற்பமறவாழ்வாய்.

அவிரோதவுந்தியார்

ஆங்கறியாமையுஞ் சாராதறிவொடுந்
தூங்குவாய் நாளுமென் றுந்தீபற
தோன்றும் பரம்பொருளுந் தீபற.

திருமந்திரம்

பொங்கு மிருணீக்கும் புண்ணியக் கூத்தனை
யெங்குமாய் நின்றோடு மேகம்பக் கூத்தனை

கங்குல் பகலினுங்காணாத கூத்தனை
யிங்கெனி மாக யான் கண்ட வாறே

## கந்தரநுபூதி

ஆறு வமுதே மயில்வேல ரசே
ஞானா கரனே நவிலத் தகுமோ
யானா கியவென் னைவிழுங் கிவெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே.



வாழ்கவே வாழ்கவென் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத்தான் பதம்
வாழ்கவே வாழ்க மெய்ஞ்ஞானத் தவன்றாள்
வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே.

ஓம் தத் சத்

பிரஹ்மானு விளக்கம் பெறுவாயாக.

பிரஹ்மானு விளக்கம்
முற்றிற்று.